# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Saturday, the 29th March 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Conference of the Officials of the Food Department*

* 452 *Q.*—SRI P. G. MANICKAM: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the decisions reached at the Conference of the Officials of the Food Department held in December 1957 in regard to the food situation; and

(*b*) the steps taken to implement them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) & (*b*) A statement [a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM**: மேஜையின்மீது வைக்கப்பட்டிருக்கிற குறிப்புக் காகிதத்தில் 50 சத விகிதம்தான் நமக்கு அம்மோனியம் சல்பேட் மத்திய அரசாங்கம் கொடுத்திருப்பதாக தெரிய வருகிறது. பாக்கி 50 சத விகிதத்தை இந்த அரசாங்கம் பெறுவதற்கு என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது என்பதை அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM**: இன்னும் நாம் இறக்கு மதியை அதிகப்படுத்தும்படியாக இருக்கிறது. அதற்கு வேண்டிய அந்நிய செலாவணி நம்மிடம் இல்லாமல் இருப்பதால் அதை அதிகப்படுத்திக் கொண்டு இன்னும் அதிகப்படியான அம்மோனியம் சல்பேட் வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யவேண்டியதாக இருக்கிறது. அதற்கு வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்து கொள்ளப்பட்டு வருகிறது. அதன் பிறகு நமக்கு அதிகப்படியாக வேண்டிய அம்மோனியம் சல்பேட்டைக் கொடுக்கிறோம் என்று சொல்லியிருக்கிறார்கள்.

*Food situation*

* 453 *Q.*—SRI S. LAZAR: Will the Hon. the Minister for Home be pleased to lay on the Table of the House a statement about the food position with special reference to—

(i) the expected yield of foodgrains during the year 1958;

(ii) the probable requirements of foodgrains for the State during 1958; and

(iii) supplies expected from the Centre?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: A statement [b] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix I on pages 282–284 infra.

[b] Printed as Appendix II on pages 284–287 infra.

SRI N. K. PALANISAMI : 1958-ம் வருஷம் நமக்கு எந்த விதமான அரிசி சப்ளையும் மத்திய அரசாங்கத்திலிருந்து இல்லை என்று சொல்லப்படுகிறது. இப்பொழுது விலை உயர்ந்துகொண்டு போகும் சமயத்தில் இன்னும் அதிகப்படியான நியாய விலைக்கடைகளைத் திறப்பதற்கு இந்த அரசாங்கம் முன் வருமா? அதற்கு வேண்டிய முயற்சி எடுக்குமா என்பதையும் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தற்போதுள்ள நிலைமைப்படி வரும் ஏப்ரல் மாதம் முதல் தேதி முதற்கொண்டு நியாய விலைக் கடைகள் அவசியம் இல்லை என்று கருதி அரசாங்கம் அவைகளை எடுத்து விட உத்தேசித்திருக்கிறது. திடீர் நிலைமை ஏதாவது ஜில்லாக்களில் ஏற்பட்டால், அதைப்பற்றி பரிசீலனை செய்து அதற்குப் பிறகு அதிகப்படியான கடைகள் அவசியம் என்று தோன்றினால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அரசாங்கம் செய்யும்.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், கைத்தறி நெசவாளர்களுடைய நிலைமை மோசமாக இருக்கிறது என்பது சர்க்காருக்கும் மற்றும் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். ஆகவே இப்படிப்பட்ட கைத்தறி நெசவாளர்கள் இருக்கக்கூடிய பகுதிகளில் நியாய விலைக்கடைகளை . . .

MR. SPEAKER : இந்தக் கேள்வியை அடுத்தக் கேள்வியில் கேட்க வேண்டும்.

SRI A. VEDARATHNAM : இந்த நியாய விலைக்கடைகளில் கோதுமை போன்ற இதர மில்லட் தானியங்களைக் கொடுக்கும்படியாக அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாய விலைக்கடைகள் ஏப்ரல் மாதம் முதல் தேதி முதற்கொண்டு தொடர்ந்து நடக்கும். ஆனால் அங்கே அரிசி இருக்காது. கோதுமையை அங்கே விற்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : 1958-ம் ஆண்டில் ஒரு சமயம் அரிசி விலை அதிகமாகி நியாயவிலைக் கடைகளைத் திறப்பதற்கு அவசியம் ஏற்பட்டால் அப்படி திறப்பதற்கு இந்த அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவார்களா? அப்பொழுது மத்திய அரசாங்கத்தைக் கேட்டால் அப்பொழுது அவர்கள் நமக்கு அரிசி கொடுக்க தயாராக இருப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது இந்த அரசாங்கம் அரிசியோ, நெல்லோ வாங்குவதாக இல்லை. அரசாங்கம் அரிசியை வாங்கினால் விலை அதிகமாகும் என்று கருதுகிறது. நியாய விலைக்கடைகளை ஆரம்பிக்க வேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டால் அப்பொழுது மத்திய அரசாங்கத்தினிடமிருந்து வாங்கிக்கொள்ளலாம்.

SRI P. G. MANICKAM : கிராமங்களில் கோதுமை சௌகர்யமாக கிடைப்பதாக இல்லை. கிராமங்களிலும் கோதுமை கிடையாது. அதனால் கோதுமையை அங்கே விற்பனை செய்வதற்கு அரசாங்கம் ஏதாவது முறையை கையாளுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது கிராமங்களில் இருக்கக்கூடிய நியாய விலைக் கடைகளில் கோதுமை இருக்கிறது. இதுவரையில் விற்கப்பட்டு வந்ததுபோல் இனிமேலும் விற்கப்படும். அங்கே இதுவரையிலும் நியாய விலைக்கடைகளை வைத்து நடத்தியவர்கள் தொடர்ந்து நடத்த முன் வந்தால் அந்தக் கடைகளில் கோதுமை கிடைக்கும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI N. MARUDACHALAM : நியாய விலைக்கடைகள் தொடர்ந்து நடக்கும் என்று சொன்னார்கள். இப்பொழுது அந்தக் கடைகள் இல்லாத இடங்களில் நியாய விலைக்கடைகளை ஆரம்பிக்க ஏற்பாடு செய்வார்களா?

29th March 1958]

MR. SPEAKER : இந்தக் கேள்வியை அடுத்த கேள்வியில் கேட்க வேண்டும்.

SRI A. A. RASHEED : From the statement placed on the table of the House it is seen that our requirement is 31,45,000 tons and that our expected production is 31,57,000 tons. Does it mean that we will be producing more than our requirement, Sir?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. We will have to produce much more than our requirements because we must have more movement of rice from here to other States. Similarly we will have to import rice—like Nellore rice—also into the City. There should be free movement and therefore we must be able to produce much more than what we assess as our requirements. We should also guard against failure of monsoons.

*Fair price shops*

* 454 *Q.*—SRI K. RAMACHANDRAN (on behalf of Sri P. Veerappa Kounder) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of fair price shops at Tindivanam;

(*b*) whether there is any proposal to increase the number of such shops; and

(*c*) if so, when?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) 1 (one).

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

SRI N. MARUDACHALAM : ஸார், நியாய விலைக்கடைகள் இல்லாத இடங்களில் நியாய விலைக்கடைகளை திறப்பதற்கு இந்த அரசாங்கம் ஏற்பாடு செய்வர்களா? என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இனி எப்ரல் மாதம் முதல் தேதி முதற்கொண்டு நியாய விலைக்கடைகளில் அரிசி இருக்காது. கோதுமைதான் இருக்கும். ஆகவே கோதுமைக் கடைகள் வேறு எங்கே யாவது ஏற்படுத்த வேண்டும் என்று கேட்டால் அங்கே அதை புதியதாக ஏற்படுத்தலாம். ஆனுல் அரிசி கிடைக்காது.

SRI K. B. S. MANI : தஞ்சை போன்ற ஜில்லாக்களிலுள்ள மக்கள் புஞ்சை தானியங்களைச் சாப்பிடுவதற்கு தெரியாது. அவர்கள் அரிசியையே தான் சாப்பிட்டு வருகிறுர்கள். அவர்கள் இருக்கக்கூடிய ஜில்லாவில் இருக்கும் நியாய விலைக்கடைகளில் கோதுமையைக் கொண்டுவந்து விற் கப்போவதாகச் சொல்லப்படுகிறது. அதை அவர்களால் தாராளமாக வாங்கி சாப்பிடமுடியாது. கோதுமையை அவர்களுக்கு சமைக்கவும் தெரியாது. அந்த மாதிரியாக ஜில்லாக்களில் அரிசியைக் கொடுப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வட ஆற்காடு, சேலம் போன்ற ஜில்லாக்களுக்கே நியாய விலைக் கடைகள் தேவை இல்லை என்று சொன்னேன். தஞ்சை ஜில்லாவிலிருந்து வருகிற கனம் அங்கத்தினர் அங்கே இன்னும் நியாய விலைக்கடைகள் வேண்டும் என்று கேட்பது விசித்திரமாக இருக்கிறது. அங்கு அரிசி வேண்டுமென்ருல் தஞ்சை ஜில்லாவில் இருக்கக் கூடிய வேறு கடைகளில் வாங்கிக்கொள்ளலாம். வயலிலிருந்தும் அறுவடை செய்து கொள்ளலாம்.

SRI M. SELVARAJ : திண்டிவனம் போன்ற இடங்களில் அதிகப் படியான கைத்தறி நெசவாளர்கள் இருக்கக்கூடிய கிராமப் பகுதிகளிலும் கடைகள் இல்லாத நகரப் பகுதிகளிலும் நியாய விலைக்கடைகளை திறந்து நடத்துவதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : திண்டிவனத்தில் ஏற்கெனவே இருந்த நியாய விலைக்கடைகளை தொடர்ந்து நடத்தாமல் அவர்களே மூடிவிட்டார்கள். இப்பொழுதே இரண்டொரு கடைகள்தான் இருக்கிறது.

SRI V. K. KOTHANDARAMAN : அரிசி போதாததன் காரணமாக கோதுமையைச் சாப்பிடுவது நியாயம் என்று ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் குறைந்த விலையில் கோதுமை, கேழ்வரகு, கம்பு, சோளம் போன்றவைகளை குறைந்த விலைக்குக் கொடுத்தால் அதிகப்படியான ஜனங்கள் அதை வாங்கிச் சாப்பிட முன் வருவார்கள். அதன் காரணமாக அவைகளை குறைந்த விலைக்குக் கொடுக்க சர்க்கார் ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரிசி போதாது என்பதற்கு மட்டும் அல்ல. அரிசியை இப்பொழுது போதிய அளவு உற்பத்தி செய்து கொண்டுதான் வருகிறார்கள். இன்னும் அதிகப்படியாக உற்பத்தி செய்யவும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதிக சத்துள்ள உணவைக் கொடுக்கவேண்டும் என்பதற்காகவும், நம்முடைய உணவு பழக்கத்தை நல்ல வகையில் மாற்றிக்கொள்ளவேண்டும் என்பதற்காகவும் கோதுமையை உபயோகப்படுத்தவேண்டும் என்று சொல்லப் படுகிறது. இன்னும் கனம் அங்கத்தினருக்கு சொல்லிக்கொள்ளுகிறேன், அரிசிக்கு பதிலாக கோதுமையைச் சேர்த்துக் கொண்டு வந்தால் ஒரு படிக்கு இரண்டு அணா குறைகிறது.

SRI K. VINAYAKAM : திண்டிவனம், மற்ற இடங்களில் ஏற்கெனவே இருந்த நியாய விலைக்கடைகளில் கோதுமை குறைந்துபோவதற்குக் காரணம், கோதுமையும் அரிசியும் இரண்டும்.

MR. SPEAKER : The hon. Member must put the matter in the form of a question. He is making a statement.

SRI K. VINAYAKAM : It is parliamentary practice to put any question. Parenthetical questions have to be put so that the idea may be brought out.

MR. SPEAKER : Parliamentary practice, I take from May and not from Sri Vinayakam. I rule that the question is out of order.

SRI A. VEDARATHNAM : இனிமேல் நியாய விலைக்கடைகளில் கொடுக்கப்படும் கோதுமை நியாய விலைக்குக் கிடைக்குமா? அல்லது மார்க்கெட் ரேட்டுக்குத்தான் கிடைக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாய விலையில் கிடைக்கிற அரிசி விலையைவிட இரண்டு அணா குறைவாக இருக்கும் என்றும் சொன்னேன்.

SRI P. G. MANICKAM : ஸார், நியாய விலைக் கடைகள் இல்லாத கிராமங்களில் கோதுமையை மக்கள் வாங்கிச் சாப்பிடுவது எப்படி, அதை எப்படி பக்குவப்படுத்துவது என்பதையும் புரிந்துகொள்வதற்கும் தெரிந்துகொள்வதற்கும் என்ன முறைகளைச் சர்க்கார் கையாளப் போகிறார்கள். அதற்கு நடவடிக்கைகள் எடுக்க என்ன உத்தேசம் செய்து கொண்டிருக்கிறார்கள்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இனிமேல் ஏப்ரல் மாதம் முதல் தேதி முதற் கொண்டு நியாய விலைக்கடைகளில் அரிசி கிடைக்காது. அந்தக் கடைகளை தொடர்ந்து வைத்துக்கொண்டு நடத்த வேண்டும்

29th March 1958]

என்ற உத்தேசம் இருந்தால் அவர்கள் மூலம் கோதுமையைக் கொடுக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கிறது. இதைவிட கோதுமை கிடைக்கச் செய்வதற்கு இப்பொழுது அரசாங்கத்திற்கும் உத்தேசம் இல்லே.

SRI K. VINAYAKAM : Is it not a fact, Sir, that the number of fair price shops has decreased because wheat alone is supplied in these shops instead of rice also? If so is the Government aware of the fact that the price of rice has been going up only after stopping the supply of rice from these shops?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர்கள் சென்னையிலேயே இருக்கிறார்கள். சென்னையிலே நடைபெறுவது கூட அவர்களுக்கு தெரியவில்லை. அப்படியிருக்கும்பொழுது அவர்களுக்கு வெளியூரில் நடைபெறுவது தெரியாததுபற்றி எனக்கு ஆச்சரியம் இல்லை. இதுவரையில் எந்த நியாய விலைக் கடைகளிலும் அரிசி இல்லாமல் இல்லை. அரிசி ஓரளவுக்கு சப்ளை செய்யப்படுகிறது. அதற்குமேல் வேண்டுமானால் கோதுமை அளிக்கப்பட்டு வருகிறது.

SRI K. RAMACHANDRAN : நியாய விலைக் கடைகளில் 1-4-58-லிருந்து அரிசி கிடையாது என்று மந்திரி அவர்கள் சொல்லுகிறார்கள். நியாய விலைக் கடைகளில் கொடுக்கப்பட்ட அரிசியின் விலைக்கே ஓபன் மார்க்கட்டில் அரிசி கிடைக்கும்படி இருக்கிறதா ? அல்லது விலை குறைவாக இருக்கிறதா, அல்லது அதிகமாக இருக்கிறதா ? அப்படியானால் அதை கட்டுப்படுத்த சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏறக்குறைய விலையில் அதிக வித்தியாசம் இல்லை. நான் முன்பே சொன்னேன், வட ஆற்காடு, சேலம் ஜில்லாக்களிலேயே நியாய விலைக் கடைகளுக்கு அவசியம் இல்லை என்று. நான் சொன்னால் அதை தவறுதலாக அங்கத்தினர்கள் எடுத்துக் கொள்ளக்கூடாது. நியாயவிலைக் கடைகள் வேண்டுமென்று இந்த மன்றத்திலே கேட்கப்படுகின்றதேதவிர, வெளியிலே கேட்கப்படுவது இல்லை.

SRI K. ANBAZHAGAN : நியாய விலைக் கடைகள் மூலம் நல் உணவு அளிக்கப்படவேண்டும் என்ற கருத்தில் கோதுமையை பரப்புகின்ற அரசாங்கத்தார் கைக்குத்தல் அரிசி நல் உணவாக இருப்பதால், கைக்குத்தல் அரிசி கிடைக்குமாறு ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதை வாங்கி சாப்பிடுவதற்கு தயாராக இருந்தால், அதையும் கவனிக்கலாம்.

## *Food Production*

* 455 *Q.*—SRI T. S. RAMASWAMY PILLAI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether statistics are being collected regarding food production on districtwar basis; and

(*b*) if so, the figures for the last two years?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The particulars are furnished in the statement [a] placed on the table of the House.

---

[a] Printed as Appendix III on pages 288–289 infra.

SRI T. T. DANIEL : From the papers placed on the table of the House it is seen that we have produced in the year 1956–57 about 31 lakhs of tons of rice only. In view of the fact that the number of rice eaters is slowly increasing and also in view of the fact that people have begun to abandon more or less eating cholam and other cereals and in view of the fact that we may come to a stage when all people will be taking only rice in our State, will the Government be peased to state whether the target of increased production of rice under the Second Five-Year Plan has been fixed taking into consideration all these facts?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : As I have already pointed out some time back, the target of extra production of rice is 12·79 lakhs of tons under the Second Five-Year Plan. We have already increased the production considerably and we hope to reach the target by the end of the Second Five-Year Plan period. Therefore even if all the people should take to rice eating, I have every confidence that we would be able to meet the situation.

SRI M. SELVARAJ : மேஜையின் மீது வைத்திருக்கும் ரிபோர்டில் 1955–56–ம் ஆண்டை விட 1956–57–ல் தென் ஆற்காடு மாவட்டத்தில் 84,140 டன் குறைவாக உணவு உற்பத்தியாகியிருக்கிறது என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த ஆண்டில் பருவ நிலை சரியாக இல்லாத காரணத்தினால், இதற்காக வேண்டிய நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பருவ நிலை சரியாக இல்லாதது ஒன்று. சில சமயங்களில் அதிக மழை பெய்வதால்கூட அரிசி உற்பத்தி குறைகிறது. பூச்சிகளின் தொந்தரவினால் குறைகிறது. இதையெல்லாம் அப்போதைக்கப்போது சமாளிக்க வேண்டிருக்கிறது. இதிலே கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI T. T. DANIEL : Again from the papers placed on the table of the House we find that for the year 1955–56 in Kanyakumari district the total production of rice was 96,000 tons and in the year 1956–57 the quantity of rice produced is only 59,000 tons. May I know from the Hon. Minister why there is such a steep fall in production in the year 1956–57?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The hon. Member is quite sure, I suppose, that this Government are not responsible for the fall in production even if any Government should be held responsible. The hon. Member should be quite well aware that there was a very serious failure of the monsoon in that year and therefore there was reduced production.

SRI N. K. PALANISAMI : கனம் மந்திரி அவர்கள் சொன்னார்கள் நிலைமையை சமாளித்துவிடுவோம் என்று தென் ஆற்காடு போன்ற சில ஜில்லாக்கள் எப்பொழுதுமே ஆந்திராவிலிருந்து அரிசி சப்ளையை நம்பியிருக்கவேண்டிய காரணத்தினாலே. . . .

MR. SPEAKER : I must again tell the hon. Member he is going on giving an argument instead of putting the question. If hon. Members won't listen to me, I won't call them hereafter. When I have been repeatedly saying that hon. Members should only put questions, what is the point in the hon. Member putting forth an argument and answering it himself?

29th March 1958]

SRI N. K. PALANISAMI : ஆகவே, விலைவாசிகள் அதிகமாக இருப்பதினால், போக்குவரத்து வசதியை குறைந்த சார்ஜில் அதிகப்படுத்துவதற்கு மந்திரி அவர்கள் மத்திய சர்க்கார் மூலம் ஏதாவது நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதில் ஒன்றும் மத்திய சர்க்காரின் உதவி வேண்டியதில்லை. போக்குவரத்து வசதிகளெல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது. நான் முன்பு சொன்னது போல இன்னும் உற்பத்தி பெருகினால், விலை குறையும்.

SRI A. VEDARATHNAM : இந்த புள்ளி விவரங்களில் கொடுக்கப்பட்டிருப்பது அரிசியா, நெல்லா என்பதை தயவுசெய்து அறிவிக்க வேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது அரிசிதான்.

*Rice*

* 456 *Q.*—SRI K. RAMACHANDRAN : (on behalf of Sri S. B. Adityan) : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any communication has been received from the Union Food Ministry in the matter of reducing the consumption of rice in the State ; and

(*b*) the action taken thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The answer is in affirmative.

(*b*) The suggestions contained in the communication are under consideration of the Government. Meanwhile this Government have taken steps to ask the proprietors of hotels and other catering establishments to use more of wheat than rice preparations. Orders have also been issued to reduce rice portion of diet by one ounce to the labouring and non-labouring convicts of the " C " class confined in Central Jails, Salem and Cuddalore, as an experimental measure for a period of three months. Issue of 10 ounce of rice and 10 ounce of wheat per head per diem instead of 20 ounce of rice per head per diem to the inmates of the Aftercare Home for Males, Madras, as an experimental measure for a period of three months has also been ordered. The public have been requested through a Press Note to avoid wastage of food and to eat more of wheat, vegetables, fruits, etc., than rice. The Government have also ordered to issue through fair price shops wheat only and stop issue of rice from 1st March 1958.

SRI K. ANBAZHAGAN : அரிசியினுடைய தேவையை அல்லது அரிசியை மக்கள் பயன்படுத்துவதை குறைக்கவேண்டுமென்ற கருத்து தோன்றுவதற்கு என்ன காரணம்? அரிசி சாப்பிடுவதனாலே அறிவு அதிகமாக வளரும் என்ற கருத்து இருப்பதினாலே அதை தடை செய்யவேண்டுமென்பது நோக்கமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எத்தனையோ அபிப்பிராயங்கள் இருக்கின்றன. அரிசியைவிட மீன் சாப்பிடுவது நல்லது, அதில்தான் பாஸ்பரஸ் அதிகமாக இருக்கிறது என்று நான் சிறு வயதில் பிரஸிடென்ஸி காலேஜில் படிக்கும்போதே அங்கு இருந்து

வந்தவர்கள் சொன்னார்கள். அறிவை குறைக்கவேண்டுமென்ற நோக்கம் யாருக்கும் இல்லை. ஆனால் ஒரே வகை உணவை, அதாவது அரிசியையே கட்டிக் கொண்டிருப்பது நல்லது அல்ல. திடீர் திடீர் என்று பஞ்சம் வரும்பொழுதும், அல்லது வேறு ஆபத்துக்கள் வரும்பொழுதும், உணவுக்குக்கூட வெளி நாடுகளை நம்பியிருக்கக்கூடிய கேவல நிலை கூடாது என்பதுதான் இதனுடைய அடிப்படை. ஆகவே, நாம் அரிசி சாப்பிடுவதோடு, மற்ற உணவையும் சாப்பிட பழக்கிக்கொள்ளவேண்டும். சத்துள்ள உணவாக இருக்கவேண்டும். பாலன்ஸ்டு டயட்டாக இருக்கவேண்டுமென்பதுதான் இதனுடைய அடிப்படை.

**Sri S. LAZAR** : மத்திய சர்க்காரிடமிருந்து இந்த யோசனை வருவதற்கு முன்னாலேயே, நமது அமைச்சர் அவர்கள் கோதுமையை சாப்பிடவேண்டுமென்று சொல்லியதோடுகூட, தானும் சாப்பிட ஆரம்பித்ததாக பத்திரிகையிலே பார்த்தேன், அது உண்மைதானா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : பத்திரிகையில் வந்ததில் ஒன்றும் தவறுதல் இல்லை.

**Sri A. A. RASHEED** : May I know, Sir whether wheat and wheat products are supplied to the patients in the hospitals?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : Sir, I have issued instructions that we shall not touch hospitals. Also I have issued instructions that we shall not do anything which would affect the production of 'Idly' and 'Thosai'. I may tell the hon. Member that these instructions are very much appreciated by the Union Minister for Agriculture who likes 'Idly' and 'Thosai'.

**Sri A. V. P. ASAITHAMBI** : வடநாட்டினர் நம் மீது மொழியை தான் திணிக்கிறார்கள் என்றால் உணவையும் ஏன் திணிக்க வேண்டும் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அவர்கள் ஒன்றையும் திணிக்கவில்லை. நமக்கு ரொம்ப நாளாக ரவா உப்புமா சாப்பிட்டு பழக்கம் அவர்களிடத்தில் நாம்தான் இட்லி, தோசை, சாம்பார் இவைகளை திணிக்கிறோம். (சிரிப்பு)

**Sri K. VINAYAKAM** : In order to popularise non-rice dishes like wheat dishes, will the Government come forward to subsidise sale of wheat? The Government should pay 50 per cent of the cost and the consumers should be asked to pay only 50 per cent. This will result in considerable reduction of price of wheat to the consumers and this would tempt them to purchase wheat instead of rice.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : No such subsidy is necessary. I am glad to tell the hon. Member that the Madras hotels have taken to it very willingly and enthusiastically. They are first-class businessmen. If it would affect their business they won't take to it. The wonder of it is, the Madras Hotels' Association and hotel after hotel have taken to wheat dishes being supplied to the consumers.

**Sri P. S. SANTHANAM** : இப்போது கோதுமை மிகுதியாக இருப்பதால், திருச்சி போன்ற இடங்களிலுள்ள சிறைகளில் இருக்கும் கைதிகளுக்கு சோளக்கஞ்சிக்கு பதிலாக கோதுமை ரொட்டியைக் கொடுத்தால் நன்றாக இருக்குமல்லவா ?

29th March 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கோதுமை மிகுதியாக இல்லை. அதுவும் பற்றாக்குறையாகத்தான் இருக்கிறது. அதைக்கூட நாம் இறக்குமதி செய்யத்தான் வேண்டியிருக்கிறது. இருந்தாலும், கோதுமையை இறக்குமதி செய்வதில் கஷ்டம் இல்லை. சில சிறைகளி லுள்ள திராவிடக் கழகக் கைதிகளே "ராகி, சோளம் முதலியவை களைச் சாப்பிடுவதைவிட கோதுமையையே சாப்பிடுகிறோம், கோதுமையே கொடுங்கள்" என்று எங்களிடம் சொல்லியிருக்கிறார்கள். சோளம், கம்பு முதலியவைகள் வேண்டாமென்றும் கோதுமையே வேண்டுமென்றும் கேட்கிற கைதிகளுக்கு கோதுமை கொடுக்கலாம் என்று இப்போது உத்திர விடப்பட்டிருக்கிறது.

*Small-scale industries*

* 457 SRI S. M. ANNAMALAI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the amount allotted to the North Arcot district for small-scale industries for the year 1957–58;

(b) the amount spent so far taluk-wise; and

(c) the names of the industries and the villages where the amount has been spent so far?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Rs. 4,62,500.

(b) Vellore taluk, Rs. 1,63,005·90.
Ambur taluk, Rs. 78,857·80.

(c) (i) General Purposes Engineering Workshops, Vellore.

(ii) Service-*cum*-Training Centre for tanning and finishing leather at Vinnamangalam.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Will the Hon. Minister tell us whether all the amount that has been allotted has been spent?

THE HON. SRI R. VENKATARAMAN : The budget provision for 1957–58 for the General Purposes Engineering Workshop at Vellore was Rs. 2,50,700 and the amount spent up to 31st December 1957 is Rs. 1,63,000. I may tell the hon. Member that I just now opened the General Purposes Engineering Workshop at Vellore. In regard to Service-*cum*-Training Centre at Vinnamangalam, certain machinery has to be imported. At present the expenditure is Rs. 78,857.

SRI S. LAZAR : சிறு தொழில்களை ஆரம்பிப்பதைப் பொறுத் தவரையில், ஏற்கெனவே இருந்து சிதைந்துபோயிருக்கும் தொழில்களை மட்டுமே எடுத்துக்கொண்டு அவைகளை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பது சர்க்காரின் கொள்கையாக இருக்கிறதா ? அல்லது, புதிய தொழில்களை ஆரம்பிப்பதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா?

THE HON. SRI R. VENKATARAMAN : ஏற்கெனவே இருக்கும் தொழில்களையே அபிவிருத்தி செய்ய வேண்டும் என்பது சர்க்காரின் கொள்கை அல்ல. பல புதிய தொழில்கள் ஆரம்பிக்கப்படுகின்றன. உதாரணமாக, வேலூரில் இப்போது ஆரம்பிக்கப்பட்டிருக்கும் "ஜெனரல் பர்பஸஸ் எஞ்ஜினீரிங் ஒர்க்ஷாப்" புதிதாக ஆரம்பிக்கப்பட்ட தொழிற் சாலை தான். அங்கே சைக்கிலின் பாகங்களையும் எஞ்ஜினீரிங் காரியங் களில் உபயோகப்படும் பல பொருள்களையும் தயாரிக்கப்படும்.

[29th March 1958

**Sri K. ANBAZHAGAN**: வட ஆற்காடு ஜில்லாவில் திருவண்ணமலை தாலுகாவில் சாத்தனூர் அணைக்கட்டுத் திட்டத்திற்காகக் கட்டிய கட்டிடங்களில் ஏதேனுமொரு தொழிற்சாலையை ஆரம்பிக்க வேண்டு மென்று கேட்கப்பட்டதல்லவா ? அதுபற்றி ஏதேனும் முடிவு செய்யப் பட்டதா ? திருவண்ணமலை போன்ற தாலுகாக்களில் பிற்பட்ட மக்கள் அதிகமாக இருப்பதால் அங்கே தொழிற்சாலைகளை அமைக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: இந்த இரண்டு தொழிற் சாலைகளைத் தவிர வேறு சிறு தொழில்களை ஆரம்பித்து நடத்துவதற்கு தனியார் யாராவது முன்வந்தால், " ஸ்டேட் எய்ட்டு இன்டஸ்ட்ரீஸ் ஆக்ட் " பிரகாரம் அவர்களுக்கு பண உதவி அளிக்கப்படும். அந்த முறையில் திருவண்ணமலையில் தோல் தொழிலுக்கு ஆயிரம் ரூபாய் வரையில் கடன் உதவி அளிக்கப்பட்டிருக்கிறது. அதுதவிர புதிய தொழில் ஆரம்பிப்பது பற்றி இப்போது யோசனை இல்லை.

**Sri S. M. ANNAMALAI**: சந்தவாசல் காடுகளில் மூங்கில் அதிகமாகக் கிடைக்கிறது. அதைப் பயன்படுத்தக்கூடிய காகிதத் தொழிற் சாலையை அமைக்கலாம் என்பது மக்கள் விருப்பம். அதற்காக மக்கள் மனுக்களும் போட்டிருக்கிறார்கள். காகிதத் தொழிற்சாலையை ஆரம்பிக்கும் உத்தேசம் சர்க்காருக்கு உண்டா ?

**Mr. SPEAKER**: காகிதத் தொழிற்சாலை சிறு தொழிற்சாலையா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: கனம் சபாநாயகர் அவர்களே அதைத் தான் நானும் சொல்ல விரும்பினேன்.

காகிதத் தொழிற்சாலை ஆரம்பிக்க வேண்டுமானால், 5–10 கோடி ரூபாய் செலவாகும். அது பெரும் தொழில். இருந்தாலும் சிறு தொழில்களின் கீழ், கையினால் காகிதம் தயாரிக்கும் தொழிலை ஆரம்பிக்கலாம். அந்த முறையில் பேப்பர் தயாரிப்பதற்கு மூங்கில் பயன்படாது.

**Sri K. RAMACHANDRAN**: ஜெனரல் பர்பஸஸ் எஞ்ஜினீரிங் ஒர்க் ஷாப்பில் சைக்கிலின் பாகங்கள் தயாரிக்கப்படுவதாக கனம் மந்திரி சொன்னார். எந்த பாகங்களை அந்தத் தொழிற்சாலையில் தயாரிக்கிறார் கள். அப்படிப்பட்ட தொழிற்சாலை சென்னையில் இருக்கிறதா ?

**The Hon. Sri R. VENKATARAMAN**: அப்படிப்பட்ட தொழிற்சாலை சென்னையிலும் இருக்கிறது. இப்போது வேலூரிலும் அப்படிப்பட்ட தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அந்தத் தொழிற்சாலைகளில், ' நட்ஸ், போல்ட்ஸ், பெடல்ஸ் ' முதலிய சைக்கில் பாகங்கள் தயாரிக்கப் படுகின்றன. சைக்கில் செய்னையும் ப்ரீ-வீலையும் தவிர மற்றெல்லா சைக்கில் பாகங்களையும் நம் நாட்டிலேயே தயாரிக்க முடியும்.

### *Community radio sets*

* 458 *Q*.—**Sri K. SATTANATHA KARAYALAR**: Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of Community radio receiving sets;

(*b*) of this (i) the number of sets working; and

(ii) the number under repairs; and

(*c*) the average repairing charges and the average maintenance charges per annum?

**The Hon. Sri P. KAKKAN**: (*a*) 2,500 sets.

(*b*) (i) 2,443 sets (this excludes 17 sets which were not functioning for want of dry battery packs, etc.).

(ii) 40 sets.

29th March 1958]

(*c*) As no separate account apportioning the expenditure incurred on travelling allowance and on contingencies is maintained in respect of defective sets alone, it is not possible to furnish the average repairing charges per set. However, the average maintenance charges per set per annum works out as follows :—

(1) Battery operated radio receiver sets, Rs. 287.56 nP.

(2) Mains receiver sets, Rs. 168.50 nP.

(3) Overall average maintenance charges per set, Rs. 228·03 nP.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Is it a fact that the sets manufactured here are costlier than the sets purchased in outside markets ?

THE HON. SRI P. KAKKAN. I have no information Sir.

SRI K. ANBAZHAGAN : சமுதாய நலத்திற்காக வைக்கப்பட்டிருக்கும் வானொலிப் பெட்டிகளில் ஏற்படும் குறைகளைப் போக்குவதற்கு அரசாங்கம் தனிப்பட்ட அதிகாரிகளை வைத்திருக்கிறது. அதனால் தான் இந்தச் செலவுகள் அதிகமாகின்றன. இதைக் கண்டிராக்டர்கள் மூலம் செய்தால் இந்தச் செலவுகள் மிகவும் குறையும் என்பது அரசாங்கத்திற்குத் தெரியாதா ? கண்டிராக்டர்கள் மூலம் இதைச் செய்யலாம் என்ற யோசனையை அரசாங்கம் பரிசீலனை செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இது சம்பந்தமாக கனம் அங்கத்தினர் தனிக்கேள்வி போட்டால், அதை அரசாங்கம் பரிசீலனை செய்யும்.

SRI T. T. DANIEL : May I know from the Hon. Minister the price of each Community Radio?

THE HON. SRI P. KAKKAN : A separate question may be put, Sir.

SRI K. RAMACHANDRAN : இந்த ஸெட்டுகள் சரியாக வேலை செய்கின்றனவா என்று பார்ப்பதற்கு சர்க்காரிடம் என்ன நிர்வாக அமைப்பு இருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN: இந்த ஸெட்டுகளை அப்போதைக்கப்போது கவனிப்பதற்காக பொது மராமத்து இலாகாவிலிருந்து ஒரு எஞ்ஜினியர் நியமிக்கப்பட்டிருக்கிறார்.

SRI V. SUBBIAH : சமுதாய நல ரேடியோக்களுக்காக டெபாஸிட் தொகை கட்டப்பட்டிருந்தாலும், அவை வந்து சேருவதில் 2 ஆண்டுகள் வரை சுணக்கம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன ? இந்த ரேடியோக்கள் கொடுக்கப்படுவது சம்பந்தமாக உள்ள நிபந்தனைகள் பெரிய கஷ்டமாக இருக்கின்றன. திருச்சி நிலையத்தைத்தான் வைத்துக்கொள்ளவேண்டும் என்பது போன்ற நிபந்தனைகள் போடப்படுகின்றன. மேலும் சார்ஜுகள் ரொம்ப அதிகமாக இருக்கின்றன. இந்தக் கஷ்டங்களை நீக்குவதற்கு சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI K. VINAYAKAM : கம்யூனிடி ரேடியோ ஸெட்டுகளின் விலை இப்போது அதிகமாக இருக்கிறது. கோவையில் இருக்கும் தொழிலதிபர் ஸ்ரீ ஜீ. டி. நாயுடு நூறு ரூபாய்க்கு மேல் ஆகாத ரேடியோக்களைத் தயாரிப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே, அரசாங்கம் அவர் தயாரிக்கும் ரேடியோக்களை வாங்கி கம்யூனிடி ஸென்டர்களுக்குக் கொடுக்கக்கூடாதா ?

THE HON. SRI P. KAKKAN : முன்பொரு தடவை சபையில் இந்தக் கேள்வி கேட்கப்பட்டது. அப்போது, ஸ்ரீ ஜி. டி. நாயுடு அப்படிப்பட்ட ரேடியோவைத் தயாரிப்பது எனக்குத் தெரியாது என்று பதில் சொன்னேன். அந்த ரேடியோக்களை வாங்கினால் அரசாங்கத்திற்கு செலவு குறையக் கூடுமானால் இந்த யோசனையைப் பரிசீலனை செய்கிறோம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : முன்பொருதரம் இந்த ரேடியோ ஸெட்டுகள் சம்பந்தமான ஒரு கேள்விக்கு கனம் அமைச்சர் பதில் சொன்னபோது, அதிக விலை மதிப்புள்ள பல ரேடியோ ஸெட்டுகள் சரிவர வேலை செய்யவில்லை என்று சொன்னார். ஆகவே அம்மாதிரி ஸெட்டுக்களை எடுத்துவிட்டு அவைகளுக்கு பதிலாக ஓபன் மார்க்கெட்டில் விற்கும் ரேடியோக்களை வாங்கி வைப்பதற்கு சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இதைப் பரிசீலனை செய்துகொண்டிருக்கிறோம்.

### *Kundah Project*

* 459 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) the total extent of lands acquired from private landowners in connection with the Kundah Project;

(*b*) whether compensation has been given to all of them; and

(*c*) if not, the reasons for the delay?

THE HON. SRI V. RAMIAH : (*a*) 39·77 acres of land have so far been acquired from private land owners.

(*b*) & (*c*) Compensation has been paid to the owners in respect of 14·49 acres. In respect of the remaining 25·28 acres the awardees have not accepted the compensation fixed but claimed either enhanced compensation or lands in exchange. This will entail a reference to the court by the Land Acquisition Officer under section 31 (2) of the Land Acquisition Act.

SRI V. K. KOTHANDARAMAN : நீலகிரி ஜில்லாவில் முள்ளிக்கரை கிராமத்தில் எமரால்ட் எஸ்டேட் சொந்தக்காரராக இருக்கும் ஏ. வி. தாமஸ் அண்டு கம்பெனியாரிடமிருந்து ஏக்கரா ஒன்று 200 ரூபாய் வீதம் 27 ஏக்கரா நிலத்தை சுமார் 17 லட்சம் ரூபாய்க்கு. . . . .

MR. SPEAKER : நீங்கள் சொல்வது மூலக் கேள்விக்குச் சம்பந்தம் உடையதாக இருக்க வேண்டும்.

SRI V. K. KOTHANDARAMAN : 17 லட்சம் ரூபாய்க்கு 27 ஏக்கரா நிலத்தை வாங்கியதாக வந்த புகார் மீது சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது.

THE HON. SRI V. RAMIAH : இதைப்பற்றி இதற்குமுன் தனியாகக் கேள்வியொன்று வந்ததற்கு நான் பதில் சொல்லும் நேரத்தில், 'அம்மாதிரி எதும் இன்னும் பணம் கொடுக்கவில்லை' என்று சொல்லியிருக்கிறேன்.

SRI N. K. PALANISAMI : அது விஷயமாக சர்க்கார் கவனத்திற்கு வந்து, சர்க்கார் மேல் நடவடிக்கை எடுத்துக்கொண்டதன் பேரில் கலெக்டரை மாற்றியிருக்கிறார்கள். அது சம்பந்தமாக பாக்கி அதிகாரிகள் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI V. RAMIAH : That is a separate question which has nothing to do with the main question.

29th March 1958]

### "*Wattle*" *plantations*

* 460 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the total area of wattle plantations ; and

(*b*) the sale proceeds of wattle bark in the year 1956–57?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Wattle has been raised by the Forest Department over an area of 12,727 acres.

(*b*) A sum of Rs. 1,44,598 was realised during 1956–57 as sale proceeds of wattle.

SRI A. A. RASHEED : Is there any proposal to increase the acreage of wattle plantations in view of the shortage of wattle bark for tanning purposes?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. Another 12,600 acres are proposed to be planted at the rate of 4,200 acres per annum in Ootacamund, Madurai (North), Salem (South) and Coimbatore (South) Divisions. This is required not only for tanning but there is demand for it for the purpose of manufacturing paper and newsprint.

SRI V. K. KOTHANDARAMAN: நமது நாட்டிலே நடக்கக்கூடிய டானரிகளுக்கு வேண்டிய வாட்டில் பட்டைகள் அயல்நாடுகளிலிருந்து தருவிக்கக்கூடிய அதேநேரத்தில், குண்டா பிரதேசத்தில் இருக்கும் வாட்டில் மரங்கள் பாழாக்கப்பட்டிருக்கின்றன. நம்முடைய நாட்டிலே ஒரு பக்கத்தில் உற்பத்தி செய்யப்படுகிறது ; இன்னொரு பக்கத்தில் அழிக்கப்படுகிறது என்பதைப் பார்க்கும்போது அன்னிய நாடுகளிலிருந்து இவைகளைத் தருவிக்கவேண்டும் என்பதுதான் இவர்களுடைய நோக்கமா என்று அறிய விரும்புகிறேன்.

MR. SPEAKER : How is it relevant? The hon. Member should put it in the form of a question. He is giving his opinion. தயவு செய்து கேள்வியாகப் போடுங்கள். உங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்ல வேண்டாம்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வாட்டில் மரங்கள் நன்றாக வளர்ந்த பிறகு வெட்டப்படுகின்றன. கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் அவர்கள் நினைக்கிறார், ஏதோ அந்த மரங்களை அழித்துவிடுகிறோம் என்று. டானரிக்கு எது வேண்டும்? தோல்தான் வேண்டும். அதையும் மரத்தை அழித்த பிறகு தான் எடுத்துக்கொள்ளலாம். டானரிக்கு மரத்திலே இருக்கும் 'பார்க்' பயன்படும். வாட்டில் பட்டைகள் டானரிக்குமட்டும் பயன்பட்டால் போதாது. பெரிய காகிதத் தொழிற்சாலையொன்றை ஏற்படுத்துவதற்கும் இந்த மரங்கள் உபயோகப்படுகின்றன.

MR. SPEAKER : கனம் அங்கத்தினருக்கு ஒரு விண்ணப்பம். இரண்டாவது கேள்வி கேட்கும்போது மூலக் கேள்விக்குச் சம்பந்தம் உடையதாக இருக்கவேண்டும். அங்கத்தினர் அவர்கள் தம்முடைய அபிப்பிராயத்தை அந்தக் கேள்வியில் சொல்லக்கூடாது. நேராகக் கேள்வி கேட்கவேண்டுமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. A. RASHEED : Do the Government dispose of the wattle bark by tender or by public auction?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have that information with me. I should like to have notice.

[29th March 1958

*New transport chassis*

* 461 *Q.*—Sri K. RAMACHANDRAN (on behalf of Sri K. Sattanatha Karayalar) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the number of new chassis purchased by the Transport Department from 1st March 1957 with details about their make;

(*b*) the terms of purchase;

(*c*) whether they were delivered at Madras or at some other place;

(*d*) if the delivery was at Madras, the transport charges incurred from the place of assembly; and

(*e*) if the delivery was at a place other than Madras, how they were transported and the expenditure incurred thereon?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) 38 Leyland Comet chassis of 203" wheelbase and 8 Mercedes Benz chassis of 190" wheelbase were purchased from 1st March 1957 to 31st January 1958.

(*b*) 28 Leyland chassis were purchased at a cost of Rs. 36,232 each (inclusive of sales tax). This included the cost of automatic lubricator also. Ten Leyland chassis were purchased at a cost of Rs. 35,939.40 nP. (inclusive of sales tax). Eight Mercedes Benz were purchased at a cost of Rs. 28,865·50 nP. (inclusive of sales tax and transport charges).

The chassis were to be delivered at Chromepet.

(*c*) They were delivered at the Government Transport Central Workshop at Chromepet.

(*d*) The Leyland Comet chassis were delivered free of charge. For the Mercedes Benz chassis the firm has claimed Rs. 611 per chassis as transport charges. This rate is subject to confirmation by the Transport Commissioner.

(*e*) Does not arise.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : May I know from the Hon. Minister whether there is any necessity to pay sales tax on it?

The Hon. Sri R. VENKATARAMAN : Yes, it is a commercial transaction.

Sri K. VINAYAKAM : Sir, do the Government purchase these chassis direct from the firm by themselves or through the Government of India as per the quota allotted to our State?

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, the Transport Department has an Advisory Committee consisting of the concerned Minister, the Secretary to the Home Department, the Secretary to the Finance Department and the Honorary Director of Transport. They go into the relative merits of the several types of chassis and

29th March 1958]

now they have decided that instead of buying all and sundry types of chassis and building bodies on them, it is better to confine the makes to only two varieties, viz., Leyland Comet and Mercedes Benz. Since we have fixed the type of buses to be got, we apply direct to the firms and ask them to quote the rate at which it will be available for the Government.

### *Manimuthar Dam*

* 462 *Q.*—Sri K. RAMACHANDRAN (on behalf of Sri S. B. Adityan) : Will the Hon. the Minister for Works be pleased to state—

**(*a*) whether water was let into the channels from Manimuthar Dam on 3rd January, 1958 ; and**

(*b*) if so, whether the channel leading to Vijayanarayanam tank was supplied with water?

**The Hon. Sri P. KAKKAN : (*a*) Yes.**

**(*b*) Yes.**

**Sri G. GOMATHI SANKARA DIKSHITAR :** மணிமுத்தாறு அணைக்கட்டுக் கால்வாய் அம்பாசமுத்திரம், திருநெல்வேலி, திருச்செந்தூர், நாங்குனேரி முதலிய நான்கு தாலூகாக்களின் வழியாகச் செல்வதால் இர்ரிகேஷன் முறை இப்பொழுது வகுக்கப்படக்கூடிய நிலைமையில் இருக்கிறதா ? அது வகுக்கப்பட்டு விட்டதா, என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** இர்ரிகேஷன் முறை எல்லாம் ஏற்கேனவே வகுக்கப்பட்டிருக்கிறது.

**Sri M. K. SOMASUNDARAM :** மணிமுத்தாறு அணைக்கட்டிலிருந்து நான்கு தாலூகாக்களுக்குத் தண்ணீர் விடவேண்டியிருப்பதால், எத்தனை குளங்களுக்குத் தண்ணீர் விடலாம் என்று அரசாங்கம் பரிசீலனை செய்திருக்கிறதா ? அப்படியானல் எத்தனை குளங்களுக்குத் தண்ணீர் விடப்பட்டிருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN :** இந்த பாசனத்தின் மூலம் ஏற்கெனவே தண்ணீர் பாய்ந்துகொண்டிருக்கிற 83,000 ஏக்கராக்களுக்கு தண்ணீர் பாய ஏற்பாடு செய்யப்பட்டிருப்பதோடு கூட, 20,000 ஏக்கராக்களுக்குத் தண்ணீர் சப்ளை செய்யக்கூடிய குளங்களுக்கும் தண்ணீர் பாய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

### *Heavy electrical equipment*

* 463 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether there was any proposal to start any concern to manufacture heavy electrical equipment at Avadi in 1956?

The Hon. Sri V. RAMIAH : Yes, Sir. In connection with the proposal to establish a factory for the manufacture of heavy electrical equipment in India, the Government of India appointed a team of experts to visit fourteen possible sites in the country recommended by the State Governments. In 1956, the team visited the site near Avadi recommended by this Government. After however considering the recommendations of the experts, the Government of India ultimately decided to locate the factory at Bairagarh near Bhopal.

**Sri N. K. PALANISAMI :** ஆவடியில் அந்தத் தொழிற்சாலையை வைக்கலாம் என்று நிபுணர் கமிட்டி சொல்லியிருந்தும்கூட அங்கு வைக்காமல் போபாலில் வைக்கக் காரணம் என்ன ? ஆவடியில் வைக்கவேண்டும் என்பதாக மத்திய சர்க்காரிடம் ஏதாவது பேச்சுவார்த்தை நடத்தப்பட்டதா ?

**The Hon. Sri V. RAMIAH :** ஆவடியில் வைக்கவேண்டும் என்பது தான் நம்முடைய அரசாங்கத்தினுடைய கோரிக்கை. அதை வலியுறுத்திச் சொல்லிவந்தோம். ஆனால் நிபுணர் கமிட்டியால் அதையெல்லாம் பரிசீலனை செய்து இப்பொழுது தேர்ந்தெடுத்திருக்கும் இடம் மிகவும் சிறந்த இடம் என்று முடிவு செய்து அரசாங்கமும் ஏற்றுக்கொண்டிருக்கிறது.

**Sri K. ANBAZHAGAN :** பிற மாகாணங்களைவிட சென்னை மாகாணம் தான் மின்சார விநியோகம் சம்பந்தப்பட்ட வரையில் தலைசிறந்து விளங்குகிறது என்று சொல்கிற இந்த அரசாங்கம் வேறு இடத்திலே ஒரு கனரகத் தொழிற்சாலையை வைத்தால் சென்னை மாகாணத்திலும் ஒரு கனரகத் தொழிற்சாலை இருக்கவேண்டுமென்று வலியுறுத்தி, இரண்டாவதாக ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்துமா ?

**The Hon. Sri V. RAMIAH :** இரண்டாவது தொழிற்சாலை அமைப்பதாக முடிவு வந்தவுடனே மீண்டும் இதை வலியுறுத்துவோம் என்று நான் உறுதியளிக்கிறேன்.

**Sri K. VINAYAKAM : What were the considerations which weighed with the expert team to come to the conclusion that Avadi was not suitable for starting this industry whereas our Government recommended the starting of this industry at Avadi?**

**The Hon. Sri V. RAMIAH : The Expert Committee have not come to the conclusion that Avadi is not suitable but they have come to the conclusion that the present site is better.**

*Fire accidents*

* 464 *Q.*—Sri S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of fire accidents in the Tiruchirappalli district during the last five years;

(*b*) the number of houses damaged by fire;

(*c*) the estimate of damage;

(*d*) the number of Fire Service Stations in the district;

(*e*) whether the Government have received representation from the Tiruchirappalli District Planning Board to provide Fire Service Stations at Perambalur and Ariyalur; and

(*f*) if so, the action taken thereon?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*)

| Year. | Total number of fire accidents. |
|---|---|
| (1) | (2) |
| 1953 .. .. .. .. .. | 193 |
| 1954 .. .. .. .. .. | 192 |
| 1955 .. .. .. .. .. | 228 |
| 1956 .. .. .. .. .. | 223 |
| 1957 .. .. .. .. .. | 218 |

29th March 1958]

(*b*) & (*c*) The extent of damage caused by fire to houses, human lives, cattle, and property for the last five years is as shown below :—

| *Year.* | *Number of houses damaged.* | *Number of human lives lost.* | *Number of cattle lost.* | *Value of damage caused to houses and other properties.* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| | | | | RS. |
| 1953 .. | 1,788 | 5 | .. | 3,36,365 |
| 1954 .. | 865 | 5 | .. | 1,94,209 |
| 1955 .. | 1,954 | 3 | 1 | 7,09,382 |
| 1956 .. | 1,128 | 3 | .. | 4,22,682 |
| 1957 .. | 1,059 | 6 | 1 | 1,49,372 |

(Separate figures for value of damage caused to *houses alone* are *not* available.)

(*d*) Three (at Tiruchirappalli, Karur and Pudukkotai).

(*e*) No, Sir.

(*f*) Does not arise.

**SRI S. LAZAR :** இப்போது கொடுத்த புள்ளி விவரங்களில் இருந்து ஏராளமான தீ விபத்துக்கள் உண்டாகின்றன என்று தெரிகிறது. அதுவும் திருச்சி ஜில்லாவின் வடக்கு பாகத்தில் பெரம்பலூர், உடையார்பாளையம் பகுதியில் ஒவ்வொரு ஆண்டும் தீ விபத்து ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. இதற்காக சர்க்கார் இன்னும் பல லட்சக்கணக்கான ரூபாய்களைச் செலவழிக்க முன்வரும்போது இன்னும் ஒரு பையர் ஸ்டேஷனை பெரம்பலூரில் வைக்கும் உத்தேசம் உண்டா ? அதுமாதிரியாக ஜில்லா சூப்பிரண்டெண்டிடமிருந்து கோரிக்கை வந்திருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அரியலூரிலும், பெரம்பலூரிலும் வைக்கவேண்டுமென்ற கோரிக்கை வந்திருக்கிறது. நிதி நிலைமையையொட்டி இந்தக் கொரிக்கை பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

**SRI T. SAMPATH :** Has any representation been received from the members of the Fire Service Squad for the raising of their basic pay and, if so, may I know the action taken thereon?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** That is a different question. Notice may be given.

**SRI A. GOVINDASAMY :** அமைச்சர் சொன்ன பதிலில் இருந்துகிட்டத்தட்ட 22 பேர்கள் தீவிபத்தினால் இறந்திருப்பதாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இறந்தவர்களுடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டிருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அது விஷயம் அவ்வப்போது கவனிக்கப்பட்டிருக்கும்.

**SRI V. SUBBIAH :** அரியலூர் பஞ்சாயத்து போர்டு நிர்வாகத்திலிருந்து இதற்கு ஆகும் செலவை ஒப்புக்கொண்டு தங்கள் நிர்வாகத்திலேயே வைத்துக்கொள்வதாக மனு வந்திருக்கிறதா என்று கேட்க விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அரியலூரைப்பற்றி முன்பு சொன்னேன்.

**Sri K. PERIANNAN**: கனம் சபாநாயகர் அவர்களே, பெரம்பலூர் தாலுக்கா மிகவும் பிற்பட்ட காடாரம்பப் பிரதேசமாக இருந்தும் இந்த நெருப்பு அணைக்கும் படை நிலையம் திருச்சி தலைநகரத்திலிருப்பதால் இங்கே தீப்பிடித்த சமாச்சாரம் தெரிந்த உடனேயே அவர்கள் கிளம்பினாலும் இருபது மைல், முப்பது மைல் வருவதற்குள் இங்கே கிராமங்கள் எல்லாம் எரிந்து சாம்பலாகிப் போய்விடுகின்றன என்கிற விஷயம் அரசாங்கத்திற்குத் தெரியவருமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: இதையெல்லாம் கவனித்தே திருச்சி ஜில்லா கலெக்டர் பெரம்பலூரில் பயர் ஸ்டேஷன் வைக்க வேண்டுமென்று கோரியிருக்கிறார்.

**Sri S. LAZAR**: பெரம்பலூர், அரியலூர் இங்கே பயர் ஸ்டேஷன் வைக்கவேண்டுமென்ற கோரிக்கை நிதி நிலைமையை அனுசரித்து பரிசீலிக்கப்படுவதாக கனம் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஸ்ரீரங்கத்தில் பயர் ஸ்டேஷன் ஏற்படுத்தப்போவதாகத் தெரிகிறது. திருச்சிக்கு அருகில் இரண்டு மைலில் ஸ்ரீரங்கம் இருப்பதால் அங்கே ஏற்படுத்தப் போவதை பெரம்பலூரில் ஏற்படுத்துவதற்கு சர்க்கார் யோசிக்குமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: என்னிடத்திலுள்ள தகவலில் இருந்து ஸ்ரீரங்கத்தில் ஏற்படுத்தப் போகிறார்களா, இல்லையா என்று தெரியவில்லை, பொதுவாக ஓரிடத்தில் இருப்பதை இன்னொரு இடத்திற்கு மாற்றும்படியாகச் சொல்லவேண்டாம். இந்த இடத்தில் வேண்டுமென்றால் அது தனியாகவே பரிசீலித்து ஏற்படுத்தப்படும்.

**Sri A. GOVINDASAMY**: நான் கேட்ட கேள்விக்கு அவ்வப்போது கவனித்து நடவடிக்கை எடுக்கப்படும் என்று மந்திரி அவர்கள் சொன்னார்கள். நான் கேட்ட கேள்வி இறந்தவர்களுடைய குடும்பத்திற்கு நஷ்ட ஈடு கொடுக்கப்படுகிறதா என்பது தான் ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM**: இது எல்லாம் அவ்வப்போது கலெக்டர்களால் கவனிக்கப்பட்டு நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதென்று மீண்டும் சொல்கிறேன்.

### *Edward Textile Mills*

* 465 *Q*.—**Sri S. PAKKIRISAMI PILLAI**: Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the steps taken by the Government to reopen the Edward Textile Mills, Madras; and

(*b*) the number of persons thrown out of employment due to the closure of the mills?

**The Hon. Sri R. VENKATARAMAN**: (*a*) & (*b*) The management of Edward Textile Mills notified in November 1957 that the mills would be closed with effect from 8th December 1957. However, to avert complete closure, the Workers' Union and the management came to a settlement on 5th December 1957. The parties agreed to run one shift of the Spinning section to start with and run the second shirt as soon as possible. They also agreed to the closure of the Weaving Section as it was uneconomic to continue that section. Due to the closure of the Weaving Section, 250 workers were discharged.

29th March 1958]

*Electricity Board*

* 466 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether the Government have provided any building for the Electricity Board?

THE HON. SRI V. RAMIAH : The head office of the Electricity Board has been permitted temporarily to occupy portions in the Secretariat Buildings. As the State Electricity Board is an autonomous body, it will have to make suitable arrangements for permanently housing its office, in due course.

SRI N. K. PALANISAMI : போர்டு ஏற்பட்டு கிட்டதட்ட ஒரு வருஷம் ஆகியும் இன்னும் என் அதற்குக் கட்டிடம் ஏற்படுத்தவில்லை ? இப்போது எவ்வளவு ரூபாயில் ஏற்படுத்தப்போவதாக உத்தேசம்.

THE HON. SRI V. RAMIAH : போர்டு நடைபெற்று வருகிறது.

SRI A. A. RASHEED : Does the Board pay any rent for the buildings?

THE HON. SRI V. RAMIAH : No, Sir.

*Forests*

* 467 *Q*.—SRI A. GOVINDASAMY : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of forests deforested by the Government in Vriddhachalam taluk so far;

(*b*) whether they have been deforested directly by the Government or through contractors; and

(*c*) the revenue realised by the sale of trees?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The following forests have so far been deforested in Vriddhachalam taluk in connection with the rehabilitation of displaced persons in the Neyveli Lignite Project :—

(1) Parur.

(2) Karmangudi.

(3) Kuppanatham.

(*b*) They have been deforested by the Forest Department through contractors.

(*c*) The amount realised by the sale of trees was Rs. 24,727.

SRI A. GOVINDASAMY : இந்தக் காடுகளை கண்டிராக்டர்கள் மூலம் அழிக்க நேரிட்டதால் அரசாங்கத்திற்கு அதிக நஷ்டம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி அரசாங்கம் கருதவில்லை. சீக்கிரத்தில் மரங்களை வெட்டி நிலத்தை ஒப்படைக்க வேண்டியிருந்தது. லிக்னைட் கார்ப்பரேஷனின் வேலை துரிதமாக நடைபெற வேண்டும் என்பதுதான் முக்கியம்.

SRI A. V. P. ASAITHAMBI : ஒரு பக்கம் மரம் நாட்டும் விழா கொண்டாடப்பட்டு வருகிறபோது, இன்னொருபக்கம் காடுகளை அழிப்பது என் என்று அறிய விரும்புகிறேன்.

[29th March 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : லிக்னைட் சுரங்க தொழிற்சாலையின் அவசியத்தை கனம் அங்கத்தினர் உணர்வார்கள் என்று நம்புகிறேன். அதனால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு போதிய நிவாரணம் அளிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தி வருகிறார்கள். அவர்களுக்கு இடவசதியும், விவசாயத்திற்குத் தக்க வசதியும் செய்து கொடுக்கவேண்டியிருந்தது. இவை காடுகள் என்றாலும் பெரிய மரங்களோ, செடிகளோ உடையது அல்ல, லிக்னைட் சுரங்கத்தைச் சுற்றி இருபது, முப்பது மைல் தூரத்தில் அப்பேர்ப்பட்ட இடங்கள் இல்லையாதலால் இந்தக் காடுகளை அழிக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

SRI M. KANDASAMI PADAYACHI : உளுந்தூர்பேட்டை, இடைக்கல், பாண்டுவ முதலிய இடங்களில் உள்ள காடுகள் அழிக்கப்பட்டாலும் அங்கே உடனடியாக வீடுகளைக் கட்டுவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்கப்படவில்லை. இப்போது விறகு கூட பொறுக்க முடியாமல் மக்கள் கஷ்டப்படுவதை அரசாங்கம் அறியுமா? அதற்குத் தக்க நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : காடுகள் பூராவும் வீடுகள் கட்டவேண்டிய அவசியமில்லை. ஆனால் எங்கெங்கே திரும்ப மரங்கள், செடிகள் வைத்து வளர்க்க முடியுமோ அதில் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI A. GOVINDASAMY : நெய்வேலி சேப்ளாநத்தம் கிராமத்தில் ஆயிரக்கணக்கான எக்கரா புறம்போக்கு நிலங்கள் இருக்கும்போது இந்தக் காடுகளை அழிக்கவேண்டிய அவசியம் என்ன ? அழிக்கப்பட்ட காடுகளில் விவசாயம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வீடுகள் கட்டுவதற்கு மட்டும் அல்ல நிலம். நெய்வேலி நல்ல மண் அல்ல என்பது கனம் அங்கத்தினருக்குத் தெரியுமோ தெரியாதோ எனக்குத் தெரியாது. பக்கத்தில் விவசாயம் செய்வதற்கும் வசதிவேண்டும் என்று காடுகள் அழிக்கப்பட்டது.

*Silk-worms*

* 468 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the extent of lands under mulberry cultivation for rearing silk-worms in the Talavadi firka, Coimbatore district; and

(*b*) the quantity and value of silk-yarn produced in 1957?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) 1,317 acres at the end of December 1957.

(*b*) Nil, as there are no silk reeling establishments in Talavadi firka.

SRI P. G. MANICKAM : இந்த முசுக்கட்டைப் புழுக்களை வளர்ப்பதற்கான நிலங்கள் தாலவடியில் அதிகமாக இருப்பதால் பட்டுப் பூச்சிகளை அபிவிருத்தி செய்வதற்காக அங்குள்ள விவசாயிகளுக்கு தாராளமாக உதவியும் கடன் வசதியும் செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கைகள் எடுத்து வருகிறதா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இதற்காக ஏதாவது உதவி வேண்டுமென்று அவர்கள் சர்க்காருக்கு மனு செய்தால் அதை பரிசீலனை செய்கிறோம்.

SRI P. G. MANICKAM : கொள்ளேகாலம் பிரிந்ததற்குப் பிறகு தாலவடியில் இந்தப் பட்டுக்களை விற்பதற்குறிய மார்க்கெட்டிங் சொஸைட்டிகள் இல்லாமல் இருக்கிறது. மேலும் அங்குள்ளவர்கள் மலைவாசிகள் ஆதலால் பட்டை விற்க வசதியின்றி கஷ்டப்படுகிறார்கள். ஆகவே, அங்கு ஒரு மார்க்கெட்டிங் ஸொஸைடி ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா ?

29th March 1958]

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லும் யோசனைகள் எல்லாம் மிகவும் சிறந்தவைகளாக இருக்கின்றன. ஆனால் கேள்வி நேரத்தில் போட்டு விடுவதால் மேற்கொண்டு எந்தவித நடவடிக்கையும் எடுக்க முடியவில்லை. ஆயிரம் குடும்பங்களுக்கு மேல் தாலவடி பிர்க்காவில் இந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். கனம் அங்கத்தினர் இதில் ‘ அக்கறை ’ எடுத்து, முயற்சி செய்து அங்கு ஒரு சொஸைட்டி ஏற்பாடு செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

*Electric connections*

* 469 *Q.*—SRI A. R. SUBBIAH MUDALIAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) in how many Police stations in Tirunelveli district electric wiring has been completed; and

(*b*) whether electric connections have been given to them?

THE HON SRI M. BHAKTAVATSALAM : (*a*) 7 (seven).

(*b*) Electric Service connection has been given only in one case.

SRI M. K. SOMASUNDARAM : எலெக்ட்ரிக் கனக்ஷென் கொடுக்கவில்லை என்றால் உடனடியாக கொடுக்க ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : வயரிங் வேலை எல்லாம், முடிந்த பிறகு கனக்ஷன் கொடுக்க தாமதமாகாது. உடனடியாக கனக்ஷன் கொடுக்கப்படும்.

MR. SPEAKER : கேள்விகள் 470-ம், 471-ம் ஒரே சப்ஜெக்டைப் பற்றி இருப்பதால் இரண்டையும் சேர்த்து எடுத்துக்கொள்ளலாம்.

*Housing scheme*

* 470 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the places where 144 tenements are proposed to be built in 1957–58 under the Co-operative Industrial Housing Scheme; and

(*b*) the maximum and minimum cost of construction of a tenement?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Peelamedu in Coimbatore district.

(*b*) Rs. 6,158 for a double-roomed tenement, and Rs. 4,133 for a single-roomed tenement, including the cost of land.

* 471 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the places where 35 houses are proposed to be constructed in 1957–58 under the Low Income Group Co-operative Housing Scheme; and

(*b*) the maximum and minimum cost of construction of a house?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) It is presumed that the Member wants to know the places in the Coimbatore district where 35 houses are proposed to be constructed in 1957–58 through co-operative societies.

[29th March 1958

These houses are proposed to be constructed at the following places :—

| | | |
|---|---|---|
| 1 | Coimbatore .. .. .. | 23 houses. |
| 2 | Anurperpalayam .. .. | 3 ,, |
| 3 | Tirupur .. .. .. | 1 ,, |
| 4 | Pollachi .. .. .. | 2 ,, |
| 5 | Bhavani .. .. .. | 4 ,, |
| 6 | Gobichettipalayam .. .. | 2 ,, |
| | | 35 houses. |

(*b*) The maximum cost of construction of a house laid down in the Low Income Group Housing Scheme for purpose of financial assistance is Rs. 10,000 inclusive of the site value. But, there is no objection to houses being built at a cost higher than this amount. The assistance from the Government for a house will not, however, exceed 80 per cent of the cost subject to a maximum of Rs. 8,000. There is no maximum standard cost fixed for a house under the Scheme.

SRI P. G. MANICKAM : இந்த வீடுகளானது இப்பொழுது கட்டப்பட்டு வருகின்றனவா ? அல்லது வேலை துவங்கப்படாமல் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : எல்லா வீடுகளும் கட்டப்பட்டு வருகிறது.

SRI V. K. KOTHANDARAMAN : தொழிலாளர்கள் கூட்டுறவு அடிப்படையில் கட்டப்படக்கூடிய வீடுகளுக்கு மத்திய சர்க்கார் 25 சத விகிதமும் மாகாண சர்க்கார் 25 சத விகிதமும் தொழிலாளர்கள் 25 சத விகிதமும் கொடுக்கிருர்கள், அப்படி தொழிலாளர்கள் 25 சத விகிதம் கொடுக்க வேண்டுமென்று இருப்பதை 10 சத விகிதம் ஆக குறைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இது, மத்திய சர்க்கார் செய்யவேண்டிய விஷயம். மாகாண சர்க்கார் இது விஷயமாக யோசனை கூறியிருக்கிறது. தொழிலாளர்களுக்கு 10 சத விகிதம் ஆக குறைத்து, அவர்களுக்கு கொடுக்கவேண்டும் மான்யத்தை 30 சத விகிதம் ஆக உயர்த்தி, கடன் வசதியை 60 சத விகிதமாக உயர்த்தவேண்டுமென்று மாகாண சர்க்கார் சொல்லியிருக்கிறது. இதே சிபார்சுதான் இந்தியன் லேபர் கான்பரன்ஸிலும் செய்யப்பட்டது. ஆனல் மத்திய சர்க்கார் இதற்கு ஒத்துக்கொள்ளவில்லை.

SRI A. V. P. ASAITHAMBI : 470-வது கேள்வியில் 144 குடியிருப்புகள் கட்ட முடிவு செய்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. எடுத்ததற்கெல்லாம் 144-ன் துணையை நாடுவதேன் ?

MR. SPEAKER : The question need not be answered. If, however, the Hon. Minister wants to answer, I have no objection.

THE HON. SRI R. VENKATARAMAN : 144 வீடுகள் கட்ட வேண்டிய அவசியம் எப்படி ஏற்பட்டதென்றல், 144 அங்கத்தினர்கள் வேண்டுமென்று விரும்பியதிஞல்தான்.

29th March 1958]

**Sri K. VINAYAKAM : As it is the policy of the Government that no conveyance charges, viz., registration fees are to be charged, for housing schemes coming under the Co-operative Societies Act, will the Government think of the possibility of not charging the fees in respect of the low income group housing schemes undertaken by the City Improvement Trust ?**

**The Hon. Sri R. VENKATARAMAN : The question may be put to my Colleague in-charge of Registration.**

**Sri A. GOVINDASAMY :** 471-வது கேள்வியில் 35 வீடுகள் பல கிராமங்களிலும் கட்டியதாகச் சொன்னார்கள். இரண்டு மூன்று வீடுகளைக் கட்டிவிட்டு திட்டத்தை நிறைவேற்றுகிறோம் என்று ஒப்புக்கு காட்டப்படுகிறதா அல்லது உண்மையிலேயே வீடு கட்டும் பிரச்னையைத் தீர்ப்பதற்குத் தானா ?

**The Hon. Sri R. VENKATARAMAN :** பிரச்னையைத் தீர்ப்பதற்குத் தான் ஆரம்பமாக செய்யப்படுகிறது. நாலைந்து வீடுகள் என்று தொடங்கித் தான் பிரச்னையைத் தீர்க்கவேண்டும்.

**Mr. SPEAKER : Questions are over.** லாஸர் அவர்கள் 40-வது ரூல் பிரகாரம் ரெவின்யூ அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு ஒரு விஷயத்தைக் கொண்டு வருவார்.

**[*Note*.—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]**

## II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE ASSEMBLY RULES *RE* THE SCARCITY OF DRINKING WATER IN THE MUNICIPAL TOWN OF TIRUCHIRAPPALLI.

**Sri S. LAZAR :** சபாநாயகர் அவர்களே, திருச்சி நகரிலே, சில 9-20 a.m.
மாதங்களாக இருக்கக்கூடிய குடிதண்ணீர் நெருக்கடியும், அதன் காரணமாக ஏற்பட்ட அவஸ்தையையும் சர்க்காரின் கவனத்திற்கு கொண்டு வரத்தான் நான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வருகிறேன். திருச்சி நகரில் இப்பொழுது இருக்கக்கூடிய திட்டமானது சுமார் 40 ஆண்டுகளுக்கு முன்னர் வகுக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டதாகும். அப்பொழுது அங்கு இருந்த ஜனத்தொகை 88,000. ஆனால் நாளடைவில் ஜனப் பெருக்கம் ஏற்பட்டு சுமார் 30 வருடங்களுக்கு முன்னால் இருந்த திட்டம் போதவில்லை என்ற காரணத்தால் ரா வாட்டர் நேரிடையாக காவேரியில் இருந்து எடுத்து நகருக்கு சப்ளை செய்யக் கூடிய முறை 30 ஆண்டுகளுக்கு முன் கையாளப்பட்டது. அந்தத் திட்டம் தொடர்ந்து 1957-ம் ஆண்டு மே மாதம் வரையில் நடந்து கொண்டிருந்தது. ஆனால் சர்க்கார் கொள்கை இது போன்ற ரா வாட்டரை எடுத்து குடி தண்ணீர் கொடுத்தால் எப்பிடமிக்ஸ் அதிகமாக வரும் என்று கண்டிப்பாக இதைக் கொடுக்கக்கூடாது என்று தடுத்தார்கள். அதன் காரணமாக ஜனங்களுக்கு தண்ணீர் நெருக்கடி அந்த சமயத்திலேயே ஏற்பட்டது. அப்பொழுது, 1957-ம் ஆண்டு மே மாதத்தில், திருச்சி நகரில் இருந்த ஜன நெருக்கடி, 250,000 ஆகும். திருச்சியில் ஏராளமான கல்லூரிகளும், இன்னும் மற்ற வியாபார ஸ்தலங்களும் இருப்பதால் ப்ளோட்டிங் பாப்புலேஷன் அங்கு சராசரி 50,000-ல் இருந்து ஒரு லட்சம் வரை வந்து சென்று கொண்டிருக்கிறார்கள். இப்படியிருக்க, மூன்று மாதங்களுக்கு முன்னாலே, நகருக்கு 11 கிணறுகளில் இருந்து இன்பில்ட்ரேஷன் முறையில் சப்ளை செய்து வந்ததில் நான்கு கிணறுகள் தூர் அடைந்து விட்டது. அதில் இருந்து மெயின் லைன்க்கு இணைக்கப்பட்ட பைப்பும் ரிப்பேராகி விட்டது. அதனால் தண்ணீர் நெருக்கடி இன்னும் அதிகமாக ஏற்பட்டது. இதன் காரணமாக சென்ற மூன்று மாதங்களாக நகரில் ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு மணி நேரம் அல்லது இரண்டு மணி நேரம் என்று ஒதுக்கியிருக்கும் காரணத்தினால் பகல் பூராவும் மணிக்கணக்கில் பைப் அடியில் நூற்றுக்கணக்கான மக்கள் குடங்களை வைத்து தண்ணீர் பிடிக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

**Mr. SPEAKER** : The hon. Member must be brief and not make a long speech.

**Sri S. LAZAR** : அதே போன்று ஒரு சில பகுதிகளில், இரவு நேரம் ஒரு மணி நேரம் மாத்திரம் தண்ணீர் கொடுப்பதால், அவர்கள் இரவு நேரங்களில் கண் விழித்துக்கொண்டு தண்ணீர் எடுக்கவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, நல்ல தண்ணீர் கிடைக்காத காரணத்தினால் அங்குள்ள மக்கள் வேறு அசுத்தமான தண்ணீரைக் குடித்து வரும் நிலையில் இருக்கிறார்கள். அப்படி அவர்கள் வேறு அசுத்தமான தண்ணீரைத்தான் குடிக்கிறார்கள். அதன் காரணமாக, ஸ்மால் பாக்ஸ், காலரா போன்ற வியாதிகள் வருகின்றன. இது பற்றி எங்கள் இடத்தில் இருந்து வந்திருக்கிற எல்லா அங்கத்தினர்களும் அமைச்சர் அவர்களிடம் இது பற்றி முறையிட்டுக் கேட்டபோது, அவர்கள் அதைப்பற்றி கவனிப்பதாகக் கூறியிருக்கிறார்கள். முனிஸிபாலிட்டியிடம் கேட்டால் சர்க்காரால் கொடுக்கபடும் என்கிறார்கள். ஆகவே, இப்படிப்பட்ட நெருக்கடி அங்கு தொடர்ந்து இருக்குமானால், நிலைமை அங்கு மிகவும் மோசமாகிவிடும் என்ற காரணத்தினால், தக்க நிவாரணம் டெம்பரரியாக இல்லாமல் நிரந்தரமாக நிவாரணம் அளிக்கப் பட வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்

9-30 a.m. * **The Hon. Sri M. A. MANICKAVELU** : Sir, the Municipal Commissioner, Tiruchirappalli has reported that on account of certain difficulties, the supply of raw water had to be stopped from May 1957 resulting in the reduction of supply from 46 lakhs of gallons to 40 lakhs per day in the Tiruchirappalli Municipality. He has also reported that because of heavy sand blow in the infiltration wells, the supply had to be reduced to 34 lakhs of gallons per day from December 1957. Consequently, the daily duration of supply had to be reduced.

The Municipal Commissioner has reported that the following steps are taken to meet the scarcity of water-supply in the town :—

(i) A new pumpset of 7·5 horse power electric motor was installed in one of the infiltration wells on 4th February 1958. On account of this, there is an additional water-supply of two lakhs of gallons per day.

(ii) The revised distribution system in the Rock Fort area will come into operation shortly and there will be an equitable supply in that area.

(iii) Water-supply is given in deficit areas through four water lorries.

(iv) The existing 5-inch main in Tennur High Road has been connected with 14-inches duplicate main running parallel to railway line for improving water-supply in Tennur and part of Puttur area.

(v) Water is made available to the public from static tanks installed in different parts of the town where there are no public fountains.

It may be added that the protected water-supply system introduced in Tiruchirappalli as early as 1896 designed for a population of 88,000 at 15 gallons per head per day, is not able to meet the

present-day needs. Hence, the Municipality has submitted the following proposals for effecting certain improvements to the existing Head Water Works :—

(i) Improvements to the existing infiltration wells, syphon pipes, plants, etc.; and

(ii) provision of sedimentation tanks and mechanical filters.

As this scheme of improvements is not included in the State Second Five-Year Plan, and as the provision in the Plan for urban water-supply and drainage schemes is not sufficient even to meet the expenditure on the schemes under execution, the investigation of the works can be sanctioned only if the Municipal Council, Tiruchirappalli is in a position to meet the entire cost of the schemes from its own funds without any financial assistance from the Government. The Municipal Council was asked to state how it proposes to finance the scheme accordingly. Its reply sent through the Chief Engineer, Public Works Department (General) is awaited.

Apart from the above, the Chief Engineer, Public Works Department (General) has submitted certain proposals for the improvements to the distribution system for the western and southern areas of the Municipality estimated to cost Rs. 41·81 lakhs. This scheme is included in the list of spill over schemes. The Chief Engineer has stated that the cost of first stage of the scheme is Rs. 28·91 lakhs and that the second stage of the work is proposed to be taken up only after 1976. The Municipal Council has been asked to state how it proposes to finance the scheme and its reply is awaited.

## III.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER—MESSAGE FROM THE LEGISLATIVE COUNCIL.

MR. SPEAKER : I have to announce that the Indian Stamps (Madras Amendment) Bill, 1958 passed by the Legislative Assembly on 25th March 1958 has been returned by the Legislative Council with the recommendation that the Bill may be adopted subject to the following amendment :— 9-32 a.m.

*Amendment.*

In clause 15, in item (1), in entry 6 (2) (*a*) (ii), for the expression—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| " and for every additional Rs. 10,000 or part thereof in excess of Rs. 30,000. | 27 | 00 | 12 | 25 | 9 | 00 " |

*substitute* the following expression, namely :—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| " and for every additional Rs. 10,000 or part thereof in excess of Rs. 30,000. | 27 | 00 | 13 | 50 | 9 | 00 " |

### IV.—RULING REGARDING THE PETITION PRESENTED BY SRI P. S. CHINNADURAI ON THE 27TH MARCH 1958.

MR. SPEAKER : I shall now give a ruling on the point raised by the Hon. the Leader of the House about the petition submitted by Sri P. S. Chinnadurai.

Under Rule 218 of the Madras Assembly Rules, a Member can present a petition addressed to the Assembly on a matter actually then under consideration of the Assembly. The petition so presented should be dated and signed by the petitioner or petitioners. The point raised by the Hon. the Leader of the House is whether such a petitioner or petitioners can be a member or members among others who have signed the petition.

In the House of Commons, a member is permitted to present a petition from himself. The only condition to be observed in such cases is that he should entrust such a petition to some other member. This rule does not extend to cases in which a member presents a petition signed by himself in his representative capacity as a Chairman to a county council or of any public incorporated body.

As regards Lok Sabha, attention is invited to rule 164 of the Lok Sabha which lays down that a member shall not present a petition from himself. It appears from this that he cannot be one of the signatories to a petition signed by others.

But so far as this Assembly Rules are concerned, there is no rule similar to Rule 164 of the Lok Sabha. In the absence of any such provision barring a member from being a signatory to a petition or one of the signatories to a petition presented to this Assembly, in my opinion, it appears that the present petition cannot be rejected on the ground stated by the Hon. the Leader of the House.

The petition in the present case is a printed one and the signatories' names are also printed. Under Rule 217 of the Madras Assembly Rules, the petition should be dated and signed by the petitioner or petitioners. The practice in the House of Commons also is that the petition should be signed. The petition is liable to be rejected on this ground.

We will now go to Demands for Grants.

### V.—BUDGET FOR THE YEAR 1958-59.

#### VOTING OF DEMANDS FOR GRANTS—DEMAND NO. XXVI—CIVIL WORKS—GRANTS-IN-AID, ETC.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I beg to move—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,04,35,700 under Demand XXVI—Civil Works—Grants-in-aid."

These houses are proposed to be constructed at the following places :—

| | | |
|---|---|---|
| 1 | Coimbatore .. .. .. | 23 houses. |
| 2 | Anurperpalayam .. .. | 3 ,, |
| 3 | Tirupur .. .. .. | 1 ,, |
| 4 | Pollachi .. .. .. | 2 ,, |
| 5 | Bhavani .. .. .. | 4 ,, |
| 6 | Gobichettipalayam .. .. | 2 ,, |
| | | 35 houses. |

(*b*) The maximum cost of construction of a house laid down in the Low Income Group Housing Scheme for purpose of financial assistance is Rs. 10,000 inclusive of the site value. But, there is no objection to houses being built at a cost higher than this amount. The assistance from the Government for a house will not, however, exceed 80 per cent of the cost subject to a maximum of Rs. 8,000. There is no maximum standard cost fixed for a house under the Scheme.

**Sri P. G. MANICKAM** : இந்த வீடுகளானது இப்பொழுது கட்டப்பட்டு வருகின்றனவா ? அல்லது வேலை துவங்கப்படாமல் இருக்கிறதா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri R. VENKATARAMAN** : எல்லா வீடுகளும் கட்டப்பட்டு வருகிறது.

**Sri V. K. KOTHANDARAMAN** : தொழிலாளர்கள் கூட்டுறவு அடிப் படையில் கட்டப்படக்கூடிய வீடுகளுக்கு மத்திய சர்க்கார் 25 சத விகிதமும் மாகாண சர்க்கார் 25 சத விகிதமும் தொழிலாளர்கள் 25 சத விகிதமும் கொடுக்கிறார்கள், அப்படி தொழிலாளர்கள் 25 சத விகிதம் கொடுக்க வேண்டுமென்று இருப்பதை 10 சத விகிதம் ஆக குறைக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இது, மத்திய சர்க்கார் செய்யவேண்டிய விஷயம். மாகாண சர்க்கார் இது விஷயமாக யோசனை கூறியிருக்கிறது. தொழிலாளர்களுக்கு 10 சத விகிதம் ஆக குறைத்து, அவர்களுக்கு கொடுக்கவேண்டும் மான்யத்தை 30 சத விகிதம் ஆக உயர்த்தி, கடன் வசதியை 60 சத விகிதமாக உயர்த்தவேண்டுமென்று மாகாண சர்க்கார் சொல்லியிருக்கிறது. இதே சிபார்சுதான் இந்தியன் லேபர் கான்பரன்ஸிலும் செய்யப்பட்டது. ஆனால் மத்திய சர்க்கார் இதற்கு ஒத்துக்கொள்ளவில்லை.

**Sri A. V. P. ASAITHAMBI** : 470-வது கேள்வியில் 144 குடியிருப் புகள் கட்ட முடிவு செய்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. எடுத்ததற் கெல்லாம் 144-ன் துணையை நாடுவதேன் ?

**Mr. SPEAKER** : The question need not be answered. If, however, the Hon. Minister wants to answer, I have no objection.

**The Hon. Sri R. VENKATARAMAN** : 144 வீடுகள் கட்ட வேண்டிய அவசியம் எப்படி ஏற்பட்டதென்றால், 144 அங்கத்தினர்கள் வேண்டு மென்று விரும்பியதினால்தான்.

29th March 1958]

**SRI K. VINAYAKAM : As it is the policy of the Government that no conveyance charges, viz., registration fees are to be charged, for housing schemes coming under the Co-operative Societies Act, will the Government think of the possibility of not charging the fees in respect of the low income group housing schemes undertaken by the City Improvement Trust ?**

**THE HON. SRI R. VENKATARAMAN : The question may be put to my Colleague in-charge of Registration.**

**SRI A. GOVINDASAMY :** 471-வது கேள்வியில் 35 வீடுகள் பல கிராமங்களிலும் கட்டியதாகச் சொன்னார்கள். இரண்டு மூன்று வீடுகளைக் கட்டிவிட்டு திட்டத்தை நிறைவேற்றுகிறோம் என்று ஒப்புக்கு காட்டப்படு கிறதா அல்லது உண்மையிலேயே வீடு கட்டும் பிரச்னையைத் தீர்ப்பதற்குத் தானா ?

**THE HON. SRI R. VENKATARAMAN :** பிரச்னையைத் தீர்ப்பதற்குத் தான் ஆரம்பமாக செய்யப்படுகிறது. நாலைந்து வீடுகள் என்று தொடங்கித் தான் பிரச்னையைத் தீர்க்கவேண்டும்.

**MR. SPEAKER : Questions are over.** லாஸர் அவர்கள் 40-வது ரூல் பிரகாரம் ரெவின்யூ அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு ஒரு விஷயத்தைக் கொண்டு வருவார்.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE ASSEMBLY RULES *RE* THE SCARCITY OF DRINKING WATER IN THE MUNICIPAL TOWN OF TIRUCHIRAPPALLI.

**SRI S. LAZAR :** சபாநாயகர் அவர்களே, திருச்சி நகரிலே, சில 9-20 a.m.
மாதங்களாக இருக்கக்கூடிய குடிதண்ணீர் நெருக்கடியும், அதன் காரண மாக ஏற்பட்ட அவஸ்தையையும் சர்க்காரின் கவனத்திற்கு கொண்டு வரத்தான் நான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வருகிறேன். திருச்சி நகரில் இப்பொழுது இருக்கக்கூடிய திட்டமானது சுமார் 40 ஆண்டு களுக்கு முன்னர் வகுக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டதாகும். அப்பொழுது அங்கு இருந்த ஜனத்தொகை 88,000. ஆனால் நாளடைவில் ஜனப் பெருக்கம் ஏற்பட்டு சுமார் 30 வருடங்களுக்கு முன்னால் இருந்த திட்டம் போதவில்லை என்ற காரணத்தால் ரா வாட்டர் நேரிடையாக காவேரியில் இருந்து எடுத்து நகருக்கு சப்ளை செய்யக் கூடிய முறை 30 ஆண்டு களுக்கு முன் கையாளப்பட்டது. அந்தத் திட்டம் தொடர்ந்து 1957-ம் ஞூ மே மாதம் வரையில் நடந்து கொண்டிருந்தது. ஆனால் சர்க்கார் கொள்கை இது போன்ற ரா வாட்டரை எடுத்து குடி தண்ணீர் கொடுத்தால் எப்பிட மிக்ஸ் அதிகமாக வரும் என்று கண்டிப்பாக இதைக் கொடுக்கக்கூடாது என்று தடுத்தார்கள். அதன் காரணமாக ஜனங்களுக்கு தண்ணீர் நெருக்கடி அந்த சமயத்திலேயே ஏற்பட்டது. அப்பொழுது, 1957-ம் ஞூ மே மாதத்தில், திருச்சி நகரில் இருந்த ஜன நெருக்கடி, 250,000 ஆகும். திருச்சியில் ஏராளமான கல்லூரிகளும், இன்னும் மற்ற வியாபார ஸ்தலங் களும் இருப்பதால் ப்ளோட்டிங் பாப்புலேஷன் அங்கு சராசரி 50,000-ல் இருந்து ஒரு லட்சம் வரை வந்து சென்று கொண்டிருக்கிறார்கள். இப்படியிருக்க, மூன்று மாதங்களுக்கு முன்னாலே, நகருக்கு 11 கிணறு களில் இருந்து இன்பில்ட்ரேஷன் முறையில் சப்ளை செய்து வந்ததில் நான்கு கிணறுகள் தூர் அடைந்து விட்டது. அதில் இருந்து மெயின் லைன்க்கு இணைக்கப்பட்ட பைப்பும் ரிப்பேராகி விட்டது. அதனால் தண்ணீர் நெருக்கடி இன்னும் அதிகமாக ஏற்பட்டது. இதன் காரணமாக சென்ற மூன்று மாதங்களாக நகரில் ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு மணி நேரம் அல்லது இரண்டு மணி நேரம் என்று ஒதுக்கியிருக்கும் காரணத்தினால் பகல் பூராவும் மணிக்கணக்கில் பைப் அடியில் நூற்றுக்கணக்கான மக்கள் குடங்களை வைத்து தண்ணீர் பிடிக்கும் நிலை ஏற்பட்டிருக்கிறது.

**MR. SPEAKER:** The hon. Member must be brief and not make a long speech.

**SRI S. LAZAR:** அதே போன்று ஒரு சில பகுதிகளில், இரவு நேரம் ஒரு மணி நேரம் மாத்திரம் தண்ணீர் கொடுப்பதால், அவர்கள் இரவு நேரங்களில் கண் விழித்துக்கொண்டு தண்ணீர் எடுக்கவேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, நல்ல தண்ணீர் கிடைக்காத காரணத்தினால் அங்குள்ள மக்கள் வேறு அசுத்தமான தண்ணீரைக் குடித்து வரும் நிலையில் இருக்கிறார்கள். அப்படி அவர்கள் வேறு அசுத்தமான தண்ணீரைத்தான் குடிக்கிறார்கள். அதன் காரணமாக, ஸ்மால் பாக்ஸ், காலரா போன்ற வியாதிகள் வருகின்றன. இது பற்றி எங்கள் இடத்தில் இருந்து வந்திருக்கிற எல்லா அங்கத்தினர்களும் அமைச்சர் அவர்களிடம் இது பற்றி முறையிட்டுக் கேட்டபோது, அவர்கள் அதைப்பற்றி கவனிப்பதாகக் கூறியிருக்கிறார்கள். முனிஸிபாலிட்டியிடம் கேட்டால் சர்க்காரால் கொடுக்கபடும் என்கிறார்கள். ஆகவே, இப்படிப்பட்ட நெருக்கடி அங்கு தொடர்ந்து இருக்குமானால், நிலைமை அங்கு மிகவும் மோசமாகிவிடும் என்ற காரணத்தினால், தக்க நிவாரணம் டெம்பரரியாக இல்லாமல் நிரந்தரமாக நிவாரணம் அளிக்கப் பட வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன்

9-30 a.m. * **THE HON. SRI M. A. MANICKAVELU:** Sir, the Municipal Commissioner, Tiruchirappalli has reported that on account of certain difficulties, the supply of raw water had to be stopped from May 1957 resulting in the reduction of supply from 46 lakhs of gallons to 40 lakhs per day in the Tiruchirappalli Municipality. He has also reported that because of heavy sand blow in the infiltration wells, the supply had to be reduced to 34 lakhs of gallons per day from December 1957. Consequently, the daily duration of supply had to be reduced.

The Municipal Commissioner has reported that the following steps are taken to meet the scarcity of water-supply in the town :—

(i) A new pumpset of 7·5 horse power electric motor was installed in one of the infiltration wells on 4th February 1958. On account of this, there is an additional water-supply of two lakhs of gallons per day.

(ii) The revised distribution system in the Rock Fort area will come into operation shortly and there will be an equitable supply in that area.

(iii) Water-supply is given in deficit areas through four water lorries.

(iv) The existing 5-inch main in Tennur High Road has been connected with 14-inches duplicate main running parallel to railway line for improving water-supply in Tennur and part of Puttur area.

(v) Water is made available to the public from static tanks installed in different parts of the town where there are no public fountains.

It may be added that the protected water-supply system introduced in Tiruchirappalli as early as 1896 designed for a population of 88,000 at 15 gallons per head per day, is not able to meet the

present-day needs. Hence, the Municipality has submitted the following proposals for effecting certain improvements to the existing Head Water Works :—

(i) Improvements to the existing infiltration wells, syphon pipes, plants, etc.; and

(ii) provision of sedimentation tanks and mechanical filters.

As this scheme of improvements is not included in the State Second Five-Year Plan, and as the provision in the Plan for urban water-supply and drainage schemes is not sufficient even to meet the expenditure on the schemes under execution, the investigation of the works can be sanctioned only if the Municipal Council, Tiruchirappalli is in a position to meet the entire cost of the schemes from its own funds without any financial assistance from the Government. The Municipal Council was asked to state how it proposes to finance the scheme accordingly. Its reply sent through the Chief Engineer, Public Works Department (General) is awaited.

Apart from the above, the Chief Engineer, Public Works Department (General) has submitted certain proposals for the improvements to the distribution system for the western and southern areas of the Municipality estimated to cost Rs. 41·81 lakhs. This scheme is included in the list of spill over schemes. The Chief Engineer has stated that the cost of first stage of the scheme is Rs. 28·91 lakhs and that the second stage of the work is proposed to be taken up only after 1976. The Municipal Council has been asked to state how it proposes to finance the scheme and its reply is awaited.

## III.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER—MESSAGE FROM THE LEGISLATIVE COUNCIL.

MR. SPEAKER : I have to announce that the Indian Stamps (Madras Amendment) Bill, 1958 passed by the Legislative Assembly on 25th March 1958 has been returned by the Legislative Council with the recommendation that the Bill may be adopted subject to the following amendment :— 9-32 a.m.

*Amendment.*

In clause 15, in item (1), in entry 6 (2) (*a*) (ii), for the expression—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| " and for every additional Rs. 10,000 or part thereof in excess of Rs. 30,000. | 27 | 00 | 12 | 25 | 9 | 00 " |

*substitute* the following expression, namely :—

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| " and for every additional Rs. 10,000 or part thereof in excess of Rs. 30,000. | 27 | 00 | 13 | 50 | 9 | 00 " |

## IV.—RULING REGARDING THE PETITION PRESENTED BY SRI P. S. CHINNADURAI ON THE 27TH MARCH 1958.

MR. SPEAKER : I shall now give a ruling on the point raised by the Hon. the Leader of the House about the petition submitted by Sri P. S. Chinnadurai.

Under Rule 218 of the Madras Assembly Rules, a Member can present a petition addressed to the Assembly on a matter actually then under consideration of the Assembly. The petition so presented should be dated and signed by the petitioner or petitioners. The point raised by the Hon. the Leader of the House is whether such a petitioner or petitioners can be a member or members among others who have signed the petition.

In the House of Commons, a member is permitted to present a petition from himself. The only condition to be observed in such cases is that he should entrust such a petition to some other member. This rule does not extend to cases in which a member presents a petition signed by himself in his representative capacity as a Chairman to a county council or of any public incorporated body.

As regards Lok Sabha, attention is invited to rule 164 of the Lok Sabha which lays down that a member shall not present a petition from himself. It appears from this that he cannot be one of the signatories to a petition signed by others.

But so far as this Assembly Rules are concerned, there is no rule similar to Rule 164 of the Lok Sabha. In the absence of any such provision barring a member from being a signatory to a petition or one of the signatories to a petition presented to this Assembly, in my opinion, it appears that the present petition cannot be rejected on the ground stated by the Hon. the Leader of the House.

The petition in the present case is a printed one and the signatories' names are also printed. Under Rule 217 of the Madras Assembly Rules, the petition should be dated and signed by the petitioner or petitioners. The practice in the House of Commons also is that the petition should be signed. The petition is liable to be rejected on this ground.

We will now go to Demands for Grants.

## V.—BUDGET FOR THE YEAR 1958-59.

### VOTING OF DEMANDS FOR GRANTS—DEMAND NO. XXVI—CIVIL WORKS—GRANTS-IN-AID, ETC.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I beg to move—

"That the Government be granted a sum not exceeding Rs. 1,04,35,700 under Demand XXVI—Civil Works—Grants-in-aid."

29th March 1958]

* **THE HON. SRI P. KAKKAN**: மன்றத் தலைவர் அவர்களே, நான் சம்பந்தப்பட்ட கட்டிட மராமத்து வேலைகளைக் குறித்து மூன்று மானியக் கோரிக்கைகள் இருக்கின்றன. மான்யக் கோரிக்கைகள் இருபத்திநான்கும், முப்பத்து ஒன்பதும் கட்டிடப் பணிகளுக்கான மான்யங்களுக்கானவை. இருபத்தி ஐந்தாவது மான்யக் கோரிக்கை நிறுவனம், கருவிகள், யந்திரங்களுக்கான மான்யம் பற்றியவை. இருபத்திநாலாவது மான்யக் கோரிக்கையை 8–4–1958-ல் எடுத்துக் கொள்வதாக இருக்கிறது. இருபத்தி ஐந்தாவது, முப்பத்தொன்பதாவது மான்யக் கோரிக்கைகளை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம். எனினும் மான்யக் கோரிக்கைகளைத் தனித் தனியாக வோட்டுக்கு விடலாம். மன்றத் தலைவர் அவர்களே, மேன்மை தங்கிய கவர்னர் அவர்களின் பரிவின் பேரில், அரசாங்கத்துக்குக் கீழ்க் கண்ட தொகைகளை ஒதுக்கும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். இருபத்தி ஐந்தாவது மான்யக் கோரிக்கையின்கீழ் கட்டிட மராமத்து வேலைகள்—நிறுவனம், கருவிகள், யந்திரங்கள்—ஆகியவைகளுக்கு ரூபாய் 1,33,49,800-க்கு மேற்படாத ஒரு தொகையையும் முப்பத்தொன்பதாவது மான்யக் கோரிக்கை—கட்டிடப் பணிகளுக்கு முதலீட்டுச் செலவு—வகையில் ரூபாய் 3,73,79,400-க்கு மேற்படாத ஒரு தொகையையும் அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 9–30 a.m.

**MR. SPEAKER**: கனம் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் 26-வது மான்ய கோரிக்கையின் மீது கொண்டு வரப்பட்டிருக்கும் வெட்டுப்பிரேரணைகளில் ஸ்ரீ பி. யு. ஷண்முகம் அவர்களால் கொண்டு வந்திருக்கும் 169-எ நம்பருள்ள வெட்டுப்பிரேரணையையும் 39-வது மான்ய கோரிக்கையின் மீது கொண்டு வரப்பட்டிருக்கும் வெட்டுப்பிரேரணைகளில் 171-வது வெட்டுப் பிரேரணையையும் ஆதரிப்பதாக சொன்னார்கள். ஆகையினால் அந்த வெட்டுப் பிரேரணைகளை எடுத்துக்கொள்ளலாம். ஸ்ரீ பி. யு. ஷண்முகம் அவர்கள் அவரது பிரேரணைகளை பிரேரேபிக்கலாம்.

**SRI P. U. SHANMUGAM**: என் பெயரில் இருக்கின்ற வெட்டுப் பிரேரணைகளை நான் பிரேரேபிக்கிறேன்.

**Sir I move—**

**" That the allotment of Rs. 1,04,35,700 under Demand No. XXVI—Civil Works—Grants-in-aid be reduced by Rs. 100, and " that the allotment of Rs. 3,73,79,400 under Demand No. XXXIX—Capital Outlay on Civil Works be reduced by Rs. 100 ".**

**MR. SPEAKER**: இரண்டு பிரேரணைகளும் சபை முன் விவாதத்திற்கு வைக்கப்பட்டிருக்கிறது.

**SRI P. U. SHANMUGAM**: சட்டமன்றத் தலைவர் அவர்களே, மராமத்து இலாகா அமைச்சர் கனம் கக்கன் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற இந்த மான்ய கோரிக்கையை . . .

**MR. SPEAKER**: 24-வது மான்ய கோரிக்கையைப்பற்றி பிஸனஸ் அட்வைஸரி கமிட்டியில் எடுத்துக்கொள்ளுவதாக முடிவு செய்யவில்லை. இப்போது அதை எடுத்துக்கொள்ள மந்திரி அவர்கள் விரும்புகிறார்களா ?

**THE HON. SRI P. KAKKAN**: இந்த 24-வது மான்ய கோரிக்கையை 8–4–1958-ல் எடுத்துக்கொள்ளலாம். 9–40 a.m.

* **SRI P. U. SHANMUGAM**: சட்டமன்றத் தலைவர் அவர்களே, மராமத்து இலாகா மான்ய கோரிக்கையின் மீது நான் கொடுத்திருக்கின்ற வெட்டுப் பிரேரணையை பிரேரேபிக்கிற வகையில் சில கருத்துக்களை சொல்ல விரும்புகிறேன். பொதுவாக திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்திருக்கின்ற நாங்கள் இவ்விதம் வெட்டுப்பிரேரணை கொண்டுவர வேண்டிய அவசியம் வருகின்றது என்றால், செய்ய வேண்டிய காரியங்களை இந்த அரசாங்கம் அதிலிருந்து தவறி விடுகிற காரணத்தால் அவைகளை எடுத்துச்

[Sri P. U. Shanmugam] [29th March 1958

சொல்ல வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு ஆளாக்கப்பட்டிருக்கிறேமே தவிர, வேறு ஒரு காரணமும் அல்ல என்பதை தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இன்றையதினம் வெட்டுப் பிரேரேணைகளில் நான் குறிப்பிட்டிருக்கிறேன்—சர்க்கார் சென்ற ஆண்டு ஒதுக்கிய மான்யத் தொகை பூராவையும் செலவழிக்கவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறேன். நான் மற்றென்றை சட்ட மன்றத்தின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன். திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் "வடக்கு—தெற்கு" என்று பேசும்போது, அப்படி வடக்கிலே இங்கே ஏற்பட்டிருப்பதைவிட அதிகமாக என்ன முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று எடுத்துக்காட்டி புள்ளி விவரங்களை காட்டத் தவறி விடுகிறார்கள் என்று சொல்லக்கூடும். இந்த மான்யத்தில் "வடக்கு—தெற்கு" எப்படி வரும் என்று சொல்வோருக்குத் தங்கள் மூலமாகச் சமாதானம் சொல்வேன்—வருவாய் இனத்தில் சரிவர வந்திருக்கிறதா என்று பார்த்தால்—நான் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்வேன்—மத்திய சர்க்காரிடமிருந்து வருமென்று எதிர் பார்த்ததில் 9 லட்சம் ரூபாய் வாங்காமல் விட்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம் என்ன? என்று புரியவில்லை. அதாவது சென்ற ஆண்டு சொன்னபோது 22 லட்சம் ரூபாய் மத்திய சர்க்காரிடமிருந்து வரும் என்று சொல்லி விட்டு, அந்த ஆண்டில் வந்தது 12½ லட்சம் ரூபாய்—அதாவது 9½ லட்சம் ரூபாய் குறைவாக வந்திருக்கிறது. இந்த 9½ லட்சம் ரூபாயை மத்திய சர்க்கார் கொடுக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டார்களா?—அல்லது அதைப் பயன்படுத்திக்கொள்ள நம் மாநில சர்க்கார் தவறிவிட்டார்களா?—என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதே போல வருவாய் இனத்தில் "மிஸலேனியஸ்" என்ற தலைப்பில் மத்திய சர்க்காரிடமிருந்து வருவதாயிருந்த மான்யங்கள், சர்க்கார் உயர்நிலைப்பள்ளி கட்டிடங்களுக்காக 1 லட்சம் ரூபாயும், ஆதாரப் பள்ளி கட்டிடங்களுக்காக 1 லட்சத்து 16 ஆயிரமும், சேரி அபிவிருத்திக்காக 2 லட்சத்து 50 ஆயிரம் ரூபாயும், ஆக மொத்தம் 4 லட்சத்து 66 ஆயிரம் ரூபாய்—ஏறத்தாழ 5 லட்சம் ரூபாய்—என்ன ஆனது என்பது தெரியவில்லை. வருவதாயிருந்த மான்யங்களை மத்திய சர்க்காரிடமிருந்து வாங்கி அந்த வேலைகளைச் செய்யத் தவறி விட்டது என்று இந்த இலாகா மீது குற்றம் சாட்டுகிறேன்.

அது மட்டுமல்ல. இதிலே செலவினத்தில் ஒதுக்கப்பட்ட தொகைகளைச் சரிவர செலவழித்தார்களா?—என்றால், அதுவும் கிடையாது. சென்ற ஆண்டு ஒதுக்கிய தொகை சரிவர செலவழிக்கப்படவில்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்—கனம் கக்கன் அவர்கள் தயவு செய்து மன்னித்துக் கொள்ள வேண்டும். இந்த இலாகாவைப் பற்றிக் குறிப்பிடும்போது—ஸ்லோ இன் வொர்க் என்று சொல்லுகிறார்கள்—அதாவது மந்தமாக வேலை நடக்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த இலாகாவில் வேலை செய்கிற ஊழியர்கள் மந்தமாக இருக்கிறார்களா?—அல்லது சர்க்காரிடத்திலே மந்தம் இருக்கிறதா?—என்று எனக்குப் புரியவில்லை. ஏன் ஒதுக்கப்பட்ட தொகைகளைச் சரிவர செலவழிக்கவில்லை என்பதற்கான காரணங்களைக் காட்டவில்லை? போலீஸ்காரர்களுக்காகக் கட்டப்படும் கட்டிடங்கள் ஏன் சரிவரக் கட்டப்படவில்லை என்று குறிப்பிட்டிருக்க வேண்டும்.

வரவு செலவுத் திட்டத்தை ஆராய்ந்து பார்த்துப் புரட்டிப் பார்க்கும் போது கல்வித் துறை மான்யத்தில் 25 லட்சம் ரூபாயும், மருத்துவத்துறை மான்யத்தில் 3 லட்சத்து 61 ஆயிரம் ரூபாயும், போலீஸ் வேலைகளுக்கான மான்யத்தில் 34 லட்சத்து 44 ஆயிரம் ரூபாயும் செலவு செய்யத் தவறியிருக்கிறார்கள். ஒதுக்கிய மான்யத் தொகைகளைச் செலவு செய்யாமல் மிச்சப்படுத்திக் காட்டியிருக்கிறார்கள் கனம் கக்கன் அவர்கள். சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தின்படி ஆகவேண்டிய செலவுகளைச் செய்யாமல் தடை வைததிருந்தார்களோ என்பது புரியவில்லை. மிச்சப்படுத்தியதன் காரணம் என்ன என்று விளக்க வேண்டும்.

போலீஸுக்கு இத்தனை வீடுகள் கட்டித் தரப்போகிறோம், மருத்துவ மனைகள் இத்தனை ஏற்படுத்தப்போகிறோம், கட்டிடங்கள் இத்தனை கட்டப் போகிறோம் என்று சொல்லிவிட்டு, அவ்வளவும் கட்டாமல் விட்டிருக்கிறது

29th March 1958] [Sri P. U. Shanmugam]

என்று குறிப்பிடப்படுகிறது என்றால், வேலை மந்தம் எங்கே இருக்கிறது ? உடனடியாக—கனம் கக்கன் அவர்களைக் கேட்டுக் கொள்வேன்—எங்கு மந்தம் இருக்கிறது ?—எங்கு சோம்பேரித்தனம் இருக்கிறது ?—என்று கண்டுபிடித்து அவைகளை நீக்கவேண்டும். இப்படிச் சொல்லும்போது நிதி அமைச்சர் அவர்கள் வரவு செலவுத் திட்டத்தை சீர்படுத்த வேண்டிய நிலை இருந்தது என்று சொல்லக்கூடும். அப்படி என்று சொன்னால், மான்யக் கோரிக்கைகளைக் கேட்டபின், அந்தத் தொகைகளைச் செலவு செய்யாமல் விடுவானேன் ?—என்பதற்கு தக்க சமாதானம் சொல்லவேண்டும். இந்தத் தொகை வேண்டும் என்று கோரிக்கை கேட்டு, அந்த மானியக் கோரிக்கை களை இந்த மாமன்றத்திலே சமர்ப்பித்து, இந்த மாமன்றம் அதை அங்கி கரித்த பின்பு, அந்தத் தொகை செலவு செய்யப்படவில்லை என்றால் சர்க்கார் மீது குற்றம் சாட்டாமல் வேறு என்ன செய்ய முடியும் ? போலீஸ் கட்டிட வேலைகள் நடைபெறவில்லை—பாடசாலைக் கட்டிட வேலைகள் மந்த மாக இருக்கின்றன—மருத்துவ மனைகள் கட்டும் வேலைகள் துரிதமாக நடைபெறவில்லை—என்றால், இந்த துரிதக் குறைவுக்குக் காரணம் என்ன ? பணத்தைச் செலவழிக்கப் போவதாக வரவு செலவுத்திட்டத்திலே சேர்த்து விட்டு செலவழிக்க முடியாது விட்டிருப்பதோடு மத்திய சர்க்காரிடமிருந்து எதிர்பார்த்தத் தொகையை வாங்க தவறி விட்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம் என்ன என்று புரியவில்லை.

இப்படி இந்த சர்க்கார்—இந்தத் துறைகளில் மட்டுமல்ல—39-வது மான்யத்திலும் நான் கொடுத்திருப்பது போல 50 லட்சம் ரூபாய்க்கு மேல் மிச்சப்படுத்தியிருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம் என்ன என் பதை அமைச்சர் அவர்கள் தெளிவாக்கவேண்டுமென்று கேட்டுக் கொள் கிறேன். பொதுவாக மராமத்து வேலை சரிவரச் செய்யப்படவில்லை என்பதை வருத்ததோடு தெரிவித்துக் கொள்கிறேன். சினிமா படங்களில் காட்டி யிருக்கிறார்கள்—ஒரு சினிமாவில் வேடிக்கையாகச் சொன்னார்கள்—ரோடு போடுவதற்கு கற்களைக் கொட்டி விட்டு, என்ஜினீயர் அதை வந்து அளந்து பார்ப்பதற்கு 6 மாதம் ஆகும், அதை அளந்த பிறகு ரோடு போடுவதற்கு 6 மாதம் ஆகும் என்று சொன்னார்கள். பல இடங்களில் பாதைகளில் ஓரங்களில் கிராவல் கொட்டி வைத்திருக்கிறார்கள். 6, 7 அடிக்கு ஒரு முறை மண் கொட்டி வைத்திருக்கிறார்கள். தேர்தல் காலத்திலே கொட்டி வைத்து இரண்டு மூன்று ஆண்டு காலம் ஆகியும் வேலை செய்யப்படவில்லை. பல இடங்களில் வேலை செய்யப்படுவது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. பொது மராமத்து வேலைகளைச் செய்யச் சொல்லி கண்ட்ராக்டர்கள் செய்த பிறகு பணம் கொடுக்கும் போது இப்போது இல்லை என்று சொல்லி விடுகிறார்கள். சர்க்கார் உத்திரவு என்று பகிரங்கமாகக் கூறுகிறார்கள். காரணம் என்ன என்றால், ஏப்ரல் மாதம்தான் கொடுக்கமுடியும் என்று சொல்கிறார்கள். மார்ச் மாதக் கடைசிக்குள்ளாக இந்த வேலைகளை முடிக்க வேண்டுமென்று அவசர அவசரமாகச் செய்து விட்டு, ஏப்ரல் மாதத்தில் தான் கொடுக்க முடியும், இப்போது கொடுக்க முடியாது என்று இன்ஜி னீயர்கள் சொல்லுகிறார்கள். அதற்கும் காரணம் என்னவென்று தெரிய வில்லை. சென்ற சில தினங்களுக்கு முன்பு ஒரு கேள்விக்கு பதிலளிக்கையில் அமைச்சர் அவர்கள் சாத்தனூர் அணைத் திட்டத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையில் மிச்சம் 42 லட்சம் ரூபாய் என்று குறிப்பிட்டார்கள். அந்த மிச்சப் பணம் எதற்குச் செலவழிக்கப்பட்டது என்று குறிப்பிடப்படவில்லை. அப்போது அந்தப் பணத்தை திருவண்ணாமலையில் வேறு எதற்காவது பயன்படுத்தப்படுமா—சாத்தனூர் அணைத் திட்டத்திலிருந்து கால்வாய் ஒன்று வெட்டப் பயன்படுத்தப்படுமா—என்று கேட்டபோது அமைச்சர் கக்கன் அவர் கள் "அதை யோசித்துக் கொண்டிருக்கிறோம், முடியுமானால் செய்கிறோம்" என்று சொன்னார்.

மத்திய சர்க்கார் ஒதுக்கிய மான்யங்களைச் சரிவரப் பயன்படுத்திக்கொள்ள வில்லையென்றும், இந்த சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தில் ஒதுக்கிய தொகைகளைச் சரிவரச் செலவு செய்யவில்லை என்றும் நமது மாநில சர்க்காரை திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில் குற்றம் சாட்டு

[Sri P. U. Shanmugam] [29th March 1958

கிறேன். இந்த ஆண்டுக்கு தொகைகளை ஒதுக்கவேண்டுமென்று கொண்டு வந்திருக்கிற மான்யங்களின் பேரில் நான் கொடுத்திருக்கின்ற வெட்டுப் பிரேரணைகளை ஆதரிக்கவேண்டுமென்று எல்லா அங்கத்தினர்களையும் கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri K. VASUDEVAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது இந்த கிராண்ட்ஸ்-இன்-எய்ட் என்ற தலைப்பில் சர்க்காரினால் கொண்டுவரப் பட்டிருக்கும் இந்த மான்யத்தை ஆதரித்து, அதன் மேல் என்னுடைய கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். முக்கியமாக இப்போது கிராண்ட்ஸ்-இன்-எய்ட் என்ற தலைப்பின் கீழ் இந்த மாகாணத்திலுள்ள ஸ்தல ஸ்தாபன நிர்வாகத்தையும் அந்தஸ்தையும் பற்றிப் பேசுவதற்கு இந்த சந்தர்ப்பம் கொடுத்ததைப் பற்றி நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன் ஏனென்றால் பண்டைய காலத்தில் சர்க்காரினால் கொடுக்கப்பட்ட அந்த மான்யத்தைப்பற்றி மட்டுமே பேசுவதற்கு வாய்ப்பு இருந்தது. ஆனால் இப்போது ஸ்தல ஸ்தாபனம் நடத்தி வரும் பூரா பொறுப்பையும் சர்க்காராலே ஏற்று நடப்பதால் இப்போது இந்த கிராண்ட்ஸ்-இன்-எய்ட் சம்பந்தமாக பூரா அலுவல்களையும் பற்றிப் பேசுவதற்கு நல்ல சந்தர்ப்பம் இருக்கிறது என்றே நான் கருதுகிறேன். இப்போது இந்த மாகாணத்திலுள்ள ஸ்தல ஸ்தாபனங்கள் பூராவும் மக்களுக்கு நல்ல சேவையைச் செய்து கொண்டு இருக்கிறது. முக்கியமாக இந்த மக்களின் முன்னேற்றத்திற்கு இந்த ஸ்தல ஸ்தாபனங்கள் முக்கியமான அலுவல்களை நடத்தி வருவதால் இப்போது நமது மாகாணத்தில் உள்ள ஸ்தல ஸ்தாபனங்கள் மாறுதல் அடையக் கூடிய நிலையில் இருப்பதால், இந்த அமைப்பைப் பற்றி சில வார்த்தைகள் கூற ஆசைப்படுகிறேன். முக்கியமாக இந்த சர்க்காரின் மான்யம் இல்லாமலேயே இந்த ஸ்தல ஸ்தாபனங்கள் தங்கள் அலுவல்களை நேர்மையாக நடத்த சர்க்கார் ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்பொழுது ஸ்தல ஸ்தாபனங்களின் நிதி நிலைமை திருப்திகரமாக இல்லாததினாலும், அந்த அலுவல்களையெல்லாம் தாங்களே செய்ய முடியாததினாலும், சர்க்காரின் உதவியைக் கொண்டு தான் நடத்தக்கூடிய தருவாயில் அவைகள் இருக்கின்றன. இந்த மாகாணத்தில் மட்டும் இவ்வாறு அல்ல. அகில இந்தியாவிலுமே ஸ்தல ஸ்தாபனங்கள் தங்களுடைய அலுவல்களை தாங்களே செய்ய முடியாத நிலையில் இருப்பதை அகில இந்திய ஸ்தல ஸ்தாபன மகாநாட்டில் நன்றாக விளக்கியிருக்கிறார்கள். அது மட்டுமல்ல. இந்த மாகாணத்திலும் முனிசிபல் சேர்மன்கள் மகாநாடு சமீபத்தில் நடந்தது. அதிலிருந்தும் இந்த நிலைமை நன்கு விளங்கும் என்று நினைக்கிறேன். ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மான்யம் கொடுப்பதை விட்டுவிட்டு, அவைகளுடைய நிதி நிலைமையைப் பெறுக்குவதற்கான முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இது சம்பந்தமாக அநேக யோசனைகள் கூறப் பட்டிருக்கின்றன. அவர்களுடைய நிதி நிலைமையைப் பெறுக்குவதற்காக, அங்கே இருக்கும் பஸ் போக்கு வரத்து மூலம் கிடைக்கும் வருமானத்தில் ஒரு பகுதியையோ, இல்லாவிட்டால் மின்சார வசதிகள் செய்வதன் மூலம் கிடைக்கும் வருமானத்தில் ஒரு பகுதியையோ ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுத்தால், ஓரளவுக்கு நிதி நிலைமையைப் பெருக்க முடியுமென்று நினைக்கிறேன். முக்கியமாக "டெர்மினல் வரி" விதிக்கும் பாத்தியதையை சர்க்கார் ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுத்து அதன் மூலம் அவர்களுடைய நிதி நிலைமையைப் பெறுக்குவதற்கு ஒத்தாசை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

9-50 a.m. இப்பொழுது ஸ்தல ஸ்தாபனங்களின் அமைப்பை மாற்றுவதற்காக ஒரு கமிட்டி நியமித்திருப்பதாகவும், இந்தப் பிரச்னை அந்தக் கமிட்டியின் பரிசீலனையில் இருப்பதாகவும் கூறப்பட்டது. இந்த சமயத்தில் ஸ்ரீ ரத்தின சபாபதி முதலியார் கமிட்டியின் ரிப்போர்ட்டையும், அந்தக் கமிட்டியின் சிபார்சுகளையும் அடிப்படையாகக் கொண்டு ஸ்தல ஸ்தாபனங்களை திருத்தியமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்தக் கமிட்டியின் ரிப்போர்ட்டில் ஸ்தல ஸ்தாபனங்களின் எல்லா அலுவல்களையும் பற்றி விரிவாக கூறப்பட்டிருப்பதை சர்க்காருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். அதிலே சர்க்காரின் நிதி நிலைமையையும், முனிசிபாலிட்டி,

29th March 1958] [Sri K. Vasudevan]

லோகல் போர்டுகள், இவைகளுடைய அமைப்பைப் பற்றியும் ரொம்பவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில் இந்த மாகாணத்தில் முனிசிபல் நிர்வாகம் திருத்தியமைக்கப்படுமேயானால், அது மக்களுக்கு நல்ல பலனையும், மக்களின் முன்னேற்றத்துக்கு தேவையான வசதிகளையும் ஏற்படுத்தமுடியும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பொழுது சர்க்காரால் முனிசிபாலிட்டிகளுக்கும், ஜில்லா போர்டுகளுக்கும், பஞ்சாயத்துகளுக்கும், நல்ல முறையில் பணம் விநியோகிக்கப்பட்டு வருகிறது. நல்ல முறையில் அதைப் பயன் படுத்துவதற்கு சர்க்கார் வசதி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பஞ்சாயத்தில் இருக்கும் ரோடுகள் சுகாதாரத்திற்கு விரோதமாக இருப்பதனால், அதை உடனடியாகக் கவனித்து, தூசி இல்லாத ரோடுகளைப் போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இந்த மான்யத்தை ஆதரிக்கிறேன்.

**Sri J. MATHA GOWDER :** கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இந்தக் கோரிக்கையில் ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கும் மான்யங்களைப் பற்றிச் சொல்லியிருப்பதால், அதைப்பற்றி ஒருசில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மான்யம் கொடுக்கப்படும்பொழுது, குறிப்பாக மேஜர் பஞ்சாயத்துகளுக்கு சரியானபடி மான்யங்கள் கிடைப்பதில்லை. உதாரணமாக, என்னுடைய தொகுதியிலுள்ள கோட்டகிரி பஞ்சாயத்து போர்டானது குடி தண்ணீர் விஸ்தரிப்புக்காக ஸ்தல ஸ்தாபன டிபார்ட்மென்டாரிடம் எத்தனையோ தடவை மான்யம் கேட்டிருந்தார்கள். ஆனால் அதற்குப் பதில் வரும்பொழுது எல்லாம் "ரிஜெக்டட்" என்று தான் வருகிறதே தவிர, சரியானபடி அறிவிப்பு எதுவும் கொடுக்கப்படுவதில்லை. என்னிடத்தில் அவர்கள் "ஒன்று சர்க்கார் எங்களுக்கு மான்யமாகக் கொடுக்கட்டும், மான்யம் கொடுக்க அவர்களிடத்தில் பணம் இல்லையென்றால் கடனாகவாவது கொடுக்கட்டும், கடன் கொடுப்பதற்கும் பணம் இல்லையென்றால், அங்கேயுள்ள மக்களிடத்தில் கடன் வசூல் செய்வதற்கு எங்களுக்கு உத்திரவாவது கொடுக்கட்டும்" என்று சொன்னார்கள். இந்த மூன்று கோரிக்கைகளுக்கும் சர்க்கார் பதில் கொடுப்பதேயில்லை. எதற்கெடுத்தாலும் "ரிஜெக்டட்" என்று போட்டுவிடுகிறார்கள். இது விஷயமாக கனம் நிதி அமைச்சர் அவர்களிடத்தில் ஒரு மகஜர் கூட கொடுத்திருந்தேன். கோட்டகிரி பஞ்சாயத்தில் "ரூரல் வாட்டர் சப்ளை ஸ்கீம்" இல்லை. மேஜர் பஞ்சாயத்து போர்டாக இருப்பதால், அது நடுவாந்திரத்தில் இருக்கிறது. அது பெரிய நகரமும் அல்ல, சிறிய கிராமமும் அல்ல. நடுத்தரமாக இருக்கக்கூடிய மேஜர் பஞ்சாயத்து போர்டுகளின் நிலைமை மிகவும் சீர் கெட்டிருக்கிறது. அந்த மாதிரி நிலைமையில்தான் கோட்டகிரி மேஜர் பஞ்சாயத்து போர்டும் இருக்கிறது. குடி தண்ணீருக்காக மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். நான் அந்தக் கிராமப் பகுதியில் இருப்பவன். ஆகவே எனக்கு அங்கேயுள்ள நிலைமை நன்றாகத் தெரியும். அந்த பஞ்சாயத்திற்கு ஒன்று மான்யம் கொடுக்கவேண்டும். மான்யம் கொடுக்க முடியவில்லையென்றால் கடனாவது கொடுக்கவேண்டும். ரூபாய் 40,000 கடன் கேட்டிருந்தார்கள். கடன் கொடுக்க முடியாது என்று பதில் வந்திருக்கிறது. அதைப் பார்க்கும்பொழுது மிகவும் விசனிக்கத்தக்க நிலைமை தான் ஏற்படுகிறது. மான்யமாவது கடனாவது கொடுக்கவேண்டுமென்று ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். இதைச் செய்யமுடியவில்லை யென்றால், மக்களிடத்திலாவது கடன் எழுப்புவதற்கு அந்த பஞ்சாயத்து போர்டுக்கு அனுமதி கொடுக்கவேண்டும். அந்தப் பகுதி மக்கள் குடி தண்ணீருக்காக எத்தனை லட்சம் பணம் வேண்டுமானாலும் பஞ்சாயத்து போர்டுக்குக் கொடுக்கத் தயாராய் இருக்கிறார்கள். அதையாவது நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக நீலகிரிப் பகுதியிலுள்ள ரோடுகளைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். கீழ் பிரதேசத்தில் ரோடுகள் போட்டு சரியான பராமரிப்பு இல்லாமல் இருந்தாலும் கூட, ஒரு ரோடு போட்டால் அது ஐந்து வருஷத்திற்கு நிற்கிறது. ஆனால் மலைப்பகுதியில்

ஒரு ரோடு போட்ட பிறகு, ஒரு வருஷத்திற்குள் சரியான பராமரிப்பு இல்லையென்றால், அந்த ரோடே இல்லாமல் போய் விடுகிறது. இந்த வருஷம் போட்ட ரோடு, அடுத்த வருஷத்திற்குள் மழையினால் பாதிக்கப் பட்டு, ரோடே இல்லாமல் போய்விடுகிறது. இந்த ரோடுகளையெல்லாம் **P.W.D.**-யிடத்தில் ஒப்படைக்கவேண்டும். ஜில்லா போர்டு, பஞ்சாயத்து போர்டு இவைகளிடத்தில் ஒப்படைத்தால் வண்டிப் போக்குவரத்துக்கு உபயோகப்பட்டு, பிரயோசனமில்லாமல் போகிறது. சர்க்கார் வருஷா வருஷம் கொடுக்கும் தொகையும், மான்யமும் நஷ்டமாகிறது. ஆகவே தகுந்த முறையில் ரோடுகள் போடுவதை **P.W.D.** மூலமாகச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தவிர, மெடல் ரோடு மட்டும் போட்டுவிட்டால் மழைகாலத்தில் தங்குவதில்லை. ஆகவே "**Black topping**" போட்டால் தான் அந்த ஜில்லாவில் இருக்கக் கூடிய ரோடுகள் கொஞ்ச காலத்திற்கு தங்கி நிற்கும்.

நீலகிரியில், கிராமங்கள் ரோடுகள் உள்பட, எல்லா ரோடுகளுக்கும் "பிளாக் டாப்பிங்" போட ஏற்பாடு செய்யவேண்டும். ஏதோ நீலகிரி ஜில்லாவிற்கு தனியாக கேட்பதாக நினைத்துக் கொள்ளக்கூடாது. அங்கு ரோடுகள் மழையின் காரணமாக வெகு சீக்கிரத்திலேயே பாழாய் போவதால் அவைகள் சரியான முறையில் இருப்பது இல்லை. அடிக்கடி ரோடுகள் போடுவதால் சர்க்காருக்கு பணம் அதிக அளவில் செலவாகிறது என்பதன் காரணத்தால் ஒரேயடியாக மொத்தமாக ஒரு திட்டம் போட்டு
10 a.m. எல்லா ரோடுகளுக்கும் "பிளாக் டாபிங்" போட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

நீலகிரியில் இப்பொழுது ஒரு சர்க்கார் டூரிஸ்ட் ஹோம் இல்லை. வேறு மாகாணங்களிலிருந்து கோடைகாலத்திற்கு நீலகிரிக்கு வருகிற பெரிய பணக்காரர்கள் பங்களாக்களில் தங்குகிறார்கள். ஆனால் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர்கள் வந்தால் தங்குவதற்கு வசதி இல்லாமல் இருக்கிறது. ஆகையால் சர்க்காரே ஒரு டூரிஸ்ட் ஹவுஸ் கட்ட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இயற்கைக் காட்சிகளைப்பார்ப்பதற்கு செல்லும் ரோடுகளைப் பராமரிப்பதற்காக ஜில்லா போர்டுக்கு 2 லட்சம் ரூபாய் இவ்வருஷம் ஒதுக்கியிருப்பதாக குறிப்பிட்டிருக்கிறார்கள். அதைப்பற்றி நான் சந்தோஷப்படுகிறேன். ஏழு லட்ச ரூபாய் எஸ்டிமேட் போட்டதற்கு 2 லட்சம் ரூபாய் கொடுப்பது மிகவும் குறைவு. அது போதாது. அதை அதிகரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

இந்த ஜில்லாவில் மேட்டுப்பாளையத்திலிருந்து கூனூர் செல்வதற்கு ஒரு ரோடும், மேட்டுப்பாளையத்திலிருந்து கோத்தகிரி போவதற்கு ஒரு ரோடும் இருக்கின்றன. இந்த ரோடுகளை அகலப்படுத்துவதற்காக 42,000 ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. சுமார் 20 மைல் நீளம் இருக்கக் கூடிய ரோட்டிற்கு, மைலுக்கு 2,000 ரூபாய் போதாது. இந்த தொகையில் இதைச் செய்வது முடியாத காரியம். ஆகையால் இந்த ரோடை அதிகப்படுத்துவதற்கு அதிக பணம் ஒதுக்கப்பட வேண்டும். குந்தா பிராஜக்ட் ஏற்படுத்தப்பட்ட பிறகு மேட்டுப்பாளையம்-கூனூர் ரோடில் லாரிகள் போவது கிடையாது. குந்தா திட்டத்திற்கு கோத்தகிரி-மேட்டுப்பாளையம் ரோடு வழியாக சாமான்களை எடுத்துச் செல்லுகிறார்கள். இந்த ரோட்டில் 7-வது பர்லாங்கில் ஒரு பாலம் இருக்கிறது. அந்த பாலத்திற்கு கீழே முட்டுக் கொடுத்திருக்கிறார்கள். அது பார்ப்பதற்கு பயங்கரமாய் இருக்கிறது. குந்தாவிற்கு சாமான்கள் எடுத்துக் கொண்டு போகும் லாரிகள் கீழே விழுந்துவிடுமோ என்று பயமாய் இருக்கிறது.

இப்பொழுது இருக்கும் ரோடுகள் 6 அடி அகலம் தான் இருக்கிறது. முக்கியமாக மேட்டுப்பாளையம்-கூனூர் ரோட்டையும், மேட்டுப்பாளையம்-கோதகிரி ரோட்டையும் அகலப்படுத்த வேண்டியது மிகவும் அவசியம்.

குந்தா திட்டத்தில் வேலை செய்து பிழைப்பதற்காக பாமர மக்கள் மேட்டுப்பாளையம்-கோதகிரி ரோட்டில் நடந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். அங்கு திடீர் என்று மழை வந்து விடுகிறது. அப்படியே நனைந்து கொண்டு

29th March 1958] [Sri J. Matha Gowder]

வேலைக்குப் போகவேண்டியதாய் இருக்கிறது. அவர்கள் தங்குவதற்கு 10 மைலுக்கு ஒரு சத்திரமாவது கட்ட வேண்டும். இதற்கு அதிகப்படி செலவு ஆகாது என்று நினைக்கிறேன். இந்த இரண்டு ரோடுகளிலும் இரண்டு சத்திரங்கள் கட்ட வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்கிறேன்.

இப்பொழுது கிராமப்பகுதிகளில் சில இடங்களில் ஆஸ்பத்திரிகள் கட்டியிருக்கிறார்கள். ஆனால் ஆஸ்பத்திரியிலிருந்து மெயின் ரோடுக்கு வரக் கூடிய ரோடு மிகவும் மோசமான நிலையில் இருக்கிறது. அங்கு நோயாளிகளைக்கட்டி தூக்கிக் கொண்டு போக வேண்டிய நிலை இருக்கிறது. ஆகையால் இந்த ரோடுகளை செப்பனிடவேண்டும் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

கோதகிரியில் சர்க்கார் நடத்தும் ஹை ஸ்கூல் ஒன்று இருக்கிறது. அங்கு சரியான கட்டிட வசதிகள் இல்லை. அதைப்பற்றி அறிக்கையில் ஒன்றும் குறிப்பிடப்படவில்லை. ஆகையால் அந்த ஹை ஸ்கூலுக்கு வேண்டிய கட்டிடங்களும், முக்கியமாக ஹாஸ்டலும் கட்ட வேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் கூற வேண்டியது அவசியமாகிறது. கோதகிரியில் உள்ள ஆஸ்பத்திரி கட்டிடம் மிகவும் மோசமான நிலைமையில் இருக்கிறது. அது ஒரு பழைய கட்டிடம். அதை ரொம்ப நாளாகவே சீர்திருத்தம் செய்யவில்லை. அந்த ஆஸ்பத்திரி கட்டிடத்தை சரிபார்க்க வேண்டும் என்று ஸ்தல ஸ்தாபன அமைச்சரை கேட்டுக் கொள்கிறேன். இது ஹெல்த் இலாகாவின் கீழ் வருகிறது என்று நினைக்கிறேன். அப்படியானால் அந்த அமைச்சர் இதை கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இந்த ஆஸ்பத்திரியை விஸ்தரித்து அதிக படுக்கை வசதிகள் செய்து கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சென்ற ஆண்டு இதற்காக 25,000 ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தும் ஒரு காசும் செலவழிக்கப்படவில்லை. அது இந்த ஆண்டிலாவது ஒதுக்கப்படுமா என்று எனக்கு தெரியவில்லை. 25,000 ரூபாயே போதாது. அந்த பணத்தையும் அதிகப்படுத்தும்படி கேட்டுக் கொள்கிறேன்.

**Sri A. V. P. PERIAVALAGURUVA REDDI** : கனம் சபா நாயகர் அவர்களே, இப்போது வந்திருக்கும் ரோடு, கட்டிட மான்யத்தின் மீது இரண்டொரு வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். வெட்டுப் பிரேரேபணையைக் கொடுத்து, பேசிய அங்கத்தினர் " பணம் சரியான முறையில் செலவழிக்கப்படவில்லை, பணத்தை மிச்சப்படுத்தி விட்டார்கள் " என்று சொன்னார்கள். அதற்கு கனம் மந்திரி அவர்கள் " சரியான கண்டிராக்டர் கிடைக்கவில்லை. ஆகையினால் வேலை சரியாக நடக்கவில்லை" என்று அவர் பதில் சொல்வார் என்று நான் நினைக்கிறேன். இந்த விஷயத்தில் என்ன குறை என்று பார்க்கவேண்டும். 10-07 a.m.

ஒரு கண்டிராக்டு வேலைக்கு டெண்டர் கேட்டு, 10, 20 கண்டிராக்டர்கள் இருக்கிறார்கள் என்றால், பணம் கட்டி டெண்டர் கேட்ட பிறகு, கட்டின பணத்தை திருப்பி வாங்குவதற்கு 3, 4 வருஷங்கள் ஆகிறது. இந்த நிலைமையில் எந்த கண்டிராக்டர் பணத்தை கட்டி வேலையை எடுத்துக் கொண்டு செய்வான் என்று எனக்கு தெரியவில்லை. ஆகையினால், பணத்தை கட்டி டெண்டர் கொடுத்த பிறகு, டெண்டர் விட்டுவிட்ட ஆளைத் தவிர மற்றவர்களுக்கு அன்றைய தினமே பணத்தை திருப்பித் தர வேண்டும் என்கிற ஒரு உத்திரவை கனம் மந்திரி அவர்கள் போட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அப்போது எல்லா கண்டிராக்டர்களும் டெண்டர் கொடுக்க வருவார்கள். இப்பொழுது ஒரு என்ஜினியர் ஒரு கண்டிராக்டரை கையில் வைத்துக் கொண்டு அவருக்கே அந்த வேலை கிடைக்க வேண்டும் என்ற முறையில், மற்ற கண்டிராக்டரை வரவொட்டாமல் விரட்டுவதற்காகவும் இம்மாதிரி தொல்லை கொடுக்கிறார்கள்.

அந்தக் காலத்தில் சர்க்காருக்கு பி.டபிள்யூ.டி. ஒரு தத்துப் பிள்ளை என்று சொல்வார்கள். பணம் படைத்தவர்கள் குழந்தைகள் இல்லை என்று தத்து எடுத்துக் கொள்வது வழக்கம். அந்தத் தத்துபிள்ளைக்கு பணத்தைப் பற்றிய கஷ்டம் தெரியாது. அவன் மைனர் விளையாட்டுகள்

[Sri A. V. P. Periavalaguruva Reddi] [29th March 1958

விளையாடுவான். அரசாங்கத்தினுடைய பணத்தையும் இந்த பி.டபிள்யூ.டி. அதிகமாக செலவழிக்கிறது. இதில் கனம் மந்திரி அவர்கள் கொஞ்சம் கவனம் செலுத்தி லகான் போட வேண்டும்.

இப்பொழுது முப்பாறு என்ற இடத்தில் ஒரு பாலம் கட்ட கண்டிராக்டுக்கு விடப்பட்டிருக்கிறது. ஒரு யூனிடடுக்கு 5 மூட்டை சிமிண்டிற்குப் பதிலாக 7 மூட்டை வேண்டும் என்று எஸ்டிமேட் போட்டிருக்கிறார்கள். எனக்கு இந்த கண்டிராக்ட் விஷயம் ஒன்றும் தெரியாது. நான் கேள்விப்பட்டதை "பிளெயின்" ஆகச் சொல்கிறேன். அதிகப்படியாக இருக்கும் 2 மூட்டை சிமிண்டைக் கொண்டே 75,000 லாபம் கிடைத்ததாக அந்த கண்டிராக்டர் சொல்லுகிறார். கொஞ்ச நாளைக்கு முன் அவர் "பிளஷரில்" போய்க் கொண்டிருந்தார். இரண்டு மூட்டை சிமிண்டை விற்றதினாலேயே தனக்கு 75,000 ரூபாய் லாபம் கிடைத்ததாக சொன்னார். இன்னும் அங்கு மணல் தோண்டவே ஆரம்பிக்கவில்லை. இதையெல்லாம் நாம் சரியாகப் பார்க்க வேண்டும். கனம் மந்திரி அவர்கள் இந்த விஷயங்களில் கவனம் செலுத்தி எல்லா கண்டிராக்டுக்கும் நல்லமுறையில் டெண்டர் எடுக்கும் படியான நிலைமை ஏற்படும்படி செய்யவேண்டும்.

10-10 a.m. கண்ட்ராக்டர்கள் வேலை செய்வதற்காக பணத்தை உடனே கட்டுகிறார்கள். கண்ட்ராக்ட் எடுக்கவில்லை என்றால் அந்தப் பணத்தை அவர்களுக்கு உடனே திருப்பிக்கொடுக்கப்படுவது இல்லை. சில காண்ட்ராக்டர்களுக்கு உடனே திருப்பிக் கொடுத்தாலும் பல கண்ட்ராக்டர்களுக்கு உடனே திருப்பி கொடுப்பதாக இல்லை. கொடுக்க வேண்டிய பணம் சாங்கஷன் ஆவதற்கும் டிலே ஆகிறது. சாங்க்ஷன் ஆவதற்கு இரண்டு மாதங்களானாலும் உடனே கிடைப்பது இல்லை. சில கண்ட்ராக்டர்களை வரவிடாமலே தடுத்து விடுகிறார்கள் இந்த மாதிரியான தொல்லைகள் இருப்பதால்தான் கண்டார்க்டர்கள் கண்ட்ராக்ட் எடுக்க வர மாட்டேன் என்றும் பணம் கொடுப்பதில் இப்படிப் பட்ட டிலே ஏற்படுவதால் தான் கண்ட்ராக்டர்கள் ரோடு வேலைகளுக்கு வர மாட்டேன் என்றும் சொல்லுகிறார்கள். எனக்கு இது நேரில் தெரியா விட்டாலும் நாட்டில் பேசிக் கொள்வது என் காதில் விழுகிறது. கண்ட்ராக்டர்கள் இல்லாமல் வேலை செய்ய இல்லை என்று சொல்ல முடியாது. வேலை செய்வதற்கு கண்ட்ராக்டர்கள் இல்லாமல் இல்லை. இதற்கு முன்னதாக கண்ட்ராக்டர்கள் 100-க்கு 30 இலாபம் அடைந்தார்கள். அதில் பத்து அல்லது பதினைந்து ரூபாய் சில்லரை செலவுகளுக்குப் போனாலும் 100-க்கு 15 அல்லது இருபது ரூபாய் தாராளமாக இலாபம் கிடைத்து வந்தது. இப்பொழுது 100-க்கு 50 முதற்கொண்டு அறுபது வரைக்கும் இலாபத்தை எதிர் பார்க்கிறார்கள். இந்த நிலைமையில் இப்பொழுது வேலைகள் நடந்து கொண்டு வருகிறது. வேண்டுமென்றே இந்த வார்த்தைகளை நான் சொல்லவில்லை. நடைமுறையில் நடந்து வருவதைத்தான் சொல்லுகிறேன். கிராமங்களிலுள்ள ரோடுகளானாலும் பஞ்சாயத்து ஏரியாவில் இருக்கிற ரோடுகளானாலும் பல இம்சைகள் இருக்கின்றன. ஹைவேஸ் டிபார்ட்டிமெண்ட் இஞ்சினியர்களுக்கு எழுதி அது சாங்கிஷனாகி வருவதற்கு டிலே ஆகிறது. சில சமயங்களில் இரண்டு வருஷங்கள் கூட டிலே ஆகிறது. அப்படி டிலே ஆவதால் பல ரோடுகள் அமைக்கப்படாமலேயே, ரிப்பேர் செய்யப்படாமலேயே நின்று போய் விடுகின்றன. இது யாருடைய பொறுப்பாக இருந்தாலும், இவைகளை உடனடியாக கவனித்து ரோடுகள் எங்கெங்கே போடவேண்டுமோ அங்கேயெல்லாம் போடுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். சில பஞ்சாயத்து ஏரியாக்களில் ரோடுகளே கிடையாது. சில இடங்களில் மெயின் ரோடுக்கும் கிராமங்களிலுள்ள ரோடுகளுக்கு சம்பந்தம் இல்லாமலேயே இருக்கிறது. சில்லரை ரோடுகளை சரியான முறையில் கவனிப்பதாகவே இல்லை. இவைகளை கவனித்துச் செய்யும்படி கனம் மந்திரி அவர்கள் உத்தரவு போட வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இது ரொம்பவும் முக்கியமான இலாகாவாக இருப்பதால், இதில் பணம் அனாவசியமாக செலவழிக்கப்படுவதால் இதில் மந்திரி அவர்கள் அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த இலாகாவில் பணம் கொள்ளை போகிறது.

29th March 1958] [Sri A. V. Periavalagurana Reddi]

அப்படிப் போகாமல் இருப்பதற்கு கனம் மந்திரி அவர்கள் நடவடிக்கை எடுத்து இந்த இலாகாவை நல்ல முறையில் நடத்தும்படியாக கேட்டுக் கொண்டு முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri K. P. PALANISWAMI** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ரோடு மராமத்து இனத்திற்காக ஒதுக்கப்பட்ட தொகையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைச் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது சிவில் வொர்க்ஸ் சம்பந்தமாக பல வேலைகள் பல ஊர்களில் நடந்து வருகின்றன. என்னுடைய தொகுதியில் மலைப் பிராந்தியங்களுக்குப் போவதாக இருந்தால் நல்ல ரோடுகள் கிடையாது. அங்கே மலைப் பிராந்தியங்களுக்குச் சென்று விறகுகளை எடுத்துக்கொண்டு வரவேண்டியதாக இருப்பதால் அங்கு போவதற்கு நல்ல ரோடு வசதிகள் கிடையாது. அங்கே ரோடுகள் இல்லாமல் இருப்பதால் பலவிதமான கஷ்டங்களையும் அவர்கள் அனுபவித்துக் கொண்டு வருகிறார்கள். அந்த வேலைகளைச் செய்வதற்கு என்று சிவில் வொர்க்ஸ் டிபார்ட்மெண்டில் ஒரு தொகையை ஒதுக்கி வைத்து ரோடுகளைப் போட்டுக்கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அங்கே கால்நடைப் பாதையாவது போட்டுக் கொடுத்தால் சௌகர்யமாக இருக்கும். அதற்காவது தொகையை ஒதுக்க வேண்டுமெ என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

ரோடுகள் வசதிக்காக என்று இப்பொழுது 66,864 ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். (ஸ்ரீ டி. டி. டேனியல் தலைமை வகித்தார்.)

இப்பொழுது ஜில்லா போர்டுகளுக்கு குறைவான வருமானம் வருகிறது. சில பஞ்சாயத்து போர்டுகளுக்கு மிகவும் குறைவான வருமானம் வருகிறது. பஞ்சாயத்து போர்டுகளால் ரோடு வசதிகளைச் செய்து கொடுக்க முடியாமல் இருக்கிறார்கள். அவர்களுக்கு பண வசதி இல்லாத காரணங்களால் அவர்களால் நல்ல ரோடுகளைப் போட்டுக் கொடுக்க முடியாமல் இருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் ஒரு ஊருக்கு சுமார் இரண்டு மைல் தூரம் போக வேண்டியதாயிருக்கிறது. நடப்பதற்குக் கூட வழி இல்லாமல் இருக்கிறது. மணலில் நடக்க வேண்டியதாக இருக்கிறது. இம்மாதிரியான ஊர்களுக்கு தனியாக தொகைகளை ஒதுக்கி வைத்து நடைபாதைகளையாவதுப் போட்டுக் கொடுக்க வழிவகை செய்ய வேண்டும் என்று அரசாங்கத்தை நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

தொழிலாளர்கள் அதிகமாக வசிக்கக்கூடிய ஊர்களில் புழுதி அடைந்த ரோடுகள் அநேகம் இருக்கின்றன. அங்கே தொழிலாளர்கள் அதிகமாக போக்குவரத்து செய்வதால் அதிகப்படியான புழுதி கிளம்பி அதனால் டி. பி. போன்ற வியாதிகள் அதிகமாக வருவதற்கு ஏதுவாக இருக்கிறது. அப்படிப்பட்ட இடங்களில் நல்ல முறையில் தார் ரோடுகளைப் போட்டுக் கொடுத்தால் நலமாக இருக்கும். புழுதி இல்லாமல் ரோடுகள் இருந்தால் மிகவும் நலமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மேலும் மத்திய சர்க்கார் நடத்தும் போக்குவரத்து ரோடுகளுக்கு முக்கியமாக ஒரு யோசனையைச் சொல்ல விரும்புகிறேன். இப்பொழுது கல் ரோடுகளையும், மெட்டல் ரோடுகளையும் போட்டுக்கொண்டு வருகிறார்கள். அப்படிப் போடும்போது முக்கியமான ரோடுகளுக்கு காங்க்ரீட் ரோடுகள் போட்டுக் கொடுத்தால் நலமாக இருக்கும். கோயம்பத்தூரிலிருந்து பீளமேடு ஏரோட்ரோம் வரைக்கும் 1946-47-ல் ஒரு ரோடு அமைக்கப்பட்டது. பத்து அல்லது 12 வருஷங்கள் அதற்கு ஏற்பாடு செய்தார்கள். அந்த பத்து அல்லது பனிரெண்டு வருஷ அனுபவத்தில் மெட்டல் ரோடு மண் ரோடுகள் போட்டு அவைகளை மெயின்ட்டெயின் பண்ணுவதைக் காட்டிலும் காங்க்ரீட் ரோடு போட்டால் சிலவு குறைவாக ஆகிறது என்று கணக்குப் போட்டுச் சொல்லுகிறார்கள். மெடல் ரோடு போடும் செலவும், அவைகளின் பராமரிப்புச் செலவும் காங்க்ரீட் ரோடு போடும் செலவைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறது என்று கணக்கிட்டிருக்கிறார்கள். ஆகவே இம்மாதிரி முக்கியமான போக்குவரத்து இருக்கும் ரோடுகளை மெட்டல் ரோடுகளாகவும், மண் ரோடுகளாகவும் போடுவதற்கு பதிலாக காங்க்ரீட் ரோடாகப் போட்டால் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்ள

விரும்புகிறேன். ஆகவே காங்கீரீட் ரோடுகளைப் போடுவதற்கு நமது அர்சாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்ய வேண்டும் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மேலும் என்னுடைய தொகுதியில் ஆலந்துரை, பொளுவாம்பட்டி போன்ற இடங்களில் ரோடுகள் அநேகமாக இல்லை. வண்டிகள் மலை மேல் போக வேண்டியதாக இருக்கிறது. பக்கத்தில் ஒரு ஹை ஸ்கூல் இருக்கிறது. அங்கே மாணவர்கள் படித்து வருகிறார்கள். நடுவில் நொய்யல் நதி குறுக்கிடுகிறது. நதியில் தண்ணீர் வரும் காலங்களில் மாணவர்கள் பள்ளிக்கூடத்திற்கு வருவதற்கு தடைபடுகிறது. அதனால் அங்கு ஒரு பாலத்தைக் கட்டிக்கொடுக்க வேண்டும் என்று கனம் மந்திரி அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிக் கட்டிக் கொடுக்க வேண்டும் என்று இதற்கு முன்பே இரண்டு மூன்று தடவை சொல்லி யிருக்கிறேன். அதற்கு வேண்டிய பணத்தை இந்த வருஷத்திலேயே ஒதுக்கி வைத்து அந்தப் பாலத்தைக் கட்டிக் கொடுக்கும்படியாக கேட்டுக்கொண்டு இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri A. V. P. ASAITHAMBI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, மராமத்து மான்யத்தின் மீது எழுப்பப்பட்டுள்ள வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகளைக் குறிப்பிட விரும்புகிறேன். பொதுவாக இந்த மான்ய கோரிக்கைக்கு ஒதுக்கப்பட்ட தொகையும் இந்த அரசாங்கம் செலவிட்ட தொகையையும், மதிப்பிடப்பட்ட தொகையையும் கணக்கிட்டுப் பார்க்கும்போது இந்த அரசாங்கம் சரிவர தங்களுடைய வேலை திட்டங்களை செய்யவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது. பொதுவாக ஒரு நாட்டிற்கு ரோடு என்பது மிக மிக அவசியமானதும், அவசரமானதும் ஆகும் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். வெளி நாடுகளில் ஒரு மைல் சுற்றளவுள்ள அதாவது ஒரு மைல் நீளம் ஒரு மைல் அகலம் உள்ள இடங்களுக்கு ஒரு மைல் நல்ல ரோடு இருப்பதை நாம் பார்க்கிறோம். அந்தக் கணக்குப்படி பார்த்தால் நம்முடைய நாடு பூராவுக்கும் பத்து லட்சம் மைல் நீளமுள்ள ரோடுகள் தேவை என்பதை கணக்கிட்டிருக்கிறார்கள். ஆனால் நம்முடைய இந்திய துணைக்கண்டத்தைப் பொறுத்த வரையில் இரண்டு லட்சம் மைல் நீள ரோடுகளையே இன்னும் போட்டு பூர்த்தியாக வில்லை என்று தெரிய வருகிறது. நமது சென்னை ராஜ்யத்தைப் பொறுத்தவரையில் இருக்கிற ரோடுகள் சரிவர கவனிக்கப்படாமல் இருப்பதையும், புதியதாக பல ரோடுகள் போடப்படாமல் இருப்பதையும் பார்க்கிறோம். இப்படிப்பட்ட நிலைமையை சுதந்தரம் அடைந்த பதினொரு ஆண்டிற்கு அப்புறமும் பார்க்கிறோம் என்று சொன்னால் நாம் உள்ளபடியே வெட்கப்படவேண்டும். இரண்டு தினங்களுக்கு முன்பு செஞ்சிக்கு பக்கத்திலுள்ள ஈயகுணம் என்ற கிராமத்திற்கு நானும் எனது நண்பர் கோவிந்தசாமியும் போயிருந்தோம். அந்த கிராமத்திற்குப் போக முடியாத நிலைமையில் அந்த கிராமம் அமைந்து இருந்தது. அங்கு போவதற்கு ஒரு சாதாரணமான ரோடு கூட இல்லாமல் இருந்தது, அப்படிப்பட்ட கிராமத்திற்குப் போவதற்கு எண்ணற்ற சிரமங்கள் இருக்கின்றன. நகரங்களிலிருந்து கிராமங்களுக்குப் போக முடியாத நிலைமையில் நாம் இன்னும் இருந்து கொண்டிருக்கிறோம். நகரங்களும் கிராமங்களும் ரோடு இணைப்பு இல்லாமல் இருக்கின்றன. ரோடு இணைப்பு இல்லாத காரணத்தால் போக்குவரத்து இல்லாத காரணத்தால் தான் விலைவாசிகள் உயர்ந்திருக்கிறது. ரோடுகள் இணைப்பு இல்லாத காரணத்தால் முதுகுளத்தூரில் பெரிய பெரிய கலவரங்கள் நடைபெற்றன. அதன் காரணமாகத்தான் எவ்வளவோ சேதங்கள் விளைந்தன ரோடுகள் இணைப்பு இல்லாத காரணத்தால் தான் உடனடியான தேவைகளை நகரங்களிலிருந்து கிராமங்களுக்கு அனுப்ப முடியாமல் இருக்கிறது. ஒரு அரசாங்கம் மக்களின் தேவைகளை கவனிக்க வேண்டுமானால் கிராமங்களுக்கும் நகரங்களுக்கும் ரோடு இணைப்பு இருக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதனால் நகரங்களையும் கிராமங்களையும் இணைக்கும்படியான ரோடுகளை போட்டுக்கொடுக்க வேண்டியது மிக மிக அவசியமும் அவசரமும் ஆக இருக்கிறது. திட்டமிட்டுப் போடு

29th March 1958] [Sri A. V. P. Asaithambi]

கிறோம் என்று சொல்லுகிறார்களே தவிர திட்டமிட்டபடி போட்டதாக இது வரையிலும் தெரியவில்லை. திட்டம் வகுத்து ஒரு வருஷத்திற்குள் இவ்வளவு போட வேண்டும் என்று திட்டமிட்டு, அந்த வரிசைக் கிரமமாக போடுவது என்று இந்த அரசாங்கம் திட்டமிட்டதாக இது வரையிலும் தெரியவில்லை. பொதுவாகப் பார்க்கும்போது இம்மாதிரி செய்ய வேண்டிய காரியங்களுக்கு மத்திய சர்க்கார் நல்ல உதவி செய்து வருவது நாம் அனைவருக்கும் தெரியும். எங்களுடைய கட்சியின் சார்பாக குற்றச்சாட்டு கள் செய்வதெல்லாம் மத்திய சர்க்கார் நம்முடைய சர்க்காருக்கு போதிய உதவி செய்யவில்லை என்பதுதான். அப்படிச் செய்தாலும் அவர்கள் குறைவாகச் செய்கிறார்கள் என்பதும் எங்களுடைய குற்றச்சாட்டுகளாகும். ஆனால் இன்றைக்கு இருக்கிறதைப் பார்த்தால் மத்திய சர்க்கார் கொடுத்த தொகையைக்கூட இந்த சர்க்கார் வாங்காது, வாங்கிச் செலவழிக்காத நிலையிலிருப்பதை நாம்பார்க்கிறோம். உதாரணமாக சொல்லவேண்டுமென்று சொன்னால், 'ஸ்லம்' பகுதிகளையெல்லாம் அப்புறப்படுத்துவதற்காக மத்திய சர்க்கார் ஒதுக்கியிருக்கும் தொகை ரூ. 2,50,000. ஆனால் இந்தப் பணம் வாங்கப்பட்டதா, வாங்கப்படவில்லையா, ஏன் வாங்கப்படவில்லை என்பதற்கெல்லாம் இந்த அரசாங்கம் சரியானபடி காரணம் காட்டவில்லை. ஏன் இவர்கள் சரியானபடி காரணம் காட்டவில்லை என்பதை பார்க்கும்பொழுது, அவர்கள் வாங்கவில்லையா என்ற சந்தேகம் எங்களுக்கெல்லாம் ஏற்படுகிறது. பொதுவாக என்னுடைய ஆயிரம்விளக்கு தொகுதியில் நிறைய பகுதிகள் 'ஸ்லம்' ஏரியாவாக இருக்கிறது. குடிசையில் வாழக்கூடிய நிலைமையில் தான் இருக்கிறது. இவைகளையெல்லாம் அப்புறப்படுத்துவதற்கு இம்மாதிரி கொடுக்கப்படுகிற தொகையை வாங்காம லேயே இந்த சர்க்கார் இருக்கிறது என்று சொன்னால், சீக்கிரத்திலேயே அவர்களுக்கு நல்ல வீடுகள் அமைத்துக் கொடுக்க சர்க்கார் முன்வருவார்கள் என்ற நம்பிக்கையை நாம் எப்படி பெறமுடியும்? மத்திய சர்க்கார் கொடுக்கும் தொகையை ஏன் வாங்கவில்லை என்பதை நம் சர்க்காரை கேட்க ஆசைப் படுகிறேன். கொடுக்கிறேன் என்ற தொகையை வாங்கவில்லை என்று சொன்னால் அதுநிர்வாகத் திறமையின் குறைவைத்தான் காட்டுகிறதே தவிர வேறு ஒன்றுமில்லை. கொடுப்பதாகச் சொன்ன தொகையை கேட்கவில்லை, வாங்கவில்லை என்ற நிலைமை ஏற்பட்டால் மத்திய சர்க்காரைக் கூட குற்றம் சாட்டமுடியாத நிலைமை வராதா? எனவே ஏன் இந்தத் தொகையை சர்க்கார் வாங்கவில்லை என்பதற்கு சரியான சமாதானம் சொல்லவேண்டு மென்று நான் கேட்கிறேன்.

அடுத்தபடியாக, 'ஸ்டேட்' ரோடுகளுக்காக மத்திய சர்க்கார் நமக்காக சாங்ஷன் செய்த தொகை ரூ. 22,06,900. ஆனால் நாம் வாங்கியது ரூ. 12,53,600. மீதித் தொகையை ஏன் வாங்கவில்லை? வேலை நடப்ப தற்கு கண்டிராக்டர்கள் இல்லை, அதனால் ரோடுகள் போடமுடியவில்லை என்று சர்க்கார் சொல்லுவார்களேயானால், அது சரியான காரணமாகாது. நல்ல முறையில் ரோடுகளை போடுவதற்கு முயற்சிக்கலாம். ஆனால் கொடுக் கின்ற தொகையிலே மீதப்படுத்துவது தவறான கொள்கையாகும். ஏன் இந்த சர்க்கார் பூரா தொகையையும் வாங்கவில்லை, மீதப்படும்படியான நிலையை ஏன் இந்த சர்க்கார் ஏற்படுத்தியது என்பதற்கு சர்க்கார் கட்டாயம் பதில் சொல்லவேண்டும்.

போலீஸ்காரர்களுக்கு வீடு கட்டிக்கொடுப்பதற்காக சென்ற பட்ஜெட்டிலே ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 84,58,100. ஆனால் செலவானது ரூ. 50,13,900 ஏன் ரூ. 34,44,200 இந்த சர்க்கார் செலவழிக்கவில்லை. வீடுகள் கட்டி கொடுப்பதற்கு கண்டிராக்டர்கள் இல்லை என்று சொன்னால், சென்னையை பொறுத்தவரையில் எத்தனையோ கம்பெனிகள் வேலை இல்லாமலே இருக் கின்றன. கட்டிட வேலைகளை அவர்களிடம் ஒப்படைத்து செய்யலாம். அல் லது தனியார்களை சேர்த்து கூட்டுறவு முறையிலே செய்யலாம். அதையும் சர்க்கார் செய்யவில்லை. 10-20 a.m.

அதுமாத்திரமல்ல. கல்விச் சாலைகளுக்கு கட்டிடம் கட்டுவதற்காக சர்க் கார் வருஷா வருஷம் தொகை ஒதுக்குகிறது. 1956-57-ல் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 65,22,300. ஆனால் கொடுத்த தொகை

ரூ. 40,62,200. மீதப்பட்ட தொகை ரூ. 24,60,100. இந்தத் தொகையை ஏன் மீதப்படுத்த வேண்டும்? எத்தனையோ உயர்நிலை பள்ளிகள் கட்டிடத்திற்காக கேட்கிறார்கள். ஏன் கொடுக்கவில்லை? கேட்டால் கொடுக்கலாம். 'அவர்கள் கேட்கவில்லை, நாங்கள் என்ன செய்வது' என்று சொல்லி சர்க்கார் தப்பித்துக்கொள்ள முடியாது. நம்முடைய ராஜ்யத்திலே முதலமைச்சர் காமராஜ் அவர்களின் தொகுதியாகிய விருதுநகரில் க்ஷத்திரிய வித்தியாலய ஹைஸ்கூல் நிர்வாகிகள் 1957-ம் வருஷம் மார்ச் மாதம் 31-ம் தேதியோடு முடிவடையும் ஆண்டில் கட்டிடம் கட்டுவதற்காக, நம்முடைய நிதி அமைச்சர் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் அவர்கள் அஸ்திவாரக்கல் நாட்டிய கட்டிடத்தை எழுப்புவதற்காக, பணம் கேட்டார்கள். அந்த ஆண்டில் இந்தப் பணத்தை தருவதற்கு மறுத்துவிட்டார்கள். பணமில்லை, அதனால் கொடுக்கவில்லை என்று சொன்னால் அதில் அர்த்தம் இருக்கிறது. ரூ. 24,60,100 மீதம் இருக்கிறபொழுது, சர்க்கார் ஏன் இந்தக் கோரிக்கையை பூர்த்தி செய்திருக்கக்கூடாது என்பதை நான் அறிய விரும்புகிறேன். இந்த ஆண்டில் கொடுக்கிறேன் என்று சொல்லுகிறார்கள். இந்த ஆண்டில் கொடுப்பார்கள் என்று சொன்னால், அடுத்த ஆண்டில் விதிகளின்படி புது கட்டிடங்களை அந்தப் பள்ளிக்கூட நிர்வாகிகள் கட்ட முடியாது. போன ஆண்டுக் கணக்கிலேயே கொடுத்திருந்தால் அவர்கள் கட்டிடம் கட்டியிருப்பார்கள். இந்த ஆண்டில் கட்டிடம் கட்டி வேலையை முடித்திருப்பார்கள். வரும் ஆண்டில் அந்தக் கட்டிடத்தை 'இம்ப்ரூவ்', செய்யலாம். இவ்வளவு தொகை மீதப்பட்டும் கூட, சர்க்கார் இதை அனுமதிக்காமல் மறுத்திருப்பது நியாயமானதா என்பது பற்றி சர்க்கார் நமக்கு பதில் சொல்லியாகவேண்டும்.

மொத்தமாக நாம் பார்க்கும்பொழுது, 'ஸ்லம் கிளியரன்ஸாக' இருக்கட்டும், ரோடுகளாக இருக்கட்டும், போலீஸ்காரர்களுக்கு வீடு கட்டுவதாக, இருக்கட்டும், கல்விச் சாலைகளுக்கு கட்டிடங்கள் கட்டுவதாக இருக்கட்டும் இவைகளுக்கெல்லாம் சர்க்கார் நிறைய பணம் ஒதுக்கிய போதிலும், அதை சர்க்கார் சரியான முறையில் பயன்படுத்த முடியாத நிலையில் இந்த சர்க்கார் இருக்கிறதென்று சொன்னால், உள்ளபடியே சொல்லுகிறேன், இந்த சர்க்கார் கொஞ்சம் நிர்வாகத் திறமையிலே அக்கரை காட்டி பயிற்சி பெற்று நல்ல முறையிலே செயல்பட வேண்டும். அது மாத்திரமல்ல. மத்திய சர்க்கார் நமக்கு எவ்வளவு பணம் கொடுக்கிறார்களோ, அது போதாது என்று சொல்லி சண்டை போட்டு மேற்கொண்டு கொடுங்கள் என்று கேட்கவேண்டுமென்று பல அங்கத்தினர்கள் வற்புறுத்தியிருக்கிறார்கள். அந்த நிலைமையில் மத்திய சர்க்கார் நமக்காக ஒதுக்கிய தொகையை பூரணமாக வாங்காமல் இருந்தால், மத்திய சர்க்கார்தான் இந்த மந்திரி சபையைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்பதை மதிப்பிற்குரிய அமைச்சர்கள் தயவு செய்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். இம்மாதிரி நமக்காக ஒதுக்கப்பட்ட தொகை அங்கே தங்கவிடாமல், மேலும் தொகை போதாது என்று கேட்டு வாங்கி, அதை தக்கபடி பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அதை தக்கபடி பயன்படுத்தக்கூடிய அளவில் சில பேர்கள் இல்லாமல் இருந்தால், அவர்களை தூண்டியாவது நல்ல முறையில் பயன்படுத்தி, நமது மாநிலத்தைப் பொறுத்த வரையில் நல்ல ரோடுகள், நல்ல வீடுகள் இவைகளையெல்லாம் கட்டிக் கொடுக்க இந்த மந்திரி சபை முயற்சிக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, கனம் சபாநாயகர் மணி அடிக்கப்போவதால், இத்துடன் என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRIMATHI SAVITHRI SHANMUGHAM** : கனம் தலைவர் அவர்களே, இன்று நமது ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மானியக் கோரிக்கையை ஆதரித்து சில வார்த்தைகள் பேச நான் விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபனங்களைப் பொறுத்த அளவில், ஒவ்வொரு நகர சபையும் நகரத்தில் குடியிருப்பவர்களிடமிருந்து வரி வசூல் செய்து ஓரளவுக்கு அவர்களின் தேவையை பூர்த்தி செய்துகொண்டு வருகிறது. அது போதாது. இன்னும் அரசாங்கம் அதிகப்படியான தொகையை ஸ்தல ஸ்தாபனங்களுக்கு கொடுத்து, மக்களுடைய தேவையை அவ்வப்பொழுது நல்ல முறையிலே பூர்த்தி செய்வதற்கு முன்வரவேண்டும் என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

29th March 1958] [Srimathi Savithri Shanmugham]

நான் இப்பொழுது ஸ்தல ஸ்தாபனங்களில் முக்கியமாக ரஸ்தாக்களைப்பற்றி ஓரிரு வார்த்தைகளை சொல்ல விரும்புகிறேன். அநேகமாக நகரங்களிலுள்ள ரஸ்தாக்களை நகர சபைகள் நல்ல முறையில் ஒழுங்காக தூசி பரப்பாமல் நல்ல வகையில் நிர்வகித்துக் கொண்டு வருகின்றன. ஆனால் அது போதாது. இன்னும் ரஸ்தாக்களை நல்ல முறையிலே செப்பனிடுவதற்கு நமது அரசாங்கம் இன்னும் அதிகமான தொகையை மான்யமாக கொடுக்கவேண்டும் என்று நான் இந்த இடத்தில் கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக ஹைவேஸ் பராமரிப்பில் இருந்து வரும் சில முக்கியமான ரஸ்தாக்கள் நல்ல முறையில் பழுது பார்க்கப்படுவதில்லை. அதில் இன்னும் அதிகப்படியான கவனத்தை அவர்கள் செலுத்தவேண்டுமென்று நான் இந்த இடத்தில் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். முக்கியமாக கோவையை எடுத்துக் கொண்டால், ஹைவேஸ் பராமரிப்பில் இருக்கக் கூடிய ரஸ்தாக்களை ரிபேர் செய்வதற்காக சில சமயங்களில் ரோடுகளில் கற்களை கொண்டுவந்து கொட்டி வைத்திருக்கிறார்கள். சில நாட்கள் அவைகள் அங்கேயே கிடக்க வேண்டியிருப்பதால், அது மக்கள் போக்குவரத்திற்கு மிகவும் இடைஞ்சலாக இருந்துகொண்டு வருகிறது. அதே சமயத்தில் ரோடுகளை பழுது பார்ப்பதற்கு அங்கு குழிகளை தோண்டி வைத்துவிடுவார்களேயானால், அதை நல்ல முறையில் உடனடியாக கவனித்து பழுது பார்த்து சரிவர செய்வதற்கு காலதாமதம் ஏற்படுகிறது. இவைகளையெல்லாம் அவர்கள் அவ்வப்பொழுது கவனித்து துரிதமாக செய்யவேண்டும் என்று இந்த மன்றத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

'ஸ்லம் கிளியரன்ஸைப்' பற்றி அடிக்கடி நாம் இந்த மன்றத்தில் விவாதித்துக்கொண்டிருக்கிறோம். அதற்கு ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டு அந்தக் குடிசைகளெல்லாம் ஒழிந்து மக்களுக்கு நல் வாழ்வு ஏற்படவேண்டுமென்பதுதான் நாம் கவனிக்க வேண்டிய விஷயமாக இருக்கிறது. நகர சபைகளின் மூலம் குடிசைகளை ஒழித்து மக்களுக்கு நல்ல வீடுகள் கட்டிக் கொடுப்பது முடியாத காரியம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். 10-30 a.m. சமீபத்தில் நகரசபைத் தலைவர்கள் மகாநாடு நடந்தபோது அங்கே, குடிசைகளை அப்புரப்படுத்தி குடிசைவாழ் மக்களுக்கு நல்ல வீடுகள் கட்டிக் கொடுப்பதற்கு தமாஷா வரியால் கிடைக்கும் வருமானத்தில் ஒரு பங்கை உபயோகிக்கலாம் என்று கனம் நிதி அமைச்சர் அறிவித்திருப்பதாக எனக்கு ஞாபகம் இருக்கிறது. அதற்காக அவருக்கு நன்றி தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. V. P. ASAITHAMBI : கனம் சபாநாயகர் அவர்களே, ஒரு ஒழுங்குப் பிரச்னை. கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமி இங்கே வெற்றிலை போட்டுக்கொண்டிருக்கிறார். அவர் அவ்வாறு செய்யலாமா ?

**SRI T. T. DANIEL : (Temporary Chairman) : The hon. Member should not chew betels in the House.**

SRIMATHI SAVITHRI SHANMUGHAM: கோவை நகரில் குடி தண்ணீர் கஷ்டம் இருக்கிறது. அங்கே இக்கஷ்டம் இப்போது அதிகமாக இருக்கிறது. அங்கே இந்தப் பிரச்னை இப்போது மிகவும் மோசமான நிலைமையில் இருக்கிறது என்றும் இப்பிரச்னையை உடனடியாக கவனிக்க வேண்டுமென்றும் சென்ற பட்ஜட் கூட்டத்தில் கூட நான் சொன்னேன். அங்கே இப்போது ஜனத்தொகை மிகவும் அதிகரித்திருப்பதால் எல்லோருக்கும் குடி தண்ணீர் வழங்குவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இது சம்பந்தமாக, கோவை நகர சபைத் தலைவரும் மற்றும் பலரும் கனம் நிதி அமைச்சரைக் கண்டு பேசியபோது, சிறு சேமிப்புத் திட்டத்தின் மூலம் கோவை நகரில் வசூலாகும் பணத்தில் ஒரு பகுதியை, அங்கே குடி தண்ணீர் வசதிக்கு ஏற்பாடு செய்வதற்காகக் கொடுப்பதாக அவர் வாக்களித்தார். சிறு சேமிப்புத் திட்டத்திற்கு கோவை ஜில்லாவிலிருந்து 2 கோடி ரூபாய் வசூலித்திருக்கிறோம். அதில் ஒரு பங்கை கோவை நகர சபைக்கு கொடுத்தால் அங்கே குடி தண்ணீர் கஷ்டத்தை ஓரளவு போக்க முடியும் என்று இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்கிறேன்.

[Srimathi Savithri Shanmugham] [29th March 1958

அடுத்தபடியாக, கல்வியைப் பொறுத்த வரையில் நகரசபைகள் என்ன நிலைமையில் இருக்கின்றன என்று குறிப்பிட விரும்புகிறேன். நகரத்தி லுள்ள ஒவ்வொரு குழந்தையும் கல்வி பெற வேண்டுமென்ற நோக்கத் துடன் நகரசபைகள் நல்ல முறையில் பள்ளிகளை நடத்தி வருகின்றன. உயர்நிலைப் பள்ளிகளை நடத்துவதில் அவைகளுக்கு பல கஷ்டங்கள் இருக் கின்றன. தனியாரால் நடத்தப்படும் உயர்நிலைப் பள்ளிகளுக்குக் கொடுக் கப்படும் சலுகைகள் நகரசபைகளால் நடத்தப்படும் உயர்நிலைப் பள்ளி களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. இதை பரிசீலனை செய்து உயர்தரக் கல்விக்காக ஸ்தல ஸ்தாபனங்களுக்கு போதிய மான்யம் கொடுக்க வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

மக்களுக்கு நன்றாக சேவை செய்வதற்கு ஸ்தல ஸ்தாபனங்களுக்கு உதவியளிப்பதற்காக அவைகளுக்கு போதிய அதிகாரங்களை வழங்கவேண்டு மென்றும் அவைகளுக்கு போதிய பணம் கொடுக்க வேண்டுமென்றும் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். இந்த சந்தர்ப்பத்தில் பேசுவ தற்கு எனக்கு வாய்ப்பளித்ததற்காக தங்களுக்கு என் நன்றியைத் தெரி வித்துக்கொள்கிறேன். வணக்கம்.

**Sri K. S. ARDHANAREESWARA GOUNDER :** கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அமைச்சர் பிரேரேபித்திருக்கும் இந்த மானிய கோரிக்கை யை ஆதரிக்கிறேன். நம் ராஜ்யத்தில் தேசிய நெடுஞ்சாலைகள் மிகவும் நன்றாக அமைந்திருப்பதை நாம் எல்லோரும் பாராட்ட வேண்டியதுதான். நம் ராஜ்ய அமைச்சர்களும் மத்திய அமைச்சர்களும் மத்திய சர்க்கார் எஞ்ஜி னியர்களும், அந்த ரஸ்தாக்கள் நல்ல முறையில் அமைந்திருக்கின்றன என்று ஏன் சொல்கிறார்கள் ? அந்த ரஸ்தாக்களை நாம் நல்ல முறையில் வைத்திருப்பதால்தான் அவர்கள் அவ்வாறு சொல்கிறார்கள். அவர்கள் கிராமப்புறங்களுக்குச் சென்று அங்கு ஸ்தல ஸ்தாபனங்களால் பராமரிக்கப் பட்டுவரும் ரஸ்தாக்களில் பிரயாணம் செய்தால் அவைகள் எப்படி இருக் கின்றன என்பதைத் தெரிந்து கொள்வார்கள். உதாரணமாக, நமது நிதி அமைச்சர் அவர்கள் அந்த ரஸ்தாக்களில் சமீபத்தில் பிரயாணம் செய்தபோது அவைகள் எந்த நிலைமையில் இருக்கின்றன என்பதைத் தெரிந்துகொண்டார்கள். பத்து தினங்களுக்கு முன்பு, கனம் நிதி அமைச் சர் ரோடு **map**-ஐப் பார்த்து விட்டு, திருப்பத்தூருக்குப் போவதற்காக ஒரு ரஸ்தாவில் சென்றார். அப்போது அடியேனும் அவருடன் பிரயாணம் செய்தேன். அந்த ரஸ்தாவில் சென்ற பிறகு, நம் மாகாணத்தில் இப்படிப் பட்ட ரஸ்தாக்களும் இருக்கின்றனவா என்று அவரே ஆச்சரியப்பட்டார். கிராம மக்கள் அடிக்கடி போக்குவரத்திற்கு உபயோகிக்கும் ரஸ்தாக்களை சரிவரப் பராமரிக்கவேண்டும். கிராம மக்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் விவசாயப் பொருள்களை விற்பதற்காக அந்த ரஸ்தாக்கள் மூலம்தான் அடிக்கடி பக்கத்திலுள்ள நகரங்களுக்குச் சென்று வர வேண்டியிருக் கிறது. ஆகவே கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற் காகச்செய்யவேண்டிய காரியங்களில், அந்த ரஸ்தாக்களை சரிவரப் பரா மரிப்பதும் ஒன்று ஆகும் என்பது என் அபிப்பிராயம். ஆகவே மத்திய சர்க்காரிடமிருந்து அதிகத் தொகை பணம் வாங்கி அதை கிராம ரஸ்தாக் களுக்காக செலவழித்தால் நன்றாக இருக்கும். அதற்காக மத்திய சர்க்காரை சேர்ந்தவர்களுக்கும், மத்திய அரசாங்கத்திலிருந்து இங்கே வருபவர்களுக்கும் கிராம ரஸ்தாக்களைக் காட்டினால் நன்றாக இருக்கும். என் தொகுதியாகிய மேட்டூரில் குளத்தூர் பிர்க்காவில் தொட்டிக்கிணறு என்ற இடத்தில், 'போஸ்ட்-வார் ரீகன்ஸ்ட்ரக்ஷன் ஸ்கீம்'-ல் ரஸ்தா போடுவதற்கு **1948**-ம் ஆண்டில் வேலை ஆரம்பிக்கப்பட்டது. அங்கே ரஸ் தாவில் ஜல்லியை உடைத்துவைத்தார்கள். இன்றுவரை பத்தாண்டுகள் ஆகியும், இன்னும் அந்த ஜல்லி ரஸ்தாவில் பரப்பப்படவில்லை. அது இருந்த இடத்திலேயே இருக்கிறது. இது சம்பந்தமாக, இந்தப் பத்து ஆண்டுகளாக கனம் அமைச்சர்களிடம் எவ்வளவோ எடுத்துச் சொல்லி யிருக்கிறேன். இன்னும் அந்த ஜல்லி ரோடில் பரப்பப்படவில்லை. ஆகவே கிராம ரஸ்தா அமைப்பில் சர்க்கார் மிகவும் குறைவாக கவனம் செலுத்து கிறார்கள் என்றுதான் சொல்ல விரும்புகிறேன். மேலும், மேட்டூரைப்

29th March 1958] [Sri K. S. Ardhanareeswara Gounder]

பொறுத்த வரையிலும் அங்கே டவுன்ஷிப் கமிட்டி இருக்கிறது. சாதாரண முனிசிபாலிடிகளின் பொறுப்பில் இருக்கும் ரஸ்தாக்கள் எவ்வாறு இருக்கின்றனவோ அதே நிலைமையில் டவுன்ஷிப் கமிட்டியின் பராமரிப்பில் இருக்கும் ரஸ்தாக்களும் இருக்கின்றன. சர்க்காரால் நேரடியாக கவனிக்கப்படக் கூடிய, டவுன்ஷிப் கமிட்டியால் கவனிக்கப்படக்கூடிய, ரஸ்தாக்களும் இந்த நிலைமையில் இருக்கின்றன. கனம் மராமத்து அமைச்சர் அங்கு வந்த போதெல்லாம், அங்கே பல முக்கியமான இடங்களில், குறிப்பாக சேரி களிலும் மற்ற முக்கியமான தெருக்களிலும், நல்ல ரஸ்தாக்கள் அமைக் கப்படவில்லை என்று அவரிடம் பல தடவை சொல்லப்பட்டது. மேட்டூர் டவுன்ஷிப் கமிட்டியார் அங்கே இந்த ஆண்டாவது நல்ல ரஸ்தாக்களை அமைப்பார்கள் என்று நம்புகிறேன்.

சேலத்திற்கு வேண்டிய குடிதண்ணீரை நங்கவள்ளியில் வடிகட்டி. எடுத்துச்செல்கிறார்கள். ஆனால் அந்த கிராமத்தில் நல்ல குடிதண்ணீர் வசதி இல்லை. அங்கு குடிதண்ணீர் வசதிக்கு இதுவரையிலும் ஏற்பாடு செய்யப்படவில்லை. இதுபற்றி சென்ற ஆறு ஆண்டுகளாக சர்க்காருக்கு எடுத்துச் சொல்லப்பட்டிருந்தும் அங்கே ஒன்றும் செய்யப்படவில்லை. இதை சர்க்கார் உடனடியாகச் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

மேட்டூர் கால்வாய், நீர்பாசன இலாகாவைச் சேர்ந்ததாக இருக்கிறது அக்கால்வாயின் மேல் அந்த இலாகாவினர் ரஸ்தா அமைத்திருக்கிறார்கள். இப்போது, அந்தப் பக்கத்திலுள்ள நிலங்கள் எல்லாம் நஞ்சையாக மாறியிருக்கும்போது, ரயத்துக்கள் அந்த நிலங்களுக்குச் செல்வதற்கு அந்த ரஸ்தா மிகவும் பிரயோஜனப்படுகிறது. அந்த ரஸ்தா நீர்ப்பாசன இலாகாவைச் சேர்ந்தது என்பதால், ரயத்துக்கள் அவைகளில் செல்ல முடியாதபடி தடுக்கப்படுகிறார்கள். கரையின் மேல் இருக்கும் ரஸ்தாவை நெடுஞ்சாலை இலாகாவுக்கு மாற்றி அதற்கு ஜல்லி போட்டுக் கொடுத்தால் அந்த ரஸ்தா அங்குள்ள மக்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். மக்களுக்கு நல்ல சௌகரியம் ஏற்படும். இதைச் செய்ய வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, சேலத்திலிருந்து மைசூருக்கு ஒரு ரஸ்தா போட வேண்டும். கனம் அங்கத்தினர்கள் சென்ற மாதம் ஒரு விஷயத்தைப் பத்திரிகைகளில் படித்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். நம் ராஜ் யத்திலிருந்து லட்சக் கணக்கான யாத்ரீகர்கள் மைசூரிலுள்ள மாதேஸ் வரத்திற்கு கால் நடையாகச் செல்கிறார்கள். அந்தப் பாதையில் ஒரு 'இண்டெர்—ஸ்டேட் ரோட்' போடவேண்டுமென்று சென்ற பட்ஜெட் கூட்டத்தின்போது கூட நான் சொன்னேன். அப்படி ஒரு ரோடைப் போட்டால் இந்த யாத்திரீகர்களுக்கு சௌகரியம் ஏற்படுவதுடன், சேலத்திலிருந்து மைசூர் ராஜ்யத்திற்கு இப்போதுள்ள தூரத்தில் 50—80 மைல்கள் குறையும் என்று நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களின் கீழும் ப்ளாக் அபிவிருத்தித் திட்டங்களின் கீழும் போடப்படும் ரஸ்தாக்கள் சரிவரப் பராமரிக்கப்படுவதில்லை. அவை பாழடைந்து வருகின்றன. அவைகளை நன்றாக பராமரிப்பதற்காக ஸ்தல ஸ்தாபன இலாகாவிற்கு அதிகம் பணம் கொடுக்கவேண்டும். இல்லாவிட்டால், அவைகளை பஞ்சாயத்துக்கள் எடுத்துக் கொண்டு பராமரிக்க வேண்டுமென்றால், பஞ்சாயத்துக்களுக்கு அதிகப் பணம் கொடுத்தால்தான் அவைகளை அவை பராமரிக்க முடியும்.

அடுத்தபடியாக, சென்ற ஐந்து ஆண்டுகளாக, மேட்டூரில் உள்ள பார்க்கை அபிவிருத்தி செய்யவேண்டுமென்று, அமைச்சர்கள் அங்கே வந்தபோதெல்லாம் அவர்களிடம் சொல்லியிருக்கிறோம். இருக்கும் மரங்களை வெட்டிவிட்டு பார்க்கை அபிவிருத்தி செய்வதற்கு நடவடிக்கை எடுக்கப்பட்டது. மரங்கள் வெட்டப்பட்டன. ஆனால், அதற்குப் பிறகு அரசாங்கத்திடமிருந்து அபிவிருத்தி செய்வதற்கு வேண்டிய பணத்தொகை கிடைக்கவில்லை. அதனால் வேறு எந்த அபிவிருத்தி வேலையும் செய்யப்படவில்லை. இப்போது பார்க் மிகவும் மோசமாகக் காட்சியளிக்கிறது. இந்தப் பார்க் ராஜ்யத்திலேயே மிகவும் சிறப்பு வாய்ந்தது. சர்க்கார்,

[Sri K. S. Ardhanareeswara Gounder] [29th March 1958

ராஜ்யத்திலுள்ள இதர பார்க்குகளை எவ்வாறு அபிவிருத்தி செய்திருக்கிறார்களோ அவ்வாறே இந்தப் பார்க்கையும் அபிவிருத்தி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூருக்கும் பவானிக்கும் மத்தியில் காவேரியின் மேல் ஒரு பாலம் அமைக்கவேண்டும். அங்கே பாலம் அமைத்தால், சேலத்திலிருந்து சத்தியமங்களத்திற்குச் செல்லும் தூரம் 50 மைல் குறையும். இதற்கு குறைந்த செலவுதான் ஆகும் என்று நினைக்கிறேன். அந்த இடத்தில் காவேரி அதிக ஆழமாக இல்லை. ஆகவே அங்கே பாலத்திற்கு அஸ்திவாரம் போடுவதற்கு செலவு குறைவாகத்தான் ஆகும் என்று நினைக்கிறேன். இதை எதற்காகச் சொல்கிறேன் என்றால், சர்க்காரிலே, கோயமுத்தூர் ஜில்லாவிலிருந்து சேலம் ஜில்லாவுக்குத் தண்ணீர் கொண்டு போவதற்குப் பாலம் போட்டு அதன் மூலம் தண்ணீர் எடுத்துச் செல்கிறார்கள். ஆனால், அதே பாலத்தை அகலப்படுத்திப் போட்டிருந்தால் சௌகரியமாக இருந்திருக்கும். அதுவும் குறுகிய அளவிலே 12 அடி அகலம் என்று நினைக்கிறேன். அந்த விதத்திலே போட்டுவிட்டு, அங்கேயிருக்கும் விவசாயிகள் அந்தப் பாலத்தில் செல்லக்கூடாது; "இது சர்க்காருக்குச் சொந்தம்; பொதுமக்கள் செல்லக்கூடாது" என்று போர்டு போட்டிருக்கிறார்கள். புதிய பாலம் அமைப்பதற்கு முன்பு அந்த போர்டு இருந்தது. அதை அகற்றிவிட்டு அங்கிருக்கும் விவசாயக் குடி மக்கள் அவர்களுடைய தானியத்தை எடுத்துச் செல்வதற்கு வேண்டிய அனுமதி கொடுப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்.

அடுத்தபடியாக, மேட்டூரைப் பொறுத்தவரையில் அங்கேயிருக்கும் பி. டபிள்யூ.டி. உத்தியோகஸ்தர்களுக்கும் அந்த அணையைப் பாதுகாக்கக் கூடியவர்களுக்கும் நல்ல முறையிலே வீட்டு வசதி இல்லாமல் அவர்கள் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். சென்னையைப் பொறுத்த வரையிலும் ஸ்லம் க்ளியரன்ஸ் திட்டம் வைத்திருக்கிறார்கள். இங்கிருக்கும் அத்தனை அமைச்சர்களும் மேட்டூரிலிருக்கும் ஸ்லம்மை நன்றாகப் பார்த்திருக்கிறார்கள். அதுவும் மேட்டூர் டவுன்ஷிப் கமிட்டி சர்க்கார் நிர்வாகத்திலிருக்கிறது. அங்கேயிருக்கும் நிலங்கள் பூராவும் சர்க்கார் நிர்வாகத்தில் இருக்கின்றன. அங்கு இருக்கும் முக்கால் பகுதி வீடுகளும் சர்க்கார் நிர்வாகத்தில் இருக்கின்றன. (இத்தருணத்தில் மிஸ்டர் ஸ்பீக்கர் தலைமை வகித்தார்) அங்கிருக்கும் ஸ்லம்மை இன்னும் நிவர்த்தி செய்யாமலிருப்பதைப் பார்க்கும்போது மிகவும் வருத்தமாக இருக்கிறது. மேட்டூரில் சர்க்கார் கூலிகள் நிலைமையை எடுத்துக்கொண்டு பார்த்தால், 10 அடிக்கு 8 அடியுள்ள ஒரு அறையில் 8 முதல் 10 நபர்கள் குடியிருந்துகொண்டு மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். மத்திய சர்க்காரிடமிருந்து தொகை பெற்று அவர்களுக்கு நல்ல முறையிலே வீட்டு வசதி செய்து, நல்ல காலனி அமைத்துக்கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளுகிறேன். வணக்கம்.

10-43 a.m. **Sri N. MARUDACHALAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த ஸ்தல ஸ்தாபன மான்யத்தின்மீது சில வார்த்தைகள் குறிப்பிட விரும்புகிறேன். ஸ்தல ஸ்தாபனம் என்பது இன்றைக்கு ஒவ்வொரு இடத்திலும் சர்க்கார் பொம்மை மாதிரிதான் இருக்கிறதே தவிர அதற்கு எந்தவிதமான அதிகாரமும் கிடையாது. எனக்கு முன்னால் பேசிய ஸ்தல ஸ்தாபன உதவித் தலைவர் குறிப்பிட்ட மாதிரி, கோவை முனிசிபாலிடியில் இன்றைக்கு பொதுவாக தண்ணீர் நெருக்கடி அதிகமாக இருக்கிறது. அந்த தண்ணீர் நெருக்கடியைத் தீர்ப்பதற்காக வேண்டி நமது மந்திரியிடமும் தூது கோஷ்டியாக வந்து, சிறுவாணியில் ஒரு அணை கட்டினால் அங்கிருந்து தண்ணீர் சப்ளை செய்வதற்கு வசதியாக இருக்கும் என்று தெரிவித்தோம். அப்படி சிறுவாணியிலிருந்து தண்ணீரைக் கொண்டு வந்து கோயமுத்தூர் நகரத்துக்கு சப்ளை செய்தால், நகரம் விரிவு அடையும் காலத்தில் எல்லா மக்களுக்கும் தண்ணீர் கொடுக்கமுடியும் என்ற காரணத்தினால்தான் ஒன்றரை கோடி ரூபாய் எங்களுடைய கோயமுத்தூர் முனிசிபாலிடிக்குக் கடன் வசதி செய்யவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டிருக்கிறோம். அதன்பேரில் அங்கு மந்திரி அவர்கள் இன்றைக்கு நாங்கள்

29th March 1958] [Sri N. Marudachalam]

சிறு சேமிப்புத் திட்டத்தின் மூலம் வஜா செய்தால் நாங்கள் கடனுக்காக கையெழுத்திடுகிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆகையால், உடனடியாக எங்களுக்கு அந்த உதவியைச் செய்து, மக்களுக்குத் தண்ணீர் கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

தூசற்ற வீதி அமைப்பது குறிப்பிடப்பட்டது. 1948–49-ம் வருஷத்தில் எங்கள் முனிசிபாலிடிக்கு ரோடு பராமரிப்புக்காக 72,000 ரூபாய்தான் கொடுத்து வந்தார்கள். இப்பொழுது அந்த முனிசிபாலிடியில் 87 மைல் தூரம் தூசற்ற ரோடாகப் போட்டிருக்கிறோம். அப்படிப் போட்டிருந்த நேரத்தில் இப்பொழுதும் 72 ஆயிரம் ரூபாய்தான் கொடுக்கப்படுகிறது. "எங்களுக்கு அந்தப் பணம் போதவில்லை, குறைந்தது ஒரு லட்சம் ரூபாயாவது வேண்டும் என்று" எங்கள் முனிசிபாலிடியார் கேட்டிருக்கிறார்கள். அதன்படி எங்களுக்கு அதிகப்படி பணம் கொடுத்தால் அந்த நகர மக்களுக்கு இன்னும் பல ரோடுகளை தூசற்ற ரோடுகளாக்குவதற்குச் சந்தர்ப்பம் இருக்கும்.

ஹைவேஸ் ரோடு மத்தியிலே இருக்கிறது. அவைகளை ரிபேர் செய்வதற்கு மெட்டல் கல்லைக் கொண்டு கொட்டிவிடுகிறார்கள். அந்தக் கல் மண்ணுகும் வரையிலும் கவனிப்பதில்லை. மேலும் முனிசிபாலிடியிலிருந்து பல ரிமைண்டர்கள் போனால்தான் அதன்பேரில் கவனித்து ரோடுகளை ரிப்பேர் செய்ய ஆரம்பிக்கிறார்கள். அது தவிர, பல இடங்களில் குழி தோண்டப்படுகிறது. அதன்மூலமாகவும் பஸ், கார் போவதற்கு சந்தர்ப்பம் கிடையாது. இன்றைக்கு ஒவ்வொரு முனிசிபாலிடியும் கார்களும், பஸ்களும், வான்களும் வாங்கி வைத்திருக்கின்றன. அவைகள் ஒவ்வொரு முனிசிபாலிடியினுடைய நலனுக்காக, முனிசிபல் எல்லைக் குள்ளேயே ஓடுகின்றன. அந்த பஸ்களுக்கும் வான்களுக்கும் அரசாங்கத்தினிடமிருந்து வரி வஜா செய்யப்படுகிறது. அப்படி வரி வாஜா செய்யக் கூடாதென்று பல முனிசிபாலிடிகள் தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கின்றன. அந்த வரி வஜா செய்தால் முனிசிபாலிடிகளுக்குப் பிரயோஜனமாக இருக்கும். அந்த முனிசிபாலிடியில் சில காரியங்களைச் செய்வதற்குச் சந்தர்ப்பமாக இருக்கும். முனிசிபாலிடிகளைப் பொறுத்தமட்டில் அந்த விவரங்களை அரசாங்கம் கவனித்து எங்களுக்கு ஆவன செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேஜர் பஞ்சாயத்துக்களில் பல இடங்களில் பள்ளிக்கூடங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. சிங்கநல்லூர் மேஜர் பஞ்சாயத்தில் ஒரு பள்ளிக்கூடம் இருக்கின்றது. குறைந்த பட்சம் ஒரு வகுப்பில் 40 பிள்ளைகள் படிக்கிறார்கள். ஒவ்வொரு வகுப்பு அறையும் தடுக்கப்பட்டிருக்கவில்லை. சினிமாக் கொட்டகைமாதிரி ஒரே ஹாலாக இருப்பதால் மாணவர்கள் படிப்பதற்கு இடைஞ்சலாக இருக்கிறது. பஞ்சாயத்து போர்டு தலைவரைக் கேட்டால், "எங்களுக்கு அரசாங்கம் கொடுக்கும் தொகை 12 ஆயிரம் ரூபாய். வேறுவகையில் 6 ஆயிரம் ரூபாய் திருப்பி வாங்கிக்கொள்கிறார்கள். எங்களுக்குக் கிடைப்பது 6 ஆயிரம் ரூபாய்தான். இதை வைத்துக்கொண்டு நாங்கள் எப்படி மானேஜ் பண்ணமுடியும்?" என்று அவர்கள் கேட்கிறார்கள். அப்படிப்பட்ட பஞ்சாயத்துக்களுக்கு சற்று அதிகப்படியான பணம் கொடுத்தால் பள்ளிக்கூடங்களை அபிவிருத்தி செய்வதற்கு ஒரு உதவியாக இருக்கும். அம்மாதிரி முறைகளை அரசாங்கம் கையாளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மராமத்து இலாகாவைப்பற்றி இரண்டொரு வார்த்தைகள் கூற விரும்புகிறேன். மராமத்து இலாகா சம்பந்தமாகச் சொல்லும்போது, இன்றைக்கு வடிவேலாம்பாளையம் என்று ஒரு கிராமம் தீவு மாதிரி இருக்கிறது. அந்த ஊருக்குப் போக ரோடு வசதி இல்லை. சென்ற சட்டசபைக் கூட்டத்திலும் நான் இதைப்பற்றிச் சொல்லியிருக்கிறேன். அதைப் பற்றி இன்னும் கவனிப்பதாக இல்லை. இன்னும் அப்படியேதான் இருக்கிறது. அந்த வடவேலாம்பாளையத்திலிருந்து புருவாம்பட்டிக்கு ஒரு ரோடு போட்டுத் தந்தால் அங்குள்ள மக்களுடைய போக்குவரத்துக்கு வசதியாக இருக்கும். கஸ்தூரிநாய்க்கன் பாளையம் வடவெளிக்குப் போகும் வழியில் ஒரு பள்ளம் இருக்கிறது. மழை காலத்தில் தண்ணீர் வந்தால்

[Sri N. Marudachalam] [29th March 1958

அந்த வழி போகவே முடியாது. அதற்கும் இதற்கும் மத்தியிலே ஒரு பாலம் கட்டினுல் ஜனங்கள் போக்குவரத்துக்கு வசதியாக இருக்கும். இந்தமாதிரி ரோடுகளைப் போடுவதில் அதிக கவனம் செலுத்தப்படவில்லை. சென்ற அசெம்பளியிலும் இதைப்பற்றி கோரியிருக்கிறேன். இன்றைக்கு வலம்புரி வாய்க்கால் என்று பூகம்பபடி ஆற்றிலிருந்து வருகிறது. வலம்புரி வாய்க்கால் இன்னமும் கவனிக்கப்படுவதாக இல்லை. ஆகையால் உடனடியாகக் கவனித்து மேற்படி காரியங்களைச் செய்யவேண்டுமென்பதாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

10-50 p.m. அதோடு குள மராமத்து வேலை நடக்கின்றது. குளத்திலிருந்து மண்ணை எடுத்து ஏரியில் போடுகிருர்கள். பள்ளமான இடத்தில் போடுகிருர்களே தவிர ஏரிக்கும் குளத்திற்கும் சம்பந்தம் இல்லை. கேட்டால் அதிகாரிகள் அப்படித்தான் போடச் சொன்னுர்கள் என்கிருர்கள். எந்த இடத்தில் மேடாக இருக்கிறதோ அந்த இடத்தில் போட்டால் பள்ளத்தில் தேங்கி நிற்கும். அமைச்சர் அவை அம்மையார் சொன்னது மாதிரி இன்றைக்குக் குளங்கள் எல்லாம் தட்டையாக இருக்கின்றன. அவற்றைப் பள்ளமாகச் செய்தால்தான் தண்ணீர் தேங்கும், கீழே இருக்கிற நிலங்களுக்கு வெள்ளாமை செய்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே ரோடு வசதிகள், குள மராமத்து வேலைகள், பள்ளிக்கூட வசதிகள் எல்லாவற்றையும் செய்து கொடுக்கும்படியாகக் கேட்டுக் கொள்கிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN**: நகராட்சிகள், ஊராட்சிகள் என்று சொல்லக் கூடிய ஸ்தாபனங்களுக்கு அதிகமான அதிகாரங்கள் இருக்கவேண்டுமென்று பல ஆண்டுகளாகக் கேட்கப்பட்டு வருகிறது. அதற்கு வேண்டி பல கமிட்டிகளை அமைத்து அந்தக் கமிட்டிகளில் சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. இன்றைக்கு அதுபோன்ற நிலைமை இருக்கிறதா என்று பார்த்தால் அதுதான் கிடையாது. குறிப்பாக இன்றைக்கு சுயமாக ஸ்தல ஸ்தாபனங்கள் இயங்கி பல அபிவிருத்தித் திட்டங்களைப் போட முடியாத நிலைமை உண்டாகியிருக்கிறது. ஆகவே பரிபூர்ண அதிகாரம் அவைகளுக்கு இருப்பதன் காரணமாகத்தான் நல்ல முறையில் அவை இயங்க முடியும் என்பதை இந்தச் சமயத்தில் ஞாபகப்படுத்திக்கொள்ள முடியும். காந்திஜி இருந்தபோது ராமராஜ்யம் ராமராஜ்யம் என்று சொன்னுர். கிஸ்ஸான் மஜ்தூர் ராஜ்யம் என்று சொன்னுர். ஆனுல் இன்றைக்கு நடப்பது என்ன ? நிலப்பிரபுத்வ அடிப்படையில் ஸ்தல ஸ்தாபன தலைவர்களை நேரிடையாகத் தேர்தெடுக்கவேண்டும் என்று சொல்வதை ஒப்புக்கொள்ளாமல், மெம்பர்களாலே தேர்ந்தெடுக்கப்படவேண்டும் என்கிற நிலைமை உண்டாகியிருக்கிறது. பணம் கொடுத்து அந்தத் தலைவர்கள் வந்து ஆதிக்கம் செலுத்தவேண்டுமென்ற அளவுக்கு வளருகிறது. (கனம் ஸ்ரீ. பி. கக்கன்.—இப்படிச் செய்தால் அப்படிச் செய்வது நல்லது என்பீர்கள்.) ஆகவே ஸ்தல ஸ்தாபனங்களுடைய நிர்வாகத்தைப் பற்றி சௌராஷ்டிராவில். . . .

**MR. SPEAKER**: கனம் அங்கத்தினர் இந்த மானியக் கோரிக்கையின் மீது பேசவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஸ்தல ஸ்தாபனங்களைப் பற்றி இந்த மானியத்தின் கீழ் பேசுவது சரியல்ல என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

**SRI V. K. KOTHANDARAMAN**: நான் உதாரணத்திற்காகச் சொன்னேன். சௌராஷ்டிராவில் ஸ்தல ஸ்தாபனங்களில் நிர்வாகம் நல்ல முறையில் அமைவதால். . .

**SRI A. A. RASHEED**: **On a point of orde Sir. The hon. Member is not speaking on the Demand under discussion but on Local Administration.**

**MR. SPEAKER**: நானும் அதைத்தான் சொன்னேன். கனம் அங்கத்தினர் மானியக் கோரிக்கையின் மீது பேசவேண்டுமே தவிர அதற்கு அப்பாற்பட்டு ஸ்தல ஸ்தாபனங்களைப் பற்றிய விவரங்களைக் கொண்டு வருவது சரியல்ல.

29th March 1958]

**Sri V. K. KOTHANDARAMAN :** ஸ்தல ஸ்தாபனங்களுக்கு நிறைய அதிகாரம் இருப்பதன் மூலமாகத்தான் கிராமங்களில் ஒரு ஊருக்கும், இன்னொரு ஊருக்குமிடையேயுள்ள ரோடுகள் எல்லாம் நல்லமுறையில் போடப்படுவதற்கு வாய்ப்பு உண்டாகும். பல கிராம அபிவிருத்தி திட்டங்களைப் போட முடியும் என்பதற்காக இதை உதாரணமாக சொல்ல வருகிறேன். சௌராஷ்டிராவில் ஸ்தல ஸ்தாபனங்களை மூன்று பிரிவுகளாகப் பிரித்து அவற்றுக்குப் பரிபூரண அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். பரிபூரண அதிகாரம் இருப்பதனால்தான் ஸ்தல அபிவிருத்தித் திட்டங்கள் எல்லாம் அங்கே நன்றாக நடைபெறுகிறது. ஆகவேதான் இன்றைக்கு சமீபத்தில் மத்திய சர்க்கார் மந்திரியாக இருக்கக் கூடிய மிஸ்டர் டே வந்தபோது கூடக் குறிப்பிட்டார்கள், ஸ்தல அபிவிருத்தித் திட்டங்களை வெற்றிகரமாக நடத்தவேண்டுமானால் ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங்களுக்கு பரிபூரண அதிகாரம் கொடுக்கப்படவேண்டும் என்பதாகச் சொன்னார்கள். இன்றைக்கு கிராமத்திற்கு கிராமம் ரோடு வசதிகள் அதிகரிக்கவேண்டியிருக்கிறது. . .

**Sri K. B. S. MANI :** கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியக் கோரிக்கையை ஆதரித்து என்னுடைய கருத்தை விளக்க ஆசைப்படுகிறேன். இந்த மானியக் கோரிக்கை மிக மிக முக்கியமானது. ஒரு நாடு சுதந்திரம் அடைந்தாலும் எத்தனை வளர்ச்சியைப் பெற்றாலும், ரோடு வசதியைச் செய்கிற இலாகா, ரோடுகளைச் செப்பனிடுகிற இலாகா, இவை நல்ல முறையில் அமைந்திருந்தால்தான் நாட்டு நிர்வாகம் நல்ல முறையில் அமைந்திருக்கிறது என்று அர்த்தமாகும். இன்றைக்கு இந்தியா பூராவையும் எடுத்துக் கொண்டாலும் நமது ராஜ்யம் ஒன்றுதான் சிறந்த முறையில் அமைந்திருக்கிறது என்று பெருமையோடு சொல்லிக் கொள்ளலாம். இது அதிகாரபூர்வமாக செய்தி. அந்த இலாகா நிர்வாகிகள் திறம்படியாக வேலை செய்கிறார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன். அதோடு கூட இன்றைக்கு இந்த மானியக் கோரிக்கையின் மீது பேசுகின்றவர்கள் சில சில குறைகளை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இது எப்படி இருக்கிறது என்றால் ''தன்னை நொந்து ஓலப்பாயைச் சுருட்டிக்கொண்டு ஓர்படியாக வீட்டுக்குப் போக அவள் எதிரே ஈச்சம்பாயைச் சுருட்டிக்கொண்டு வந்தாளாம்'' என்கிற பழமொழிக்கு ஏற்ப அமைந்திருக்கிறது. நம்மை மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பேசும்போது, நாம் இன்றைக்கு அவர்களைக் காட்டி அதிக பிற்போக்கான நிலைமையில் இருப்பதாக எண்ணி வருந்துகிறோம். இது தவறு என்பதைத் தாழ்மையாகத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். அதோடு மட்டுமல்லாமல் ஒரு குடும்பத்திலேயே அசம்பாவிதமான காரியங்கள் நிகழ்வது சுலபம், இயற்கையும் கூட. அதை ஒட்டியே சில குற்றச்சாட்டுகள் அல்ல, பல சொல்ல முடியும். அரசாங்கம் நல்ல முறையில் திறம்பட நடத்த வேண்டும். அரசாங்க ஊழியர்கள் ஒத்துழைக்க வேண்டும். நாம் ஒத்துழைக்கவேண்டும். எந்தக் குறைபாட்டுக்கும் நாம் எல்லோருமே ஒவ்வொரு வகையில் பொறுப்பாளிகள்தாம். இப்போது ரோடுகள் போடப்படுகிறது. ரோடுகளின் தரத்திற்கு ஏற்றபடி எஸ்டிமேட்டுகள் போடப்படுகிறது. குறிப்பாக தஞ்சாவூரை எடுத்துக் கொண்டால் சற்று அதிகமான அளவுக்கே எஸ்டிமேட் போடப்படுகிறது. பட்டுக்கோட்டை மன்னார்குடி, விருத்தாசலம், தஞ்சாவூர் இந்தப் பகுதிகளில் உள்ள ரோடுகளையும், இதே நேரத்தில் சீர்காழி, கும்பகோணம், மாயவரம் தாலுக்காக்களில் உள்ள ரோடுகளையும் பார்க்கும்போது அங்குள்ள ப்ளாக் டார் போட்ட ரோடுக்கள் நல்ல முறையில் இருக்கிறது. அதாவது, அவைகள் தென் பகுதியில்தான் உள்ளது. சீர்காழி, மாயவரம் போன்றயிடங்களில் உள்ள ப்ளாக் மெட்டல் ரோடுகள் மிகவும் மோசமாகயிருக்கிறது. காரணம் என்னவென்று அங்குள்ள அதிகாரிகளைக் கேட்டால், அவர்கள் உண்மையை வெளியிட மறுக்கிறார்கள். ஏதேதோ காரணங்கள் கூறுகிறார்கள். ஆனால் அங்குள்ள சாதாரண ஊழியர்களை கூர்ந்து கவனித்து அவர்களிடமிருந்து உண்மையை அறிய விரும்பியபோது அங்குள்ள சில கண்ட்ராக்டர்கள் மிகப்பெரிய கண்ட்ராக்டர்கள் என்றும் அவர்கள் கண்ட்ராக்டில் எவ்வளவு தூரம் மோசடி செய்ய முடியுமோ அவ்வளவுக்கும் அவர்கள் 11 a.m.

தயாராயிருக்கிருர்கள் என்றும், ஒரேயிடத்தில் போட்ட ஜல்லிகளை மெஷர் செய்த பிறகு இரவோடு இரவாக அதை எடுத்து போய் மற்ற வேறு இடத்தில் மெஷர் செய்து காட்டும் அளவிற்கு அவர்கள் வசதி பெற்றிருக்கிருர்கள் என்றும் தெரியவருகிறது. இம்மாதிரி பல சம்பவங்கள் அங்கு நடந்தும் இருக்கின்றன. இவைகளை மறைக்க அவர்கள் கீழ் உத்தியோகஸ்தர்களைப் பயமுறுத்தியும், இன்னும் ஏதோதோ வசதிகளும் செய்து கொடுத்தும் வருகிருர்கள் என்றும் தெரியவருகிறது. போன மாதம் நான் ஊருக்குச் சென்றபோது டார் போட்டிருக்கும் வழியாகத்தான் நான் பஸ்ஸில் சென்றேன். சீர்காழிக்கு 10 மைல் இப்புறம் உள்ள நந்தன்குடி என்றயிடத்தில் டார் போட்டுக் கொண்டிருந்தார்கள். டார் போட ஒரு மெஷின் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஜல்லியைக் கொட்டி டாரையும் அதில் ஊற்றி கட்டையையும் போட்டு எரித்து ஜல்லியும் டாரும் நன்கு கலந்து கொண்ட பிறகு அதை ரோட்டில் போட்டு மண்ணையும் போட்டு ரோலர் போடப்படும். ஆனல் அங்கு நடந்ததென்ன? டார் ட்ரம்மை வெட்டி அதை ஒரு பள்ளத்தில் போட்டு விட்டு அதில் கட்டையை போட்டு கொளுத்தி விட்டார்கள். ப்ளவர் ஜெட்ஸ் மாதிரி அந்த டாரை ரோட்டில் ஊற்றி மண்ணையும் தூவி ரோலர் போடுகிருர்கள். அதை உடனடியாக அதிகாரிகளின் கவனத்திற்குக் கொண்டு வர வேண்டுமென்று கருதி சீர்காழிக்கு டெலிபோன் செய்து ஆபீஸரைக் காண்டாக் செய்ய நினைத்த போது, அவருக்கு தனிப்பட்ட போன் இல்லையென்று சொன்னுர்கள். எனக்கும், ஊருக்குப் போக வேண்டிய அவசியம் மிகுதியாக இருந்ததால் நானும் உடனே ஊருக்கு சென்றுவிட்டேன். ஆக, நான் சொல்வது என்னவென்றல், மக்களின் வரிப்பணத்தில் இருந்து மக்களின் நலனுக்காக மக்கள் சர்க்காரால் செய்யப்படும் நல்ல காரியங்களை ஒரு சிலர் தங்கள் சுயநலத்தைக் கருதி மக்களின் பணத்தை தங்களுக்கு பயன் படுத்திக் கொள்கிருர்கள். அதன் காரணமாகத்தான் பல ஊழல்களும் ஏற்படுகின்றன. ஆகவே, இதையெல்லாம் நன்கு கவனித்து மேல் அதிகாரிகள் திடீரென்று இம்மாதிரி ரோடுகளில் வேலை செய்யும்போது, அங்கு " திடீர் விஜயம் " செய்து அப்படி அநியாயமான காரியங்களைச் செய்பவர்களுக்கு நல்லதொரு தண்டனை கொடுக்கும்படியான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படவேண்டும். அதோடு, சிகப்புக் கப்பி போடுவதற்கு, கப்பி வல்லத்தில் இருந்து சப்ளை செய்யப்படுகிறது. அந்தக் கப்பியை லாரிகளில் இருந்து கீழே கொட்டி ஒரு பத்து நாட்கள் கழித்து பார்த்தால் அங்கு சிகப்பு மண்தான் இருக்கும். கேப்பர் க்வாரியில் இருந்து நல்ல கப்பி வருகிறது. ஆனல் வெல்லத்தில் இருந்து மோசமான கப்பியை வாங்குகிருர்கள், வெள்ளையாய் இருக்கிற மண்ணை சிகப்பாக ஆக்கக் கூடியதும், வேஷ்டியை சீக்கிரமாக அழுக்காக்கக் கூடிய வெல்லம் கப்பியை ஏன் வாங்குகிருர்கள் என்று கேட்டால், அதற்கு சொல்கிருர்கள் அதை கொண்டு வர சுலபமாக இருக்கிறது என்றும், அதற்கு விலை குறைவாக இருக்கிறது என்றும். ஆகவே, அதைக் கொண்டுவருகிறேம் என்று சொல்கிருர்கள். ரோடுகள் எதற்காகப் போடப்படுகிறது? ரோட்டின் கலரை மாற்றுவதற்காகவல்ல. மக்களுக்கு நல்ல முறையில் ரஸ்தா போட்டுக்கொடுக்க வேண்டுமென்று எண்ணத்தினல்தான் செய்யப்படுகிறது. அதோடு கூட, மலிவாயிருக்கிறது என்று இல்லாமல் செலவு கூடுதல் ஆனுலும், அது சில குடும்பங்களுக்கு உதவுபடியாயினும் எதற்காக அது பயன்படுத்தப்படுகிறது என்று பார்த்து அதை ரத்து செய்து விட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, முனிஸிபாலிடிகள், கார்ப்பரேஷன் போன்ற ஸ்தல ஸ்தாபனங்கள் தங்கள் தங்கள் இடங்களில் நல்ல ரோடுகள் அமைக்க பணம் இல்லையென்று கூறுகிருர்கள். ஆக, அங்குள்ள ரோடுகள் எல்லாம் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன. சிலயிடங்களில் கொட்டப்பட்ட கப்பி வருஷக்கணக்கில் அங்கேயே அப்படியே இருக்கிறது. ஆகவே, அவர்களுக்கு ஒரு சுற்றறிக்கை விட்டு, போக்குவரத்திற்கு அவை இடையூராக இருக்கக் கூடாது என்று சொல்லி, அவைகள் உடனடியாகப் போட வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ள உத்தரவிட வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எக்காரியத்திற்காக பணம் செலவிடப் படுகிறதோ அக்காரியத்திற்கு அந்தப் பணம் பயன்பட வேண்டு

29th March 1958] [Sri K. B. S. Mani]

மென்று தெளிவுறுத்த வேண்டும். அதோடு கூட ரோடுகளின் குடியிருக்கும் மக்களேயும் பார்க்கவேண்டும். அவர்களினுல் பல இடையூறுகளும், போக்குவரத்து சாதனங்களுக்கு இடைஞ்சல்களும் ஏற்படுகிறது என்று இருந்தாலும், அவர்களுக்காக வீடுகள் குடியிருப்பதற்கு வேண்டி கட்டிக் கொடுக்க மராமத்து இலாகாவில் செலவு செய்யப்படும் ஒரு பகுதி பணத்தை அதற்காக ஒதுக்கி வைக்கவேண்டும். பம்பாயில் "லேபரேர்ஸ் க்வார்ட்டேர்ஸ்" என்று கட்டபட்டிருப்பதுபோல் தொழிலாளர்கள் தொழில் செய்கிற இடங்களுக்குப் பக்கத்தில் நாலேந்து அடுக்கு மாடி கட்டி, சிறிய சிறிய அறைகளாகத் தடுத்து அந்தத் தொழிலாளர்களுக்கு குறைந்த வாடகையில் கொடுக்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். இன்று சர்க்கார் ஸலம் கிளியரன்ஸ் என்று, ரோட்டில் வசிப்பவர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுக்கிருர்கள். ஆனல் அவர்கள் அங்கு இருக்க மறுக்கிருர்கள் என்று கூறப்படுகிறது. ஆம், அது உண்மையே. காரணம், ஹார்பரில் வேலே செய்யும் தொழிலாளர்கள் ஹார்பருக்கு இரண்டு மூன்று மைல்களுக்கு அப்பால் இருந்து கொண்டு விடியற்காலே நான்கு மணிக்கு அவர்கள் அங்கு வேலேக்குப் போக வேண்டுமென்று கூறினல் அவர்களால் அது எப்படி முடியும். ஆகவே, நான் சொல்வது, இதில் மிச்சப்படுகிற பணத்தில் இருந்து ஆண்டொன்றுக்கு இவ்வளவு வீடுகள் என்று அவர்களுக்கு கட்டிக் கொடுக்க வேண்டும். அதற்கு ஒரு திட்டவட்டமானமுடிவு செய்து தொழிலாளர்கள் எந்தயிடத்தில் வேலே செய்கிருர்களோ அந்தயிடத்திற்குப் பக்கத்தில் லேபரேர்ஸ் க்வார்ட்டேர்ஸ் என்று கட்டிக் கொடுத்து குறைந்த வாடகைக்கு அவர்களுக்கு கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். சென்னேயில் உள்ள அழகான காட்சிகளே மறைத்து காட்டும் அவமானச் சின்னங்களாக இருக்கிற இந்த நடைபாதை வீடுகளே அகற்றி அவர்களது குடும்பத்திற்கு உதவி செய்வதோடு கூட, அவர்களே மனிதர்களாக மதிப்பதாகும் என்றும் சொல்லிக்கொண்டு அதை அரசாங்கம் செய்யுமாறு கேட்டுக் கொண்டு அடுத்தபடியாக வேருெரு விஷயத்தையும் கூறிக் கொள்ள விரும்புகிறேன். ரோடுகளின் பக்கத்தில் சிலர் வீடுகள் கட்டிக்கொண்டு ஐந்தாறு வருஷங்களாக வாழ்கிருர்கள். அந்தயிடத்திற்கு ஒரு நாள் ஒரு ஆபீஸர் வந்து அதைப் பார்த்து விட்டு அங்குள்ள என்ஜினீயரிடம் ஏன் இது இருக்கிறது என்று கேட்டவுடன் அவர்கள் அங்கு சென்று ஐந்தாறு வருடங்களாக வசிப்பவர்களே உடனடியாக காலி செய்ய வேண்டுமென்று சொல்கிருர்கள். ரோடுகளுக்கு மிகவும் அருகில் இருப்பதால் லாரி, கார்கள் இவைகள் வீட்டிற்குள் புகுந்து ஆக்ஸிடன்ட்ஸ் ஏற்படும் என்றுதான் அவர்கள் அப்படிச்சொல்கிருர்கள். ஆனல் ரோடுகள் போதுமான அளவு வீதி இருந்து அவர்கள் ஒரு ஓரத்தில் குடியிருப்பதால் கஷ்டம் ஒன்றுமில்லே. ஆகவே, எல்லாவற்றையும் நன்கு பரிசீலனே செய்து ரோடு ஓரத்தில் இருக்கும் மக்களே ஐந்தாறு ஆண்டுகள் வசித்து வரும் மக்களே காலி செய்யாமல் இருக்கும்படி இருப்பதற்குள்ள நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

* **Sri M. K. SOMASUNDARAM :** சட்டமன்ற தலேவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து நான் ஒன்றிரண்டு வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஸ்தலஸ்தாபனங்கள், கிராமங்களில் பலவித நன்மைகள் செய்து வருவதை யாரும் மறுக்கமுடியாது. ஆனல் அவைகள் எந்தெந்த இடங்களில் என்னென்ன முறையிலே நடத்தி வரப்படுகிறது என்று நாம் ஆராய்ந்து பார்க்கையில் எல்லா முனிஸிபாலிட்டிகளிலும் மேஜர் பஞ்சாயத்துகளிலும் தான் அந்தமாதிரி வேலேகள் நடந்து வருகிறது என்பது வெளிப்படையாக தெரிகிறது. நம் தலேவர் ராஜேந்திர. பிரசாத் அவர்கள் பத்து நாட்களுக்கு முன்பு பேசியிருக்கிருர்கள். மக்களின் நலனேக் கருதி அவர்களின் க்ஷேமத்தைக் கருதி கிராமங்களில் உள்ள ரோடுகள் நல்ல முறையில் செப்பனிடப்படவேண்டுமென்று அவர்கள் சொல்லியிருக்கிருர்கள். அதை நம் அரசாங்கமும் பின் பற்றும் என்று நான் நம்புகிறேன். ஒரு நாடு முன்னேற வேண்டும், ஒரு நாடு நல்ல நிலே அடைய வேண்டும் என்று நாம் கருதினல் முதன் முதலாக கிராமங்களில் உள்ள ரோடுகள் நல்ல முறை

[Sri M. K. Somasundaram] [29th March 1958

யில் செப்பனிடப்பட்டு, அங்குள்ள மக்களுக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுக்க வேண்டிய கடமை நம் அரசாங்கத்திற்குள்ளது. ஆகவே, முனிஸிபாலிட்டிகளுக்கு ஒதுக்கும் பணம், முதன் முதலாக கிராமங்களில் ரோடுகள் போட ரோட் பண்ட் என்று ஒன்று வைத்து எங்கெங்கு ரோட்கள் போடவேண்டுமென்று பார்த்து அதற்கு ஒரு திட்டம் வகுத்து நல்ல முறையில் நடத்த சர்க்கார் முன் வர வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். அப்படிப்பட்ட ஒரு திட்டம் வகுக்கப்படுமானால், கிராமங்கள் நல்ல முறையில் முன்னேற வசதியிருக்கும். அதோடு கிராமங்களில் ரோடு வசதியில்லை என்று குறை கூறுவதும் நின்றுவிடும். அதோடு இந்த ஆண்டில் சில கிராமங்களுக்கு ரோடு போட்டு விட்டார்கள். ஆகவே, அடுத்த ஆண்டிலாவது நம் கிராமத்திற்கும் வந்து விடும் என்ற நம்பிக்கையும் கிராம மக்களிடையே ஏற்படும்.

11-10 a.m. ஏனென்றால் பல ஜில்லா போர்டுகள் தங்கள் கையிலிருந்து ரோடுகள் போடுகிறார்கள். அதில் சில ஜில்லா போர்டு தலைவர்கள் போய் பார்வையிடுகிறார்கள். இதனால் சில ரோடுகள் நல்ல முறையில் உபயோகப்படுத்தப் பட்டு வருகிறது. ஆனால் சில இடங்களில் ஜில்லா போர்டில் சரியானபடி பணம் இல்லாததினால் சில ரோடுகளை கவனிக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். ஆகையினால் ஜில்லா போர்டுகளுக்கு அதிகமான பணத்தை ஒதுக்குவதற்கு மந்திரி அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். உதாரணமாக தூத்துக்குடியிலிருந்து விளாத்திகுளத்திற்கு போடப்பட்டிருக்கிற ரோடு ஹைவேஸ்-ஸை சேர்ந்ததாய் இருக்கிறது. நான் நாலைந்து மாதங்களுக்கு முன்பு அந்த ரோட்டை போய் பார்த்தபோது அந்த ரோடு முன்னால் இருந்தது மாதிரியே இருக்கிறது. அதே மாதிரிதான் கோவில்பட்டியிலிருந்து புதூர் செல்லுகின்ற ரோடும் முன்னால் இருந்தது மாதிரியே இருக்கிறது. அந்த இடங்கள் பிற்பட்ட வட்டாரமாக இருக்கிறது. சில ஜில்லாப் போர்டு தலைவர்கள் சர்க்கார் அதிகாரிகளை அணுகி சில இடங்களில் ரோடுகள் போட்டிருக்கிறார்கள். ஆகவே எல்லா இடங்களிலும் நல்ல விதத்தில் ரோடுகள் போடுவதற்கு வேண்டிய நடவடிக்கையை நமது அரசாங்கம் எடுக்க வேண்டுமென்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். விளாத்திக்குளத்திலிருந்து வேம்பார் போகிற ரோடு இம்மாதிரியே இருக்கிறது. வேம்பார் என்பது விளாத்திக்குளத்திலிருந்து 16 மைல் தூரத்தில் கடற்கரை ஓரத்தில் இருக்கிறது. ஜில்லா போர்டு ஒரு ரோடு போட்டிருக்கிறது. ஆனால் அது மேலும் செப்பனிடப்படாமல் அழிந்து போய் இருக்கிறது. ஆகவே இதை உடனடியாக ஹைவேஸ்ஸில் எடுத்து அந்த ரோட்டை நல்ல முறையில் செப்பனிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது போக கோவில்பட்டியில்லிருந்து விளாத்திகுளத்திற்கு குறுக்கே வைப்பாறு என்று ஒரு ஆறு இருக்கிறது. இதில் மழை காலத்தில் கரையை கடந்து போவதற்கு மக்கள் கஷ்டப்படுகிறார்கள். இதை நீக்குவதற்கு இதன் குறுக்கே ஒரு அணையைக்கட்டினால் அதன் மூலம் 5,000 ஏக்கர்கள் விளைச்சலுக்கு ஏதுவாக இருக்கும். அங்குள்ள மக்களுக்கும் மிகவும் உதவிகரமாக இருக்கும். இதைப்பற்றி அமைச்சர் அவர்களுக்கு பல மனுக்கள் வந்திருப்பதாக அறிகிறேன். இவைகளை பரிசீலனை செய்து வருகிற ஐந்தாண்டு திட்டத்திலாவது சேர்த்து அந்த அணையை கட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பொதுவாக ஜில்லா போர்டுகளில் ரோடு வேலைகளை எல்லாம் காண்ட்ராக்ட் கொடுக்கப்படுகிறது. இவ்விதம் கொடுக்கும்பொழுது குறைந்த டெண்டர் போட்டு வேலை எடுத்துக்கொண்டு வேலையை ஆரம்பித்த பிறகு சில குறைகள் இருப்பதாக சொல்லுகிறார்கள். முதலில் வேலையை குறைத்து எடுத்துவிடுகிறார்கள். வேலையை ஆரம்பித்த பிறகு பணம் போதவில்லை என்று ஆரம்பித்த ரோடு வேலைகளை அப்படியே போட்டுவிடுகிறார்கள். இதனால் மேலும் வேலை செய்யமுடியாத நிலைமை ஏற்படுகிறது. இதை தடுப்பதற்கு ஜில்லா போர்டுகளிலும் ஹைவேஸ் டிபார்ட்மெண்டிலும் பதிவு செய்திருக்கிற கண்ட்ராக்டர்களுக்கு மாத்திரம் இந்த வேலையை கொடுக்கவேண்டும். வேலையின் தரத்தை உத்தேசித்து இவர்களுக்கு டெண்டர்களை விட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இவ்விதமில்லாமல் இருப்பதினால்தான் குறைந்த டெண்டர்களை எடுக்க கூடியதை பார்த்து மக்களும் குறை கூறுவதற்கு ஏதுவாகிறது என்பதை

29th March 1958] [Sri M. K. Somasundaram]

நாம் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இன்னும் சில ரோடுகளில் 10, 12 வருடங்களாக இன்னும் ரோடுகள் சரியான முறையில் செப்பனிடப்படாமல் இருந்துவருகிறது. ஆகவே ஒவ்வொரு ஜில்லாவிலும், ஜில்லா போர்டின் கீழ் அல்லது ஹைவேஸின் கீழ் இத்தனை ரோடுகள் போடுவது என்று திட்டமிட்டு ஒவ்வொரு வருஷமும் ஒரு சில புதிய ரோடுகள் போடுவதற்கு முன்வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதுதவிர சில ரோடுகளுக்காக மனுக்கள் வருகிறது. அதை போடுவதற்கு வேண்டிய நிலங்களை அக்யூர் செய்வதற்காக ஜில்லா போர்டு தலைவர்கள் முன் வந்தார்கள். சில இடங்களில் சில நிலச்சுவான்தார்கள் தாங்களாகவே நிலத்தை கொடுக்க முன் வருகிறார்கள். இதை நம்பி சில இடங்களில் இரண்டு மைல் தூரம் வரை ரோடு போட்டுவிடுகிறார்கள். பின்னால் ஒரு நபர் நிலத்தை கொடுக்க மறுக்கிறார்கள். இவ்விதம் மறுத்து வருவதினால் சர்க்காருடைய ரூபாய் நஷ்டமடைகிறது. ஆகவே இவ்விதம் மறுக்கப்பட்டு வரும் இடங்களை அக்யூர் செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும் என்று அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்கிறேன். மேலும் இன்று ஜில்லா போர்டுகளில் பணம் போதாத நிலைமையில் இருப்பதாக சொல்லுகிறார்கள். ஆகவே எல்லா ரோடுகளையும் சர்க்காரே எடுத்துக் கொள்வது நலமாக இருக்கும். சில கிராமங்களில் இதைப்பற்றி கவலையே இல்லாமல் இருக்கிறது. யார் யாரோ வருகிறார்கள், யார் யாரோ போகிறார்கள், ஜனாதிபதி வருகிறார், போகிறார் என்று பலரும் சொல்லுகிறார்கள். ஆகவே மக்களுடைய நலனை கருதி நல்ல முறையில் அரசாங்கம் எல்லா ரோடுகளையும் போடுவதற்கு சர்க்கார் அதை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டு கொள்கிறேன். இதுதவிர பாலங்கள் கட்டுகிற விஷயத்தில் சில இடங்களில் கண்ட்ராக்டர்கள் வெறும் மண்ணை வைத்து உள்ளே கட்டி விட்டு மேலே சிமிண்ட் பூசி விடுகிறார்கள். பின்னால் காலினால் தட்டும்பொழுது கீழே விழுந்து விடுகிறது. உதாரணமாக எங்கள் ஊரைச்சுற்றி 4 பாலங்கள் கட்டப்பட்டிருக்கிறது. அதை கையினால் தள்ளும்போது விழுந்து விட்டது. ஆகவே கண்ட்ராக்டர்கள் செய்யும் வேலைகளை சூப்பர்வைஸர்கள் சரியான படி கவனிக்க வேண்டும் என்று அரசாங்கம் உத்தரவு போட வேண்டும். அவ்விதம் சரியானபடி மேற்பார்வையிடாமல் இருக்கும் அதிகாரிகளின்மீது தகுந்த நடவடிக்கை எடுப்பதற்கு அரசாங்கம் முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கண்ட்ராக்டர்களுடன் சூப்பர்வைஸர்களும் சேர்ந்து கொண்டால் நம்முடைய நிலைமை என்னவாகும் என்பதை நாம் பார்க்க வேண்டும். இது தவிர சில இடங்களில் ரோடுகள் போடுகிற விஷயத்தில் குறுக்கே சில ஓடைகள் போகிறது. இந்த ஓடைகள் மீது பாலங்கள் கட்டாமல் இருப்பதினால் அந்த கிராமங்களிலிருந்து மெயின் ரோட்டுக்கு கனக்ஷன் இல்லாமல் இருக்கிறது. ஆகவே இவ்விதமான ஓடைகளில் பாலம்கட்ட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். உதாரணமாக சில கிராமத்திலிருந்து மெயின் ரோட்டுக்கு இந்த ஓடை கடந்தால் இரண்டு பர்லாங் தூரம் இருக்கும். ஆனால் பாலம் இல்லாமல் இருப்பதினால் ஐந்து மைல் தூரம் சுற்றி வர வேண்டியிருக்கிறது. ஆகவே ரோடுகள் போடும் விஷயத்தில் நிலம் கொடுக்க மறுக்கும் நபர்களிடமிருந்து அக்யூர் செய்வதற்கும் இம்மாதிரிப்பட்ட குறுகிய ரோடுகள் போடுவதற்கு தக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக டிஸ்ட்ரிக் போர்டில் வேலை செய்கிறவர்கள் உற்சாகத்துடன் வேலை செய்ய முடியாத நிலையில் இருக்கிறார்கள். ஜில்லா போர்டை ஸெமி கெவர்ண்மெண்ட் என்று சொல்லுகிறார்கள். ஜில்லா போர்டுகளிலுள்ள ஊழியர்களும் சர்க்கார் ஊழியர்களை போலவே வேலை செய்து வருகிறார்கள். ஆகவே இவர்களுக்கும் மற்ற சர்க்கார் ஊழியர்களுக்கும் இருக்கும் சம்பள விகிதத்தில் இருக்கும் வித்தியாசத்தை மாற்றவேண்டும். இதனால் அவர்கள் உற்சாகமாக வேலை செய்ய முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். ஆகவே ஜில்லா போர்டுகளில் இருக்கும் ஊழியர்களுக்கும், முனிசிபாலிட்டியில் இருக்கும் ஊழியர்களுக்கும் சர்க்கார் ஊழியர்களைப்போலவே ஒரே சம்பள விகிதத்தை கொடுக்க வேண்டும், எல்லோருக்கும் சம்பள விகிதம் ஒரே யூனிபாரமாக இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இந்த சம்பளம் வித்தியாசம் இருப்பதால் ஜில்லா

[Sri M. K. Somasundaram] [29th March 1958

போர்டு ஊழியர்கள் மனச்சோர்வு அடைகிறார்கள். ஆகவே அதை மாற்றுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கவேண்டும் என்று அமைச்சர் அவர்களை கேட்டுக் கொள்கிறேன்.

* **Sri T. THIRUMALAIMUTHU VEERASAKAYYA THIRUVENKADASAMI NAICKER:** கனம் சபாநாயகர் அவர்களே, சபை முன் வந்திருக்கிற மான்ய கோரிக்கையின் மீது கனம் அங்கத்தினர் ஷண்முகம் அவர்கள் கொண்டு வந்திருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து சில வார்த்தைகளை சொல்ல ஆசைப்படுகிறேன். இந்த மராமத்து இலாகா மான்ய கோரிக்கையில் 1958–59ல் ஜில்லா போர்டுகளுக்கு 32 லட்சம் ரூபாய் கொடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இன்னும் அதிகமாக ஜில்லா போர்டுகளுக்கு அதிக தொகை கொடுத்தால்தான் கிராம ரஸ்தாக்களும், இன்னும் கட்டிடங்கள், பள்ளிக்கூட கட்டிடங்கள் மற்றவைகளும் கட்டுவதற்கு வசதியாக இருக்கும். ஓரிரண்டு இடங்களில் போடப்பட்ட ரோடுகள் கூட பூர்த்தியடையாத நிலையில் பல
11-20 a.m. வருஷங்களாக இருந்து வருகின்றன. உதாரணமாகச் சொல்ல வேண்டுமானால் எனது வட மதுரைத் தொகுதியில், வட மதுரை பிர்க்காவிலே வேல்வேர்க்கோட்டை என்பது வியாபாரிகள் நிறைந்த ஊர். அங்கு பெரும்பாலும் முஸ்லீம்கள் தான் வாழ்ந்து வருகிறார்கள். அவர்களிலே அநேகர் வியாபாரிகள். அந்த ஊருக்கு போக்குவரத்து வசதி என்பதே கிடையாது. 6, 7, வருஷங்களுக்கு முன்னால் ஜில்லா போர்டினால் ரோடு போடப்பட்டு, மத்திய சர்க்காரின் தலையீட்டினால் ரயில் பாதையைக் கடந்து செல்லவேண்டிய நிலை இருப்பதால், மத்திய சர்க்காரின் அனுமதி கிடைக்காததால் இன்னும் பூர்த்தியடையாத நிலையில் இருக்கிறது. அந்த ரோடு பூர்த்தியடைய, மத்திய சர்க்கார் அங்கே ஒரு கேட்டை அமைக்க ஆகக் கூடிய செலவையும், அந்த கேட்டை காவல் காக்க காவலாளிக்காக ஆகக்கூடிய செலவையும் ஜில்லா போர்டு ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கூறியதால், ஜில்லா போர்டின் நிதி நிலைமை சரியில்லாத காரணத்தினால் அந்த ரோடு இன்றைய வரையில் பூர்த்தியாகாமல் இருந்து வருகிறது. கனம் அமைச்சர் அவர்கள் இது சம்பந்தமாக வேண்டுவன செய்து, ஒன்று நம் ராஜ்ய சர்க்காராவது அந்த கேட்டை அமைப்பதற்கான தொகையையும், காவலாளிக்கான தொகையையும் ஒத்துக் கொள்ள வேண்டும், அல்லது ரெயில்வே ஸெஸ் நிதியிலிருந்து இவைகளுக்கு ஆகும் செலவை ஒதுக்கி அந்த ரோட்டைப் பூர்த்தி செய்து அந்தப் பிராந்திய மக்களுக்கு போக்குவரத்து வசதி செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இரண்டாவதாக, நத்தம் பிர்க்காவிலே கோவில்பட்டியை அடுத்து ஒரு ஆறு போகிறது. அந்த ஆற்றின் மீது பாலம் கட்டப்பட்டு சுமார் 4, 5 வருஷங்களுக்கு முன்பு அந்த கட்டப்பட்ட பாலம் அடித்துக் கொண்டு போகப்பட்டது—வெள்ளத்தினால் அடித்துக்கொண்டு போகப்பட்டது. இன்றளவுக்கும் சிமெண்ட் குழாய்கள்தான் அவ்விடத்திலிருக்கிறதேயொழிய அந்தப் பாலம் பல வருடங்களாகியும் பழுது பார்க்கப்படவில்லை. அந்தப் பாலத்தையும் கனம் அமைச்சர் அவர்கள் உடனடியாக கட்டிக்கொடுக்க முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

வட நத்தம் பிர்க்காவிலே நத்தம்-குட்டிப்பட்டி-மனக்காட்டூர் ரோடு, 4, 4½ மைல் ரோடுகளில் சரளைகள், மெட்டல்கள் சேகரிக்கப்பட்டு, இன்று வரையில் ஒன்றும் செய்யப்படாமல் இருந்து வருகிறது. அதற்குக் காரணம் என்ன என்றால் அந்த என்ஜினீயர் அவர்களுக்கும் அந்த கண்ட்ராக்டருக்கும் உள்ள வேறுபாடுதான். நான் இது சம்பந்தமாக பல தடவை சொல்லிப் பார்த்தேன். ஆனால் நாளதுவரை அவர் வேலையை செய்து முடிக்க வில்லை. அது பஸ்கள் போகக் கூடிய பாதை. அதை உடனடியாகப் பழுது பார்த்துத் தரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

29th March 1958]
[Sri T. Thirumalaimuthu Veerasokayya Thiruvenkadasami Naicker]

அடுத்தப்படியாக செங்குரிச்சியிலிருந்து மணக்காட்டூர் வரையில் பல பாலங்கள் கட்டப்படுகின்றன. ஆனால் அந்தப் பாலங்களின் வேலைகள் இன்று வரையில் முடிவடையவில்லை. 2, 3 வருஷங்களாக வேலை முடியாமல் இருக்கிறது. முன்பு சொன்ன அதே கண்ட்ராக்டர்தான் இந்த பால வேலையையும் செய்து வருகிறார். அந்தப் பால வேலைகளும் பூர்த்தி செய்து முடிக்கப்படவேண்டும். கனம் அமைச்சர் அவர்கள் இந்த வேலைகளை உடனடியாகச் செய்து தரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தப்படியாக புதிதாக இப்போது போலீஸ்காரர்களுக்கு கட்ட உத்தேசித்து ஒதுக்கப்பட்ட தொகையில் பல லட்சக் கணக்கான ரூபாய்கள் தங்கியிருக்கிறது. இந்த ரூபாய்களையெல்லாம், இதற்கு முன்பே யோசனை செய்து ஜில்லா போர்டுகளுக்குப் கொடுத்திருந்தால், ஜில்லா போர்டுகள் நல்ல முறையில் அந்தந்த பிராந்தியத்தில் கிராம மக்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்துகொடுத்திருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்பு கிறேன்.

குறிப்பாக மதுரை நத்தம் ரோடில் சத்திரப்பட்டியிலிருந்து நத்தம் வரை உள்ள ரோடு மிக மோசமான நிலையில் இருக்கிறது. அந்த ரோடு பஸ்கள் நிறைய போக்குவரத்து உள்ள ரோடு. வண்டி போக்குவரத்து அதிகம். சத்திரப்பட்டி வரையில் தார் போடப்பட்டு நன்றாக இருக்கிறது. நத்தம் வரையில் உள்ள ரோடு மிக மோசமான நிலையில் இருக்கிறது. அதைப் பற்றியும் அமைச்சர் அவர்கள் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

யுத்த பிற்கால ரஸ்தா அபிவிருத்தி திட்டப்படி போடப்பட்ட ரோடு கம்பளியம்பட்டியிலிருந்து மணக்காட்டூர் வரை போடப்பட்டு இருக்கிறது. திண்டுக்கல்லிலிருந்து செங்குரிச்சி வரையில் ரோடு 14 மைல். அதிலி ருந்து மணக்காட்டூர் வரை 6 மைல் ரோடு போடப்பட்டிருக்கிறது. மணக் காட்டூரிலிருந்து துவரங்குரிச்சி வரையில் 6, 7 மைல் தூரம் உள்ள ரோடு ஒன்று போடப்படுமானால், திண்டுக்கல்லிலிருந்து திருச்சி ஜில்லா எல்லை வரையில் மிகவும் குறைந்த மைல் தூரம் பிரயாணம் செய்து திருச்சி ஜில்லா பிரதேசத்தை அடைய முடியும். அதற்கான வழி வகை களைச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri P. URKAVALAN :** கனம் சபாநாயகர் அவர்களே, மராமத்து இலாகா மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் பேச விரும்பு கிறேன். அம்மானியத்தில் தற்போதுள்ள சாலைகளும், அமைக்கப்படவிருக் கும் சாலைகளும் ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அதில் தேசீய நெடுஞ்சாலைகள், மாநில நெடுஞ்சாலைகள், பெரிய மாவட்டச் சாலை கள், இதர மாவட்டச் சாலைகள், கிராமச் சாலைகள் என்று பிரிக்கப்பட்டி ருக்கின்றன. இதில் பெரும்பாலும் மத்திய சர்க்காரிலிருந்து போடக் கூடிய சாலைகள் நல்ல விதமாகவே போடப்பட்டு வருகிறது. ஜில்லா போர்டு, மற்றும் இதரர்கள் போடுவது சரியான முறையில் போடாததற்குக் காரணம் பணம் போதாததுதான். ஆகவே, நெடுஞ்சாலையிலிருந்து இணை ப்பு ரோடுகள் போடுவதை மத்திய சர்க்கார் போடவேண்டும். ஏனென் றால் கிராமங்களுக்கு மத்திய சர்க்கார் பண்டிலிருந்து போட்டால்தான் அந்த ரோடுகள் நல்ல முறையில் இருக்கமுடியும். இப்போது கரிவலம் வந்தநல்லூரிலிருந்து ஒரு வில்லேஜ் ரோடு போடப்பட்டுவருகிறது. அதில் 20, 25 பாலங்கள் வருகின்றன. அதற்கு 50,000 ரூபாய் ஸாங் ஷன் செய்யப்பட்டிருக்கிறது. ஆனால் 50,000 ரூபாய் போதாது. ஒரு லட்ச ரூபாய் செலவழித்தால்தான் பாலங்களையெல்லாம் பலமாகக் கட்ட முடியும். அதற்கு மேற்கே ராயகிரி 11-ம் நம்பர் ரோடிலிருந்து 8-ம் நம்பர் ரோடு வரை 10 மைல் இருக்கிறது. மத்திய சர்க்கார் பண்டி லிருந்து ரோடு போட்டால் பஸ் போன்றவைகள் விடுவதற்கு ஏதுவாக இருக்கும், ஆகவே, மத்திய சர்க்கார் பண்டிலிருந்து கிராம இணைப்பு ரோடுகள் போட நாம் முற்படவேண்டும். அதற்கு முன்னால் தென் மலைக்கு ரோடு பஞ்சநிவாரண வேலையின்கீழ் போட்டிருக்கிறார்கள்.

அது 10 மைல் ரோடு. கிட்டத் தட்ட 10 வருஷங்கள் ஆகியும் இப்போது அது செப்பனிடப்படாமல் அப்படியே இருக்கிறது. அதற்கும் மத்திய சர்க்கார் பண்டிலிருந்து கிராம இணைப்பு ரோடு போட்டால் அந்த ரோடு நல்ல முறையில் 25 மைல் பஸ் போக ஏதுவாக இருக்கும்.

இப்போது கரிவலம்வந்தநல்லூரிலிருந்து கலிங்கப்பட்ட வரை பஸ் போகிறது. இந்த தென் மலை ரோடை மத்திய சர்க்கார் பண்டிலிருந்து போட்டு முடித்தால் சிவகிரியிலிருந்து கோவில்பட்டி போவதற்கு 25 மைல் இருக்கும். சிவகிரியிலிருந்து கோவில்பட்டி போக ரொம்ப சுற்றிப் போகிறார்கள். ஆகவே, மத்திய சர்க்கார் பண்டிலிருந்து கிராம ரோடுகள் போடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

11-30 a.m. *SRI M. MUTHUSWAMY NAYAGAR: கனம் சபாநாயகர் அவர்களே, இன்று நம்முடைய அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் மான்யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நமது சர்க்கார் எவ்வளவோ பாதைகளைப் போடுகிறார்கள். இருந்தாலும், அதிலே யுள்ள சில குறைகளைச் சொல்லித்தான் ஆகவேண்டும். ஹரிஜனங்கள், பிற்பட்ட வகுப்பினர், குறிப்பாக மீனவர் வசிக்கும் இடங்களிலே கொஞ்சம் கூட ரோடு வசதியில்லாமல் இருக்கிறது. ஹரிஜனங்களில் கூட மேட்டுக்குடியாக இருப்பவர்களுக்குத்தான் ரோடு வசதியிருக்கிறது. ஏழைகளுக்கு இல்லவே இல்லை. இதை எல்லோரும் நேரில் பார்த்திருக்கலாம். நமது மதிப்பிற்குரிய அமைச்சர் இந்த விஷயத்தில் அதிக அக்கரை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

திருப்போரூர் கிராமத்திலே குடி தண்ணீருக்காக சர்க்காரிலே வசதி செய்து கொடுத்திருக்கிறார்கள். ஜாதி ஹிந்துக்களுக்குத்தான் தண்ணீர் வசதி செய்திருக்கிறார்களேயொழிய, ஹிரிஜனங்களுக்கு தண்ணீர் வசதி கிடையாது. குறைந்தபட்சம் அங்கே 2,000 ஹரிஜனங்கள் இருக்கிறார்கள். ஒரு குழாய் கூடப் போடவில்லை. இதையெல்லாம் எஞ்சினீயர்கள் இல்லாமல் செய்ய முடியாது. நான் இதைப்பற்றி 3 அல்லது 4 மாதத்திற்கு முன்பு சர்க்காருக்கு எழுதியிருக்கிறேன். அதற்கு " yes or no " என்ற பதில் கூட கிடையாது. இதையெல்லாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளும் படி அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

ரோடு போடுவதற்காக கற்களைக் கொட்டி பல மாதங்களாக அப்படியே வைத்திருக்கிறார்கள். யார் காண்டிராக்ட் எடுத்திருக்கிறார்கள், யார் இந்த வேலையைச் செய்கிறார்கள் என்று தெரியவில்லை. தாம்பரத்திலிருந்து மணவாக்கம் வரையிலும் சுமார் 5 மைல் தூரத்திற்கு "தார் ரோடு" போட்டிருக்கிறார்கள். இன்னும் 3 மாதங்கள் கூட ஆகவில்லை. அதற்குள்ளாக பாளம்பாளமாக, பெயர்ந்து வந்து விட்டது. எங்களைப் பார்த்துத்தான் ஊர் ஜனங்கள் சண்டை போடுகிறார்கள். சூப்பர்வைசர், எஞ்சினியர்கள் அதைச் சரியாகப் போட்டிருக்கவேண்டும். ஆனால் பழி, பாவம் எல்லாம் எங்களுக்குத்தான் வருகிறது. ஆகவே இந்த மாதிரி விஷயங்களிலெல்லாம் அதிக அக்கரை எடுத்துக்கொண்டு, ஜனங்களுக்குத் திருப்தி செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

கேளம்பாக்கத்திலிருந்து வண்டலூருக்கு தார் ரோடு போடுகிறார்கள் பள்ளங்கள் இருந்தால் அப்படியே போட்டு விடுகிறார்கள். நான் "காமன் ஸென்ஸ்" லிருந்து தான் இதைச் சொல்லுகிறேன். இரண்டு நாட்களுக்குப் பின்னால் பெயர்ந்து போய்விடுகிறது. நான் சர்க்கார் கட்சியைச் சேர்ந்தவன்தான். நண்பன்தான். உண்மையான நண்பனாக இருந்தால் இருக்கிற குறைகளை எடுத்துச் சொல்லவேண்டும். ஆகவே இதையெல்லாம் உடனடியாக கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். திருப்போரூரிலிருந்து செங்கல்பட்டுக்கு தார் ரோடு போடுகிறார்கள். ரூபாய் $1\frac{1}{2}$ லட்சம் செலவாகிறது. ஆனால் எனக்குத் திருப்தியில்லை. எஞ்சினியர்கள், சூப்பர்வைசர்கள் சரியாக கண்காணிப்புச் செய்யவில்லை. சர்க்கார் எவ்வளவோ கோடிக்கணக்கான ரூபாய்களை ஒதுக்கி திட்டங்களைப் போடுகிறார்கள். ஏழைகளுக்கு எவ்வளவோதான் செய்கிறார்கள். என்ன செய்கிறது?

9th March 1958] [Sri M. Muthuswamy Nayagar]

எஞ்சினியர்கள் போய் சரியாக கண்காணிப்பு செய்தால்தானே? இதை நான் சொல்லும்போது கஷ்டமாய்த்தான் இருக்கும். இருந்தாலும் பரவா யில்லை. பலகை வாராவதியிலிருந்து கோவளத்திற்கு புது ரோடு போடு கிறார்கள். ஹரிஜனங்கள், மீனவர்கள் வசிக்கும் இடங்களுக்கு ரோடு வசதி அளிக்கவேண்டும். 40,000 அல்லது 50,000 ரூபாய் பெறுமான பெரிய கார்கள் மகாபலிபுரம் போவதற்காக வசதி செய்து கொடுத்தால், ஏழை களின் சர்க்கார் என்று சொல்ல முடியாது. ஆகவே இந்தத் திட்டங் களின் கூடவே, இன்னும் 50,000 ரூபாய் பணம் செலவானாலும் சரி, ஏழைகளுக்கும் ரோடு வசதி செய்து கொடுத்தால் நன்றாக இருக்கும்.

நெய்வேலியில் ஹரிஜனங்களுக்காக 20 வீடுகள் கட்டியிருக்கிறார்கள். சர்க்கார் பணம்தான் செலவாகிறது. ஆனால் வீடுகள் எப்படியிருக்கிறது என்றால், "கை விட்டாலும் போகும், கால் விட்டாலும் போகும்" என்ற நிலைமையிலேதான் இருக்கின்றன. கனம் அமைச்சர் அவர்கள் நேரிலே வந்து பார்த்தார்கள். எஞ்சினியரும் கூட வந்தார்கள். ஒரு சில இடங் களில் இந்த மாதிரி நிலைமைதான் இருக்கிறது. இந்த மாதிரி சம்பவங் கள் நேராதபடி ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ள வேண்டும். முக்கிய மாக, ஹரிஜனங்களுக்கு ரோடு வசதி கிடையாது. மின்சார வசதி, ரோடு வசதி, தண்ணீர் வசதி செய்து கொடுக்கவேண்டும். "ஹரிஜனங்களுக்கு நன்மை செய்கிறோம், நன்மை செய்கிறோம்" என்று சொன்னால் மட்டும் பிரயோஜனம் இல்லை.

எனக்கு இன்னும் 5 நிமிஷம் இருக்கிறது. இருந்தாலும், கடைசி யாக ஒரு பாட்டை சொல்லிக் கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

"பாராயோ பாதையில்லா
பாவிகள் பரிதவிக்கும்
பார்த்துமே ஏழைகள் கவலையை
தீராயோ கண்கொண்டு
செப்பாய் பராபரமே".

*Sri A. R. MARIMUTHU : கனம் சபாநாயகர் அவர்களே, சபைமுன் கொண்டு வந்திருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த் தைகள் சொல்ல விரும்புகிறேன். நம் நாடு குறிப்பாக விவசாயம் மிகுந்த நாடு. கிராமங்கள் மிகுதியாக உள்ள நாடு. கிராமத்தையே அடிப்படை யாகக் கொண்டு வளர்ச்சி பெறவேண்டிய நாடு. ஆகவே, கிராமங்கள் எல்லாம் ஒன்றுக்கொன்று இணைந்திருக்கும்படியாகவும், கிராமங்களில் விளை யும் பொருள்களையெல்லாம் எந்தவிதமான சிரமமும் இல்லாமல் வெளி யிடங்களுக்கு எடுத்துச் சொல்வதற்கும், கிராம மக்களுக்குத் தேவையான எல்லா சாமான்களையும் வெளியிலிருந்துகொண்டு வருவதற்கான வசதி செய்து கொடுக்க வேண்டியது அரசாங்கத்தின் முழு முதல் கடமை, முக்கியமான கடமையுங் கூட, இன்றைக்கு நம் நாடு இருக்கக் கூடிய நிலையிலே ரோடு வசதிகள் போதவில்லை. கிராமங்களிலே இருக்கும் மக்கள் படும் கஷ்டம் சொல்லத்தரமன்று. அவ்வளவு சிரமப்படுகிறார்கள். ஆகவே கிராம ரோடுகள் விஷயத்தில் அரசாங்கம் அதிக கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றைய தினம் நாம் பொருளாதாரத் துறையில் மிகவும் பிற்போக் கான நிலையிலிருக்கிறோம். அதிகப்படியாக பணம் போட்டு முதலீடு செய் வதற்கு நம்மால் முடியவில்லை. ஆகவே, எது எது மிகவும் அவசியம், அவசரம் என்பதை உணர்ந்து அதற்குத் தகுந்தவாறு நடவடிக்கை எடு த்துக்கொள்ளவேண்டும். அநேக இடங்களில் தார் ரோடுகள், ஸிமெண்ட் ரோடுகள் போடுவதில் அரசாங்கம் முக்கிய கவனம் செலுத்தி வருகிறது. கவனம் செலுத்தவேண்டாம் என்று நான் சொல்லவில்லை. கிராம மக்கள் சாதாரண ரோடு வசதியே இல்லாமல் தவிக்கும்பொழுது, தார் ரோடுகள் போடுவதும், ஸிமெண்ட் ரோடுகள் போடுவதும் அவசியமா ?

[Sri A. R. Marimuthu] [29th March 1958

இதைக் கொஞ்சகாலம் நிறுத்திக்கொண்டு, போட்ட ரோடுகளை மட்டும் பராமரித்துக்கொண்டு, புதிதாக இம்மாதிரி ரோடுகள் போடுவதற்கு முதலீடு செய்யும் பணத்தை ஏன் கிராம ரோடுகளை அபிவிருத்தி செய்வதற்கு உபயோகப்படுத்தக்கூடாது என்று கேட்கிறேன். இன்னும் ஜில்லா போர்டுகளை எடுத்துக்கொண்டால், புதிதாக ரோடுகள் போடும் வேலையை இப்பொழுது அநேகமாக கைவிட்டுவிட்டார்கள். ஏனென்றால் பண வசதியில்லை என்று சொல்லுகிறார்கள். ஜில்லா போர்டு பராமரிப்பில் இருக்கக்கூடிய ரோடுகள் மிகவும் கேவலமான நிலையில் இருக்கின்றன. ரோடுகளை பராமரிப்பு செய்யவேண்டுமென்று சொன்னால், பணமில்லை என்று சொல்லுகிறார்கள். இந்த நிலைமையில், சர்க்கார் ஜில்லா போர்டுகளுக்கு அதிகமாக மான்யம் கொடுத்து, புதிய ரோடுகள் போடுவதற்கு வழிவகை செய்யவேண்டும். தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொண்டால், ஜில்லா போர்டின் மேற்பார்வையில் இருக்கிற அநேகம் ரோடுகள் மிகவும் மோசமான நிலையில் இருக்கின்றன, ஏனென்று கேட்டால் பணமில்லை என்று சொல்லுகிறார்கள். புயலால் பாதிக்கப்பட்ட ரோடுகள் இன்னும் செப்பனிடப்படவில்லை. பெருகவளந்தானிலிருந்து பாப்பாநாடுக்கு ஒரு ரோடு போகிறது. கண்ணனாற்றில் ஒரு பாலமிருக்கிறது. பாலமும் ரோடும் புயலி
11–40 a.m. னால் பாதிக்கப்பட்டு, இன்னும் செப்பனிடப்படாமல் இருக்கிறது. பட்டுக்கோட்டையில் மன்னார்குடி வடசேரி வழியாகப் போகும் ரோடு, மிகவும் பழைய ரோடு. வண்டிகள், ரொம்பவும் கஷ்டப்பட்டு போக வேண்டியதாயிருக்கிறது. அந்த ரோடு மிகவும் நொடிந்து போய் இருக்கிறது. அதை சரியாக பராமரிப்பதற்கு ஜில்லா போர்டுக்கு பணம் இல்லை. அந்த ரோடில் இப்பொழுது பஸ் போய்க்கொண்டிருக்கிறது. அதை ஹைவேஸ் டிபார்ட்டுமெண்டு எடுத்துக்கொண்டு பராமரிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

கிராம ரோடுகள் அபிவிருத்தியை இப்பொழுது பிளாக் டெவலப்மெண்டுக்கு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இதற்காக ஒவ்வொரு பிளாக்குக்கும் 30,000 ரூபாய் தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த தொகையை வைத்துகொண்டு எத்தனை கிராம ரோடுகள் பாலங்கள் அமைக்க முடியும் என்று தெரியவில்லை. இப்படிச் செய்வதனால் அபிவிருத்தி வேலைகளை வேகமாகச் செய்ய முடியாது. ஆகையால் இந்த மான்யத்தை அதிகப்படுத்தி, நல்ல முறையில் கண்காணிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இந்த ஜில்லா போர்டுகளின் பகுதியில் இருக்கும் ரோடுகளை எல்லாம் ஹைவேஸ் டிபார்ட்மெண்டுதான் கவனித்துக்கொண்டு வருகிறது. தஞ்சை ஜில்லாவில் 5 அல்லது 6 வருஷங்களுக்கு முன்பு சாங்ஷன் ஆன ரோடுகள் எல்லாம் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லை. ஆரம்பித்தவை இன்னும் முடிக்கப்படவேயில்லை. ஹைவேஸ் டிபார்ட்டுமெண்டைக் கேட்டால் அவர்களுக்கு முக்கியமான ரோடுகளை கவனிக்கும் வேலையே அதிகமாக இருப்பதாகவும், இவைகளை உடனடியாக கவனிக்க இயலவில்லை என்றும் சொல்லுகிறார்கள். இறிகேஷன் டிபார்ட்டுமெண்டில் ஒரு கால்வாயை கவனிப்பதற்கு எவ்வளவு சிப்பந்திகள் இருக்கிறார்களோ அதில் மூன்றில் ஒரு பாக அளவுதான் இந்த ஹைவேஸ் டிபார்ட்மெண்டில் இருக்கிறார்கள். ஆகையால் இந்த ஹைவேஸ் டிபார்ட்மெண்டுக்கு அதிகாரிகளை அதிகம் கொடுத்து இந்த ரோடுகளை நல்ல முறையில் கவனிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

கீழ்க்குறிச்சியிலிருந்து நெய்மலிக்கு போகும் ரோடு சாங்ஷன் ஆகிப் பல வருஷங்கள் ஆகியும் இன்னும் சர்வே கூட செய்யப்படவில்லை. பட்ஜெட்டில் ரூபாயை மட்டும் ஒதுக்கிவிட்டால் போதாது. அது நல்ல முறையில் செலவழிக்கப்படுகிறதா என்று பார்க்கவேண்டும். அப்படி நடப்பதற்கு மேற்கொண்டு அதிகாரிகளும், மற்ற வசதிகளும் செய்து கொடுக்க வேண்டும்.

தஞ்சாவூர் ஜில்லாவில் "கோஸ்டல் ஹைவேஸ்" என்று ஒரு ஸ்கீம் போடப்பட்டது. அது இப்பொழுது என்ன ஆயிற்று என்று தெரியவில்லை கடலோரத்தில் இருக்கக்கூடிய அநேக கிராமங்களை இணைக்கக்கூடிய ஒரு

29th March 1958] [Sri A. R. Marimuthu]

நல்ல திட்டம் இது. இதனால் மீன் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களும், உப்பு தொழில் ஈடுபட்டு உள்ளவர்களுக்கும் வசதிகள் ஏற்படும்படி இந்த திட்டத்தை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்க்காவிட்டாலும் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது எடுத்துக்கொண்டு நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் ஜில்லாவில் அநேக கால்வாய்கள் இருக்கின்றன. அதை ஒட்டி கிராமங்களை இணைக்கும்படி ரோடுகள் போட்டால் மிகவும் வசதியாக இருக்கும். இதற்காக தனியாக நிலங்களை வாங்க வேண்டிய அவசியம் இல்லை. இந்தக் கால்வாய் கரைகளை ரோடுகளாகச் செய்து விட்டால் புதிதாக நிலம் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. இதைப்பற்றி இறிகேஷன் டிபார்ட்டுமெண்டைக் கேட்டால் கால்வாயின் கரையோரம் கெட்டுப் போய்விடும் என்று சொல்கிறார்கள். அதற்காக அங்கங்கே பள்ளங்கள் குழிகள் வெட்டி விடுகிறார்கள். அதனால் ஸைகிள் கூடப் போக முடிவதில்லை. ஜில்லா போர்டிலிருந்து கண்காணித்துக்கொள்வதற்காக பணம் கொடுத்தால் முக்கியமான ரோடுகளாக பராமரிக்க முடியும் என்று சொல்கிறார்கள். ஜில்லா போர்டுகளுக்கு அவர்களின்கீழ் இருக்கும் சிறிய ரோடுகளையே சரிவர பராமரிக்க முடியாமல் இருக்கும் பொழுது அவர்கள் பணத்திற்கு எங்கே போவார்கள். ஆகையால் நாம் இறிகேஷன் டிபார்ட்மெண்டுக்கு ரோடு மானியமாகத் தொகை ஒதுக்க வேண்டும். ஜில்லா போர்டுகள் கொடுப்பார்கள் என்று இருந்தால் அது நடைபெறாத காரியம். ஆகையால் ஆற்று ஓரங்களில் இருக்கும் ரோடுகளை சரியாக உபயோகப்படுத்திக் கொள்ளும் வகையில் நாம் காரியங்களை செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். நகரங்களில் இருப்பவர்கள் கூட ரோடு வசதிகள், தண்ணீர் வசதிகள் வேண்டுமென்று கேட்கிறார்கள். நான் அவர்களுக்கு அந்த வசதிகளை செய்துகொடுக்க வேண்டாமென்று சொல்லவில்லை. ஆனால் கிராமப்புறங்களில் நிலைமை மிகவும் கேவலமாக இருக்கிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். நகரப்புறங்களில் செய்து கொடுக்கும் வசதிகளைவிட கொஞ்சம் அதிகமாகவே கிராமங்களுக்கு செய்து கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri V. S. MANIKKASUNDARAM**: ஸார், இந்த அரசாங்கம் கொண்டு வந்திருக்கும் மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இப்பொழுது பொது மராமத்து இலாகாவும் நீண்ட சாலை இலாகாவும் ஒன்றாக இணைப்பதற்கு ஒரு திட்டம் இருப்பதாக தெரியவருகிறது. இப்பொழுது பொது மராமத்து இலாகாவில் காலதாமதம் ஆகிறது என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அப்படியிருக்கும்பொழுது இந்த இரண்டு இலாக்காக்களையும் ஒன்றாக இணைத்தால் நல்ல முறையில் வேலைகள் செய்வதற்கு உகந்தது அல்ல என்றுதான் என்னுடைய அபிப்பிராயம் என்பதை பணிவோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இரண்டு இலாக்காக்களையும் தனித் தனியாக இயங்கிகொண்டிருப்பது மிகவும் அவசியம். என்ஜினியரிங் காலேஜிலே ஹைவேஸ்க்கு ஒரு தனி ஸப்ஜெட்டாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். கல்லூரியிலே இந்த இரண்டையும் தனிததனியாக பிரித்து பாடம் சொல்லிக்கொண்டிருக்கும்போழுது பிறகு உத்தியோகத்திற்கு வரும்போது மட்டும் இவைகள் இரண்டும் இணைத்து இயங்கச் செய்வது அவ்வளவு நல்லதாக இருக்காது என்பது என்னுடைய கருத்து. இந்த அதிகாரிகளுக்கு கொடுத்த ஸ்பெஷலைஸ்டு டிரையினிங் நமக்கு பூரணமாகக் கிட்டாது.

பி. டபிள்யூ. டி. ஹைவேஸ் டிபார்ட்மெண்டுகளைச் சார்ந்த கண்டிராக்டரைப்பற்றி ஒரு சில யோசனைகளைச் சொல்ல விரும்புகிறேன். தஞ்சாவூர் ஜில்லாவில் கண்டிராக்ட்களுக்கு பல கண்டிராக்டர்கள் மிகவும் குறைந்த விகிதாச்சாரத்தில் விண்ணப்பத்தை அரசாங்கத்திற்கு சமர்ப்பித்துக் விடுகிறார்கள். இதற்குக் காரணம் என்னவென்றால் மற்றவர்கள் தங்களுக்கு போட்டியாக வரக்கூடாது என்பதுதான். இவர்கள் வேலையை சரியாக பூர்த்தி செய்யாமல் பினான்ஷியல் வருட கடைசியில் அரசாங்கத்திற்கு

[Sri V. S. Manikkasundaram] [29th March 1958

பணத்தை சரண்டர் செய்துவிடுகிறார்கள். பிறகு அடுத்த வருஷம் அதிக தொகைக்கு வேலையை எடுத்துக்கொண்டு நிறைய லாபம் சம்பாதிக்கிறார்கள். இதற்காக அரசாங்கத்திற்கு நான் ஒரு யோசனை சொல்ல முற்படுகிறேன். அம்மாதிரி பர்செண்டேஜ் குறைத்து கொடுத்து அந்தத் வருஷக் கடைசிக்குள் வேலை செய்ய முடியாமல் தொகையை திருப்பி அரசாங்கத்திற்கு சரண்டர் செய்தால் அப்பேர்ப்பட்ட கண்டிராக்டர்களை கண்டிராக்டர் லிஸ்டிலிருந்து நீக்கிவிடவேண்டுமென்று பணிவோடு தெரிவித்தும் கொள்ளுகிறேன். அப்படிச் செய்தால்தான் அவர்களுக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டு அந்த வருஷத்திலே வேலையை முடித்தால் தான் லிஸ்டில் இருக்க முடியும் என்று உணர்ந்து வேலையை துரிதமாக செய்வார்கள்.

ஈரோடு நகரத்தில், என்னுடைய தொகுதியில், அநேக அரசாங்க அலுவலங்கள் வாடகை கட்டிடங்களில் இருக்கின்றன. அவையாவன : சூபரிண்டெண்டிங் என்ஜினியர் ஆபீஸ், Hydro-Electric-Generation டிவிஷன் என்ஜினியர் (ஹைவேஸ்) ஆபீஸ், டெப்யூடி ரிஜிஸ்டிரார் ஆப் கோவாபரேடிவ் சொசைடீஸ் ஆபீஸ், சப்-ரிஜிஸ்டிரார் ஆபீஸ், சப்-கோர்டு, டிஸ்டிரிக்ட் வெடரினரி ஆபீஸ், டிஸ்டிரிக்ட் எஜுகேஷனல் ஆபீஸர் ஆபீஸ், லாண்டு மார்ட்கேஜ் பாங்கு, பிளாக்கு டெவலப்மெண்டு ஆபீஸ், ஒன்றுக்கு மேற்பட்ட போலீஸ் ஸ்டேஷன்கள், கம்யூனிடி பிராஜக்ட் இண்டஸ்டிஸ்-பிராஜக்ட் எக்ஸிகியூடிவ் ஆபீஸர் ஆபீஸ்.

11 50 a.m. அவைகள் போக மத்திய அரசாங்க அலுவலகங்களாகிய வருமான வரி இலாகா, போஸ்டாபீஸ் முதலிய அலுவலகங்கள் வாடகை கட்டிடங்களில் இருக்கின்றன. இப்படி எவ்வளவோ கட்டிடங்களில் அரசாங்க அலுவலகங்கள் வாடகை கொடுத்துக்கொண்டு இருக்கின்றன. இதன் மூலம் அரசாங்கத்திற்கு அதிகப்படியான செலவு ஏற்படுகிறது. அதனால் ஊரில் வீட்டு நெருக்கடியும் ஏற்பட்டிருக்கிறது. அந்த அலுவலங்களில் வேலை செய்யக்கூடிய அதிகாரிகளுக்கும் சிப்பந்திகளுக்கும் வீடுகள் கிடைக்காமல் இருக்கிறார்கள். அதனால் அரசாங்கம் இந்த இட நெருக்கடியை நிவர்த்திக்க ஒரு திட்டம் வகுக்க வேண்டும். இந்த இட நெருக்கடியை தீர்த்து வைக்க அரசாங்கம் ஒரு நல்ல திட்டத்தை அமைத்து வைக்க வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இப்பொழுது அரசாங்கத்தினிடம் மூன்று நான்கு திட்டங்கள் தான் இருக்கிறது. சில ஜில்லாக்களை இரண்டாகப் பிரிக்கப்போவதாகத் தெரிய வருகிறது. சில தலைமை காரியாலயங்கள் ஈரோடில் இருக்கின்றன. ரிவினியூ, ஜுடிஷியல், போலீஸ் போன்ற இலாகாக்கள் இன்னும் பிரிவினையாகாமல் இருக்கின்றன. அவைகளுக்கு இன்னும் தலைமை காரியாலயங்கள் அமைக்கப்படவில்லை. அவைகளின் காரியாலயங்கள் ஈரோடில் அமைக்கப்படப்போவதாக பரிசீலினையில் இருப்பதாகத் தெரியவருகிறது. அதை அமுலுக்குக் கொண்டுவருவதற்கு முன்னதாக அவைகளுக்கு வேண்டிய கட்டடங்களை கட்டி பூர்த்தி செய்த பிறகு அவைகளைக் கொண்டு வருவதற்கு ஏறபாடு செய்யவேண்டும் என்று பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கீழ் பவானி திட்டப் பிரதேசத்தில் கழிவு தண்ணீர் போவதற்கு என்று பாலங்கள் அமைக்கப்படவில்லை. அமைக்கப்பட்ட பாலமும் சரியான நிலைமையில் இல்லை. அதனால் புதுப்பாலம் கட்டுவதற்கு முன்னதாக இருக்கும் பாலத்தையே நன்றாக பழுது பார்த்து சரியான முறையில் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன். அதை அடிக்கடி பழுது பார்த்து வரவும் ஏற்பாடு செய்ய வேண்டும். மற்ற காரியங்களையும் செய்வதற்கு அரசாங்கம் உடனடியாக ஏற்பாடு செய்யவேண்டும் என்று பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கீழ் பவானி திட்டப் பிரதேசத்தில் எழுமாத்தூர் கிராமத்திற்கு பக்கத்தில் குரங்குப்பள்ளம் என்ற ஒரு பள்ளம் இருக்கிறது. அங்கு ஒரு பாலம் கட்டி தண்ணீர் அதன் மேல் விழுந்து செல்லும்படியாக கட்டினார்கள். அதன் மேல் சிமெண்ட் கான்கிரீட் போட்டார்கள். அதன் மேல் தண்ணீர் போய் அந்த காங்கிரீட்டை அடித்துக்கொண்டு போய், ஸிமெண்ட்

29th March 1958] [Sri V. S. Manikkasundaram]

பகுதி மாத்திரம் இருக்கிறது. பள்ளம் அப்படியே இருக்கிறது. மணல் பக்கம் அப்படியே இருக்கிறது. மற்ற பாகங்கள் அரித்துக் கொண்டு போய் விட்டது. அதனால் அந்தப் பாலத்தின் மீது வண்டியோ அல்லது மற்ற எந்த வாகனமோ போக முடியாத நிலைமையில் இருக்கிறது. அந்தப் பாலத்தை பரிசீலனை செய்து இப்படி அடித்துக் கொண்டு போகும் படியாக கட்டியதற்கு யார் பொறுப்பு என்று கணடு பிடித்து அந்த அதிகாரியின் பேரிலோ அல்லது அந்த நபர் பேரிலோ சரியானபடி நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொண்டு அந்த வேலையை மறுபடியும் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று அரசாங்கத்தை பணிவுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

(டிபுடி ஸ்பீக்கர் தலைமை வகித்தார்.)

இதுபோக எங்கள் பகுதியில் பல பள்ளங்களுக்கும், ரோடுகளுக்கும் தக்க ஏற்பாடு செய்யாமல் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அவைகளை கவனித்து நடத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். ஈரோடு நகரத்தில் ஒரு பகுதிக்கு குடி தண்ணீர் வசதித் திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டு மற்ற பகுதிகளுக்கு அமுலுக்குக் கொண்டு வரப்படாமல் இருக்கிறது. நிதி நிலைமை அனுமதியாத காரணத்தால் அது நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. அந்த வேலைகளுக்காக வேண்டிய சாமான்கள் எல்லாம் சேகரிக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கின்றன. வெளி நாட்டிலிருந்து வரக்கூடிய சாமான்களும் உள்நாட்டில் கிடைக்கக்கூடிய சாமான்களும் வரவழைக்கப்பட்டு பூர்த்தி செய்யப்பட்டு வைக்கப்பட்டிருக்கிறது. உள்நாட்டிலிருந்து வரவேண்டிய சில சாமான்கள் மட்டும் வேண்டியதாக இருக்கிறது. அப்படிப்பட்ட வேலைகள் தான் பாக்கியாக இருக்கிறது. ரிசர்வாயர் விஸ்தரிப்புத் திட்டம், எலெக்டிரிக் மோட்டார் இன்ஸ்டலேஷன் இவைகள் போன்ற வேலைகள் தான் பாக்கி இருக்கிறது. அதனால் இந்த வேலைகளை எடுத்து நடத்தும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். அவைகளை எடுத்து நடத்தினால் நகர அபிவிருத்தி திட்டத்தின் கீழ் எடுத்து வேலை செய்யக்கூடிய சர்க்கார் அலுவலகங்கள் விஸ்தரிப்புக்கு இது உதவியாக இருக்கும். நகரத்தை பிரமாதமாக விஸ்தரிப்பதற்கு இது ஏதுவாக இருக்கும் என்பதை அரசாங்கத்திற்கு பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்படிப்பட்ட யோசனைகளையெல்லாம் அரசாங்கத்திற்குத் தெரிவித்துக் கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக் கொள்ளுகிறேன்.

* **Sri K. RAMASUBBU** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சர்க்காரால் கொண்டு வரப்பட்டிருக்கிற மானியக் கோரிக்கையை நான் ஆதரித்து சில வார்த்தைகளைச் சொல்ல ஆசைப்படுகிறேன். நமது மாகாணம் போக்குவரத்து அமைப்பில் மிகவும் பிற்போக்கான நிலைமையில் இருக்கிறது என்பதைப் பலர் ஒப்புக் கொள்ளக்கூடியதாக இருந்த போதிலும் நமக்கு மத்திய அரசாங்கம் கொடுக்கப்படும் மானியம் முழுவதையும் உபயோகப்படுத்தப்படவில்லை என்ற முறையில் நமது இஞ்சினியரிங் டிபார்ட்மெண்ட் வேலை செய்து வருகிறது. அதற்கு வேண்டிய பொறுப்பை இஞ்சினியரிங் டிபார்ட்மெண்ட் எடுத்துக் கொள்ளவில்லை, நமது அரசாங்கம் எடுத்துக் கொள்ளவில்லை என்ற குற்றச் சாட்டை நம் மீது சுமத்துகிறார்கள். அதற்கு சில அபிப்பிராயங்களை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். ரோடுகள் போடுவதற்காகக் கொடுக்கப்படும் மான்யம் பூராவும் செலவழிக்கப்படவில்லை என்பதற்கு சில காரணங்கள் இருக்கின்றன. கடந்த மூன்று வருஷங்களாக எங்கள் மாவட்ட நிர்வாகத்தை நடத்தி வந்ததால் அதைப்பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். அதனால் அதைப் பற்றி சொல்ல வேண்டியதாக இருக்கிறது. சாதாரணமாக ரஸ்தா போடுவதாக இருந்தால் அதை பூமியில்தான் போட வேண்டியதாக இருக்கிறது. இனிமேல் ரஸ்தா அமைப்பை ஆகாயத்தில் போட்டு விடலாம் என்கிற ஒரு கருத்தை கண்டு பிடித்து விட்டார்கள் என்றால் அப்பொழுது அதை அமைப்பது சுலபமாக இருக்கும். அதன் பிறகு ரஸ்தாக்களை சுலபமாக அமைத்து விடலாம். எங்கள் மாவட்டத்தில் மத்திய அரசாங்கத்தின்

மூலமாகக் கொடுக்கப்படுகிற மான்யத்திலிருந்து போடக்கூடிய ரஸ்தாக்கள் பல இருக்கின்றன. கடந்த மூன்று ஆண்டுகளாக எங்கள் ஜில்லாபோர்டு எடுத்துக் கொண்ட முயற்சியால் ரஸ்தாக்களைப் போடவே முடியவில்லை. நம்முடைய இன்ஜினியர்கள் பெரும் சிரத்தை எடுத்துக்கொண்டும் அவைகளைப் போட முடியவில்லை. ஒவ்வொரு இன்ஜினியரும் தங்கள் காலத்திலேயே அந்த ரஸ்தாக்களை அமைத்து அந்தப் பெருமையை தாங்களே அடைய வேண்டும் என்று பெரும் பொறுப்பை எடுத்துக்கொண்டும் கூட அங்கே ரஸ்தாக்களைப் போட முடியவில்லை என்றால் பார்த்துக்கொள்ளலாம் எப்படி ரஸ்தாக்கள் போடப்படுகின்றன என்பது. சில கிராமங்களில் ரஸ்தாக்களை அமைப்பதற்கு நிலங்களைக் கொடுக்கிறார்கள். சில கிராமங்களில் நிலத்தைக் கொடுக்க மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். ரயில்வே லயன் போட வேண்டும் என்று சொன்னால் எப்படி அவர்களுக்கு நிலத்தை ஆர்ஜிதம் செய்து கொள்வதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறதோ அப்படிப்பட்ட அதிகாரம் நமக்கு இல்லாத காரணத்தால் அப்படி ரஸ்தாக்களைப் போட்டுக்கொள்ள முடியவில்லை. இப்பொழுது நமக்கு இருக்கிற அதிகாரம் பிரகாரம் அதை எடுத்துக்கொள்வதற்கு பற்றாக்குறையாக இருக்கிறது. ரயில் லயன் போடுவதற்கு கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தைப்போல் நமக்கு நிலத்தை ஆர்ஜிதம் செய்வதற்கு அதிகாரம் கொடுத்தால் நாமும் உடனே ரஸ்தாக்களைப் போட்டு விடலாம். அப்படிப்பட்ட ஒரு அதிகாரத்தை நாம் ஏன் எடுத்துக் கொள்ளக்கூடாது என்று நான் கேட்கிறேன். அப்படிப்பட்ட ஒரு அதிகாரத்தை நமக்குக் கொடுத்தால் மத்திய அரசாங்கம் கொடுக்கிற மானியத்தில் ஒரு நயா பைசாவைக்கூட நாம் செலவழிக்காமல் விட்டு விட மாட்டோம். செலவழிக்க முடியவில்லை என்று கூறமுடியாது. ஆகவே அரசாங்கம் இதை கவனித்து இந்த நில ஆர்ஜிதம் செய்வதை மிகவும் சீக்கிரத்தில் அமுல்படுத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகளை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். நிலம் கிடைக்கவில்லை அதனால் ரஸ்தா போடவில்லை என்ற நிலைமை ஏற்படக்கூடாது.

எனது தொகுதி கடம்பூர் தொகுதி. அது திருநெல்வேலி மாவட்டத்தில் இருக்கிறது. அது பெரும் புகழ் பெற்ற தொகுதி என்பதைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். நாட்டில் சுதந்திரம் அடைவதற்குப் பெரும் தியாகம் செய்த தலைவர்களைப் பெற்றெடுத்த தொகுதி எங்கள் தொகுதி. ஒட்டபிடாரன், கப்பல் ஓட்டிய தமிழன், செக்கு இழுத்த செம்மல் இப்படி பல வகைகளில் புகழ் பெற்ற பெரும் தலைவர்களைப் பெற்றெடுத்த தொகுதி எங்கள் தொகுதி. அப்படிப்பட்ட ஒட்டபிராான் தொகுதி எங்கள் பிர்க்காவில் இருக்கிறது.

அடுத்தபடியாக நாங்கள் இருக்கிற தொகுதிகளுக்குப் பக்கத்தில்தான் கட்டபொம்மன் இடமாகிய பாஞ்சாலங்குரிச்சி இருக்கிறது. இந்த நாட்டின் சுதந்திரத்திற்கு பாடுபட்ட தலைவர்கள் எங்கள் தொகுதியில் தான் இருந்தார்கள், அந்த பெருமை எங்களுக்கு இருக்கிறது. அப்படிப்பட்ட மாபெரும் பெரும் தலைவர்களைக் கொண்டது கடம்பூர் தொகுதி என்பதை இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப்படிப்பட்ட தலைவர்கள் பிறந்த ஒட்டபிடாரன் பிராந்தியத்தையும் கட்ட பொம்மன் பிறந்த பாஞ்சாலங்குறிச்சிப் பிரதேசத்தையும் சேர்ப்பதற்கு நடுவில் இருக்கும் நேரடியான தூரம் மூன்று மைல்கள் தான். ஆனால் இப்படிப்பட்ட தலைவர்கள் இருந்த இந்த இரண்டு இடங்களையும் இணைப்பதற்கு ஒரு ரஸ்தாவை அமைத்துக் கொடுங்கள் என்று பல தடவை கேட்டோம். அதற்கு இந்த அரசாங்கம் இன்னும் ஒரு திட்டத்தையும் போடவில்லை. இப்படிப்பட்ட பெரும் தலைவர்கள் இருந்த பகுதிக்காவது உடனடியாக ஒரு ரஸ்தாவைப் போட்டுக் கொடுக்கும்படியாக இந்த அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக எனது தொகுதியைப்பற்றி நண்பர் சோமசுந்தரம் அவர்கள் பேசி விட்டார். எட்டையாபுரம் ரஸ்தா போடப்படாமலேயே இருந்தது. அதிருஷ்ட வசமாக நேரு வரப்போகிறார் என்பதற்காக அந்த ரஸ்தாவை அவசர அவசரமாகப் போட்டார்கள். அவர் வந்தாரோ வரவில்லையோ ரஸ்தாவைப் போட்டு விட்டார்கள். சுமார் இருபது வருஷங்களாக

29th March 1958] [Sri K. Ramasubbu]

போடப்படாமல் இருந்த ரோடு வெகு சீக்கிரத்தில் போட்டு விட்டார்கள். அப்படிப்பட்ட ஒரு பெரும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. அந்த ரஸ்தாவுக்கு தார் போடக்கூடிய நிலைமை ஏற்பட்டது. எட்டையாபுரம் முதல் விளாத்திக்குளம் வரையிலுள்ள ரஸ்தாவில் ஒரு பாலம் இருக்கிறது. அதில் இரண்டு மூன்று கற்கள் உடைந்திருக்கின்றன. எனது தேர்தலுக்கு முன்னதாகவே அது உடைந்திருந்தது. அப்பொழுது கேட்டார்கள், " நீங்கள் எம்.எல்.ஏ. வாக போனால் இந்த இரண்டு மூன்று கற்களைக் கட்டிக்கொடுக்க நடவடிக்கை எடுத்துக் கொள்வீர்களா " என்று கேட்டார்கள். நான் எம்.எல்.ஏ. வாக வந்து ஒரு வருஷம் ஆகிறது. இன்னும் அங்கு அந்த சிறிய பாலத்தில் அதாவது ஆறு அடி நீளத்தி லுள்ள பாலத்தில் கல் இன்னும் போடப்படவில்லை. ஏன் போடவில்லை என்று அங்குள்ளவர்கள் என்னைக் கேட்கிறார்கள். ஏனையா எவ்வளவு நாட்களாகியும் இன்னும் போடப்படவில்லை என்று கேட்கிறார்கள். ஆகவே, குறிப்பாக இந்த பாலத்திற்கு கற்களைப் போட்டுக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த வேலைக்கு 2,000 ரூபாய்க்குமேல் எஸ்டிமேட் போகாது என்று நினைக்கிறேன். அதை எடுத்து சீக்கிரமாக முடிக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, விளாத்திகுளத்திலிருந்து அருப்புக்கோட்டைக்கு ஒரு " இண்டர் டிஸ்ட்டிரிக்ட் " ரோடு இருக்கிறது. அங்கே வைப்பாற்றில் ஒரு " காஸ்வே " இருக்கிறது. இது மிகச் சிறந்த காஸ்வே. அது சிறிய உயரத்தில் இருக்கிறது. இரண்டு அடி வெள்ளம் வந்தால்கூட ரஸ்தா போக்குவரத்து நின்றுவிடுகிறது. இந்த ஆண்டிலே ஒரு மாதக்கணக்கில், இரண்டு மாதக் கணக்கில் போக்குவரத்து இல்லாமல் அடைப்பட்டுவிட்டது. அதனால் மக்களுக்கு மிகவும் கஷ்டம் ஏற்பட்டது என்பதை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். விளாத்திகுளத்திலிருந்து கோவில்பட்டிக்கு இந்த ஒரே வழிதான். மாஜிஸ்டிரேட் கோர்ட்டுக்கு வரும் மக்கள் இதனால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். விளாத்திகுளத்தில் ஒரு உயர் நிலை பள்ளிக்கூடம் இருக்கிறது. எட்டயபுரத்தில் ஒரு உயர் நிலை பள்ளிக்கூடம் இருக்கிறது. விளாத்திகுளம் பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவர்கள் பரீக்ஷை எழுதுவதற்கு எட்டயபுரம் ஸ்கூலுக்கு வர வேண்டும். ஏனென்றால் விளாத்திகுளத்தில் போதிய மாணவர்கள் இல்லை. பரீக்ஷை சமயத்தில் வெள்ளம் வந்துவிட்டால் இந்த மாணவர்கள் இந்தப் பக்கம் போக முடியவில்லை. இந்த காஸ்வேயை ஒரு பாலமாக கட்ட வேண்டும். பாலம் கட்டுவதற்கு செலவு அதிகமாகும் என்று சொல்லுவார்கள். நீர்ப்பாசன இலாகாவின் கையில் கொஞ்சம் இதைக் கொடுங்கள். அதில் ஒரு திட்டம் இருக்கிறது. வைப்பாற்றில் ஓடுகின்ற ஜலம் சமுத்திரத்தில் போய் வீணாக விழுகிறது. வைப்பாற்றில் ஒரு அணை கட்டுவதற்கு யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆட்சேபணை சொன்னால், கடல் தான் என்னிடம் வந்து விழக்கூடிய தண்ணீரை தேக்கி நிறுத்திவிட்டீர்களே என்று சொல்லலாம். ஆகவே, அங்குள்ள வைப்பாற்றில் ஒரு அணையை கட்டி நீர்ப்பாசனத்திற்கு வேண்டிய பல நன்மைகளைச் செய்யலாம். அணையை கட்டி அதன் மேலே ரஸ்தாவை போடுங்கள். இந்த இரண்டு திட்டங்களும் அவசியம் தேவை. இதை கூடிய சீக்கிரம் பரிசீலனை செய்ய அரசாங்கம் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, வேம்பார் மிக அழகான ஊர். கடல் கரை ஓரமாக இருக்கக்கூடிய ஊர். அங்கு வசிக்கும் பெருமக்கள் மீன் பிடிக்கும் மக்கள். அவர்களில் பெருவாரியானவர்கள் இலங்கையிலே சென்று தங்கள் வாழ்க்கையை நடத்தி வந்தார்கள். இப்பொழுது இலங்கையிலிருந்து பெரும்பாலான மக்கள் இங்கே திரும்பிவிட்டார்கள். முக்கியமாக திருநெல்வேலி ஜில்லாவில் வேம்பார் மீன் என்றால், ஒவ்வொருவருக்கு வாயில் ஜலம் ஊறும். அவ்வளவு ருசியாக இருக்கக்கூடிய மீன்களை பிடித்துக்கொண்டு வரும் தொழிலாளர்கள் இந்த கிராமத்தில் வசிப்பவர்கள். இவர்கள் விளாத்திகுளம் வரவேண்டுமானால் 14 மைல் இருக்கிறது. " பாமின் ரிலீப் ஸ்கீமின் " கீழ் ஒரு ரோடு ஒன்று அமைக்கப்பட்டது. அந்த ரோடு சில சமயங்களில் நன்றாக தோன்றும். சில மயங்களில் மழை பெய்து விட்டால் கரிசக்காடு தான். மனிதர்கள்

நடக்கவே முடியாது. ஒரு சமயம் முதல் அமைச்சரோடு நான் இந்த ரோட்டில் சென்றபொழுது ரோடு நன்ருக இருக்கிறதே, பஸ் ரூட் கூட போட்டுவிடலாம் போல் இருக்கிறது என்று சொன்ஞர்கள். பஸ் ரூட்டும் சாங்ஷன் ஆகிவிட்டது.

**DEPUTY SPEAKER**: One minute more.

**SRI K. RAMASUBBU**: கூடிய சீக்கிரம் அதற்கு வேண்டிய உபகாரங்களைச் செய்து மீன் பிடிக்கும் தொழிலாளர்களுக்கு போக்குவரத்து வசதி செய்துகொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன். நான் எம்.எல்.ஏ.வாக ஆனதற்கு அதிகப்படியாக ஒன்றும் செய்யவேண்டுமென்று ஆசைப்படவில்லை. இந்த ஐந்து வருஷங்களுக்குள் இந்த இரண்டு திட்டங்களையும் எப்படியாவது நிறைவேற்றிக்கொடுத்தால் நான் என் தொகுதிக்கு என் கடமையைச் செய்தவன் ஆவேன் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக 2, 3 வருஷங்களில் 3, 4 "டிரையினிங் ஸ்கூல்கள்" என் ஜில்லாவில் திறக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக சமகரங்க புரத்தில் "டிரையினிங் ஸ்கூல்" திறப்பதாக கட்டிடத்திற்கு ரூ. 1,94,000 போன ஆண்டிலே ஒதுக்கப்பட்டது. ஆனல் இதுவரையிலும் ஒரு வேலையும் நடக்கவில்லை. கட்டிட வேலையை துரிதப்படுத்த வேண்டும் என்று அரசாங் கத்தை கேட்டுக்கொண்டு, என்னுடைய சிற்றுரையை முடித்துக்கொள்ளு கிறேன்.

**SRI S. M. ANNAMALAI**: சட்டமன்ற உபதலைவர் அவர்களே, 1958–59-ம் ஆண்டு மராமத்து இலாகா மான்யக் கோரிக்கை யின் மீது கொண்டு வரப்பட்டுள்ள வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். இங்கு பேசிய பல சட்டமன்ற உறுப்பினர்கள் பலவித குறைபாடுகளை சொல்லியிருக்கிருர்கள். அதில் முக்கியமான குறைபாடு மராமத்து இலாகாவில் கண்டிராக்டர் களுடைய ஊழல்கள் மலிந்து விட்டது என்பது தான். சட்ட மன்ற உறுப்பினர்கள் மட்டும் இதைச் சொல்லவில்லை. பழைய அமைச்சர் ராமனுதபுரம் ராஜா அவர்கள் மின்சார இலாகா ஊழியர்கள் மகா நாட்டில் பேசுகின்ற பொழுது மராமத்து இலாகாவில் கண்டிராக்டர்களின் ஊழல்கள் மலிந்து விட்டன என்று அழுத்தம் திருத்தமாக சொல்லி யிருக்கிருர். அப்படி அவர் சொல்லியிருப்பது மக்களிடையே ஒரு பரபரப்பை உண்டாக்கியிருக்கிறது. அந்த மாசை போக்கிக் கொள்ளுவதற்கு வேண்டி மராமத்து இலாகா அமைச்சர் அவர்களை கேட்டுக்கொள்ளு கிறேன், ஒரு தனி குழுவை அதற்காக நியமித்து எந்த வகையில் கண்டிராக்டர்கள் கொள்ளை அடிக்கிருர்கள் என்பதை கண்டு பிடித்து விளக்கம் தர வேண்டும்.

அடுத்தப்படியாக, சென்னை நகரத்தில் ரோடுகளில் டிராம் லைன்கள் இருக்கின்றன. டிராம்கள் ஓடுவது நின்று பல ஆண்டுகள் ஆகியும் கூட, அந்த லைன்களை இது வரையில் ரோடுகளிலிருந்து அப்புறப்படுத்த வில்லை, அதனல் சைகிலில் செல்லுபவர்கள், சைக்கிள் டியூப் அதன் சந்துகளில் மாட்டிக்கொண்டுவிடுவதால் சில சமயங்களில் ரொம்பவும் அவஸ்தைப் படுகிருர்கள். அதுமாத்திரமல்ல. குறுக்கே ரஸ்தாக்களை கடந்து செல்ப வர்கள் இந்த லைன்களில் அடிபட்டு கீழே விழுந்து சில சமயங்களில் விபத்துகள்கூட நேரும் நிலைமை உண்டாகிறது.

நகர் புரங்களிலே ரஸ்தாக்கள் பழுது பார்க்கும் வேலை பகல் நேரத்தில் செய்யப்படுகிறது. பகலில் ஜனக்கூட்டம் அதிகமாக இருப்பதால், அதை முன்னிட்டு அங்கு வேலை செய்கின்ற ஆட்கள் சரிவர வேலை செய்ய முடி யாதபடி நடுவே வேலையை நிறுத்த வேண்டியிருக்கிறது. ஆகவே நெருக் கடியான ஜன நடமாட்டம் இருக்கும் நகறபுரங்களிலே பகல் நேரத்தில் ரஸ்தாக்களை பழுது பார்க்கும் வேலையை செய்யாமல், இரவு நேரங்களில் அந்த வேலையை நடத்தினல் நமக்கும் பணம் மிச்சப்படும், மக்கள் போக்குவரத்திற்கும் தடங்கல் இருக்காது என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

29th March 1958] [Sri S. M. Annamalai]

அடுத்தப்படியாக, " நியூரோட்ஸ் மெடலிங் அண்டு டாரிங்க்காக " இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்பட்ட தொகை ரூ. 284·39 லட்சம். ஆனால் செலவிடப்பட்ட தொகை 1956–57-ல் ரூ. 24·33 லட்சம். 1957–58-ல் ரூ. 30·71 லட்சம், 1958–59-ல் ரூ. 32 லட்சம் செலவழிக்க உத்தேசம். ஆக இந்த மூன்று ஆண்டுகளில் ஏறத் தாழ ரூ. 87·04 லட்சம் செலவழித்திருப்பார்கள். இரண்டாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் இதற்காக ஒதுக்கிய பணத்தில் செலவிட்டது போக மீதியிருக்கும் பணம் ரூ. 197·35 லட்சம். இதை இரண்டு ஆண்டுகளில் செலவழிக்க முடியுமா? ஏன் இவ்வளவு தாமதப்படுத்தியிருக்கிறீர்கள்? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஒதுக்கிய பணம் ரூ. 284·39 லட்சம். ஆனால் சர்க்கார் இது வரையில் செலவழித்திருக்கும் பணம் ரூ. 87·04 லட்சம். இரண்டு ஆண்டுகளில் மீதியிருக்கும் பணத்தை அதாவது ரூ. 197·35 லட்சம் செலவழிப்பது என்றால் முடியுமா ? ஏன் இப்படி கொடுத்த பணத்தை சரிவர செலவிடாமல் மீதப்படுத்தியிருக்கிறீர் கள் என்று கேட்க ஆசைப்படுகிறேன். " பிரிட்ஜ் ஸுபர்விஷன் ", " ரோடு ஸுபர்விஷன் " இருக்கிறதே, அது மிகமிக மோசம். நமது ராஜ்யத்தில் மராமத்து இலாகாவில் கண்காணிப்பு சரிவர நடத்த முடிய வில்லை. உதாரணமாக ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன். 1957-ம் ஆண்டு வெள்ளம் வந்ததில் வேலூரிலிருந்து வாணியம்பாடி செல்லும் பாதையில் ஏறத்தாழ 11 வாராவதிகள் உடைந்து விட்டன. அங்கேயுள்ள அதிகாரிகளிடம்" ஏனயா இவைகளை ரிப்பேர் செய்யவில்லை ? ஏறத் தாழ இரண்டு மாதங்கள் ஆகிவிட்டனவே ? " என்று கேட்டால், அவர்கள் " இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு நாங்கள் திட்டங்கள் தயாரித்துக்கொடுத்ததற்குப் பிறகு தான் இவை உடைந்திருக்கின்றன. அதற்கு முன்பே இவை உடைந்திருந்தால் இவைகளை ரிப்பேர் செய்யும் திட்டத்தை அத்திட்டங்களுடன் சேர்த்திருப்போம் " என்று தமாஷாக பதில் சொல்கிறார்கள். சட்ட மன்ற உறுப்பினர் ஒருவர் கேட்கும் கேள் விக்கு நல்ல முறையில் பதில் அளிக்க வேண்டுமென்ற நல்லெண்ணம் அவர்களுக்கு இல்லை. அவர்கள் தமாஷாக பதில் சொல்கிறார்கள். மரா மத்து இலாகாவின் நிர்வாகம் இந்த மாதிரி இருக்கிறது. மேலும், சென்னை-வில்லிவாக்கம் ரோடு நல்ல நிலைமையில் இல்லை. மழை காலத்தில் அந்த ரோட்டில் ஆங்காங்கே தண்ணீர் தேங்குகிறது. அங் குள்ள கார்ப்பொரேஷன் உறுப்பினர் ரோடை ஆங்காங்கே வெட்டி வெட்டி தேங்கியிருந்த தண்ணீரை அப்புறப்படுத்தி வந்தார். அந்த ரோடு சரிவர செப்பனிடப்படவில்லை. அதன் காரணமாக சென்ற 27-ம் தேதி இரவு அந்த ரோடில் ஒரு விபத்து ஏற்பட்டது. அப்போது ஒரு பஸ் பள்ளத்தில் இறங்கியபோது ஒரு லாரியின் மீது மோதியது. பஸ்ஸில் இருந்த பல பிரயாணிகள் காய மடைந்தனர். காயமடைந்தவர்களில் நானும் ஒருவன். மராமத்து இலாகாவின் போக்கு இவ்வாறு இருக்கிற தென்றால், இதைவிட அவல நிலை வேறு என்ன இருக்கிறது ?

அதற்கடுத்தபடியாக ராஜபவனத்திற்கு ஆண்டு தோறும் ரூ 2,21,000 ஒதுக்கப்படுகிறது. ராஜபவனத்திற்கு எதற்காக இவ்வளவு பணம் ஒதுக்கப்படுகிறது ? இந்தப் பணம் பூராவும் செலவழிக்கப்பட்டி ருக்கிறதா அல்லது மீந்திருக்கிறதா என்பது பற்றி சர்க்கார் புள்ளி விவரம் கொடுக்கிறார்களா? இல்லை. அந்தப் பணம் முழுவதும் செல வழிக்கப்பட்டதா என்ற விவரத்தைக்கூட சர்க்கார் கொடுப்பதில்லை.

அதற்கடுத்தபடியாக 1,976 மைல் நீலமுள்ள புதியசாலைகள் அமைக் கவும், ஏற்கனவே இருப்பதில் 1,840 மைல் நீளமுள்ள சாலைகளை அபி விருத்தி செய்யவும், 329 பாலங்களைக் கட்டவும் அல்லது அபிவிருத்தி செய்யவும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது என்று கனம் அமைச்சர் அழகாகச் சொல்லியிருக்கிறார். இவைகளைச் செய்ய " உத்தேசிக்கப்பட்டிருக்கிறது " என்பதுகுறித்து மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் 1957-ம் ஆண்டில் இம் மாதிரி உத்தேசிக்கப்பட்ட எல்லா புதிய ரோடுகளும் போடப்பட்டிருக்கின் றனவா என்று கனம் அமைச்சர் தெரிவிக்கிறாரா? இல்லையே! ஒவ் வொரு ஆண்டும் " இவ்வளவு ரோடுகள் போடப்போகிறோம். இவ்வளவு ரோடுகளைப் பராமரிக்கப்போகிறோம் " என்ற புள்ளி விவரங்களை கனம்

அமைச்சர் தருகிருரே தவிர, "எங்களால் இவ்வளவு ரோடுகளைப் போட முடிந்தது." என்ற புள்ளிவிவரங்களைத் தருகிருரா ? இல்லையே! இப்போது சுமார் 197·35 லட்ச ரூபாய் செலவழிக்கப்படாமல் மீந்திருக்கிறதே! மாவட்ட அலுவலகங்களுக்கு சர்க்கார் தகுந்த பணம் ஒதுக்கியிருக்கிருர்களா? இல்லை. தென்னுற்காடு ஜில்லாவில் சங்கீதமங்களம் என்ற கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தில் ஒரு பள்ளிக்கூடம் கட்டவேண்டுமென்று கோரி, அதற்காக அக்கிராம மக்கள் ரூ. 2,000 டெபாஸிட் கொடுத்து விட்டார்கள். ஆனல் இன்னும் பள்ளிக்கூடம் கட்டப்படவில்லை. இதற்குக் காரணம் கேட்டால் ஜில்லா போர்டார் "எங்களிடம் பணம் இல்லை. நாங்கள் என்ன செய்வது ?" என்று சொல்கிருர்கள். மேலும், அதே ஜில்லாவில், கஸ்பாகரணை என்ற கிராமத்தில் ரோடு போட வேண்டுமென்று கோரி, அந்த கிராம மக்கள் ரூ. 2,000 டெபாஸிட் கொடுத்திருக்கிருர்கள். ஆனல் அங்கே இன்னும் ரோடு போடப்படவில்லை. காரணம் கேட்டால், ஜில்லா போர்டார் "எங்களிடம் பணம் இல்லை" என்று சொல்கிருர்கள். இந்த அரசியலாருக்கு ஏன் இந்த அவல நிலை? இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 1956–57-லிருந்து இவ்வாண்டுவரை இந்த இரண்டு ஆண்டு களில் செலவழிக்கப்பட்டது மொத்தம் ரூ. 87·04 லட்சம், செலவழிக்கப் படாமல் மிச்சமாக இருப்பது மொத்தம் 197·35 லட்சம் ரூபாய். இவ்வளவு பணம் செலவழிக்கப்படாமல் இருக்கும்போது, ஜில்லா போர்டுகளுக்கு சர்க்கார் பணம் கொடுக்க மறுக்கிருர்கள். இந்தக் காரணங்களிஞல், மராமத்து இலாகாவுக்கான மானிய கோரிக்கைக்குக் கொண்டுவரப்பட்டி ருக்கும் வெட்டுப் பிரேரேபணையை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். மராமத்து வேலைகளை துரிதமாகச் செய்ய வேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஹரிஜன முன்னேற்றத்துக்கான மானிய கோரிக் கையின் போது நான் எடுத்துக்கூறிய குறைகள் குறித்து கனம் அமைச்சர் பதில் சொல்லவில்லை. இப்போது நான் கூறிய விஷயங்கள் குறித்தாவது அவர் பதில் சொல்ல வேண்டும். இந்த விஷயங்கள் குறித்து அவர் பதில் சொல்ல முடியாது. நான் கூறிய விஷயங்கள் குறித்து பதில் சொல்ல வேண்டுமென்று அவரைக் கேட்டுக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*Sri V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரேபணையை நான் ஆதரிக்கிறேன். கனம் அமைச்சர் தாம் சபையில் சமர்ப்பித்திருக்கும் அறிக்கையில், இந்த ராஜ் யத்தில் எத்தனை ரோடுகள் இருக்கின்றன என்பது பற்றியும், அவைகளில் சிலவற்றிற்காக எவ்வளவு மான்யம் கொடுக்கப்படுகிறது என்பதுபற்றியும் விஸ்தாரமாகத் தெரிவித்திருக்கிருர்கள். நெடுஞ்சாலைகள் (ஹைவேஸ்) மத்திய சர்க்காரின் ரோடுகள் என்று சொல்லவேண்டும். ஆனல் நம் சர்க்காரிடமிருந்து பண உதவிகள் பெறப்பட்டு அந்த ரோடுகள் சம்பந்த மான வேலைகள் நடந்து வருகின்றன. அதே மாதிரித் தான் ஸ்டேட் ஹைவேஸும். அதுவும் தம் சர்க்காருக்குச் சொந்தமானது. அந்த ரோடுகளும் ஹைவேஸ் இலாகாவால் பராமரிக்கப்பட்டுவருகின்றன. இப் போது மத்திய சர்க்கார், ரோடுகள் பராமரிப்பதற்கு ஏதோ பணம் கொடுத்து வருகின்றுர்கள். மத்திய ரோடு நிதியிலிருந்து இன்னும் சில முக்கியமான வேலைகளுக்கு பணம் கொடுத்துவருகிருர்கள். தேசீய நெடுஞ்சாலைகள் மத்திய சர்க்காரால் நல்ல முறையில் பராமரிக்கப்பட்டு வருகின்றன. தார் போடப்பட வேண்டிய இடங்களில் தார் போட்டும், சிமெண்டு காங்கிரீட் போடப்பட வேண்டிய இடங்களில் சிமெண்ட் காங் கிரீட் போட்டும் அவைகளை மத்திய சர்க்கார் பராமரித்து வருகிருர்கள். இதை நான் பாராட்டுகிறேன். வாராவதிகளை அகலப்படுத்த வேண்டிய இடங்களில் அகலப் படுத்தி வருகிருர்கள். வாராவதிகள் எல்லாவற்றை யும் அவசியமான இடங்களில் அகலப்படுத்த போதிய மான்யத்தைக் கொடுத்து இந்த வேலையை துரிதமாக செய்யவேண்டும். மேலும், ரோடு களில் தார் போடாத இடங்களில் எல்லாம் தார் போட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். அதே மாதிரி நம்முடைய ஸ்டேட் ஹைவேசைப் பொறுத்த மட்டிலும், அனேக இடங்கள் பழுது பார்க்க வேண்டிய நிலை மையில் இருக்கின்றன. வாராவதிகளை அகலப்படுத்த வேண்டிய இடம்

29th March 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

இருக்கிறது. தார் போட வேண்டிய இடங்களும் இருக்கின்றன. அவைகளெல்லாம் துரிதமாகச் செய்யப்பட்டு வருகின்றன. இருந்த போதிலும் கூடிய சீக்கிரத்தில் பூர்த்தியாகாத வேலைகளை உடனடியாகப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

மேஜர் டிஸ்ட்ரிக்ட் ரோடுகளை எடுத்துக்கொண்டால், நம்முடைய ஜில்லா போர்டு நிர்வாகத்திலிருக்கும் எல்லா ரோடுகளையும் இந்த ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் சர்க்கார் எடுத்துப் பழுது பார்த்தாக வேண்டுமென்று சொல்கிறார்கள். நான் அதைப் பற்றி முன்பே பட்ஜெட் விவாதத்தின் போது பேசியிருக்கிறேன். இப்போதும் பேச விரும்புகிறேன். அந்த ரோடுகளையெல்லாம், ஐந்தாண்டுத் திட்டம் கடைசி வரையில் காத்துக்கொண்டிருக்காமல் துரிதமாக பூரா ரோடுகளையும் சர்க்கார் எடுத்துக்கொண்டு, அவைகளை நல்ல முறையில் பராமரித்து வந்தால்தான் அந்த ரோடுகளெல்லாம் நன்றாக இருக்கும். ஜில்லா போர்டில் போதிய பணம் இல்லாத காரணத்தால், அவர்களிடமே அதை விட்டு வைத்திருந்தால் போட்ட ரோடுகளெல்லாம் பாழாய்விடும் என்றும், அதன் காரணமாக அதிக தொகை இன்னும் செலவழிக்க வேண்டியிருக்கும் என்றும் நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. ஐந்தாண்டுத் திட்டம் வரையில் காத்திருக்காமல் இரண்டாயிரம் மைல் இன்னும் எடுக்க வேண்டிய சாலைகளை உடனே நம்முடைய சர்க்கார் எடுக்க வேண்டுமென்று நான் கோருகிறேன்.

இதர கிராம ரோடுகளும் சரியான முறையில் ஜில்லா போர்டாரால் பராமரிக்கப்படவில்லை. ஸ்தல அபிவிருத்தித் திட்ட வேலைகளின் கீழ் அதிகப் பணம் செலவழித்து அனேக ரஸ்தாக்களை நம்முடைய ராஜ்ய சர்க்கார் போட்டிருந்தபோதிலும், போட்ட ரஸ்தாக்களெல்லாம் அனேக இடங்களில் பாழ் அடைந்திருக்கின்றன. எந்த இடத்தில் ரோடு போட்டார்கள் என்று சொல்ல முடியாத நிலைமையில் இருக்கின்றன. லட்சக் கணக்கான ரூபாய்கள் செலவழித்துப் போடப்பட்ட ரோடுகள் இன்று இருக்கிற இடம் தெரியாமல் போய்விட்டன. இன்னும் அனேக இடங்களில் சிமெண்ட் குழாய் வைக்கப்பட்ட இடங்களில் வாராவதி கட்டப்படாமல் குழாய்கள் பூமிக்குள்ளே போய்விட்டன. இது ரொம்பவும் வருந்தத்தக்க விஷயம். அதற்காகவும் பொருளுதவி கொடுத்து உடனடியாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால், ஜில்லா போர்டுகளையெல்லாம் கூடிய சீக்கிரம் மூடிவிட்டு, பஞ்சாயத்து ராஜ்யம் வரப்போகிறது. அதைப்பற்றி ஒரு மசோதா வந்தது. சர்க்கார் ஒரு கமிட்டி போட்டு, ஸ்தல ஸ்தாபனங்களை எப்படித் திருத்தியமைக்க வேண்டுமென்பதைப்பற்றியும் ஆலோசனை செய்து கொண்டு வருகிறது. அது எப்படி இருந்த போதிலும், நான் முன்பு ஒரு தடவை இந்த மன்றத்தில் சொன்னேன். அதையே இப்பொழுதும் சொல்ல விரும்புகிறேன். ஜில்லா போர்டுகளுக்கு நான்கு மாதங்களுக்கு முன்பே, அப்பொழுதே தேர்தல் வைத்து விட்டு ஜில்லா போர்டுகளை நடத்திக்கொண்டு வந்தால், பஞ்சாயத்து போர்டுகள் வரும் காலத்தில் அவைகளையெல்லாம் திருத்தியமைப்பதற்கு சௌகரியமாக இருந்திருக்கும். ஆனால், ஏதோ சில அரசியல் விஷயமாகத்தான் இவைகளைச் செய்யவில்லை என்றும் நான் சொல்லியிருக்கிறேன். அது எப்படியிருந்த போதிலும், போட்ட ரோடுகளை உடனடியாக பழுது பார்ப்பதற்கு சர்க்கார் முன்வரவேண்டும்.

தவிர, நம்முடைய மாகாணத்தில் அனேக கிராமங்கள் ஜீப் கூட போக முடியாதபடி பாதை வசதி இல்லாமல் இருக்கின்றன. முக்கியமாக எங்கள் ஜில்லாவில் பாதை வசதி சரியானபடி இல்லாத கிராமங்கள் அனேகம் இருக்கின்றன. இன்னும் அனேக ஜில்லாக்களிலும் அம்மாதிரி இருக்கலாம். அவைகளையெல்லாம் கூடிய சீக்கிரம் எடுத்துக்கொண்டு, போக்குவரத்துக்கு வசதியாக, குறைந்த பட்சம் மாட்டு வண்டிகளாவது போகும்படியான ஒருமார்க்கத்தை சர்க்கார் செய்யவேண்டும். அப்படிப் பட்ட பிராந்தியங்களிலெல்லாம் அனேக இடங்களில் ரோடு என்பதே கிடையாது. மக்கள் ரொம்ப கஷ்டப்பட்டுக் கொண்டு வருகிறார்கள். அவைகளையெல்லாம் உடனடியாக எடுத்துக்கொள்ளவேண்டும். ஏதோ கிராமங்களுக்கு ரஸ்தா இருக்கிறது என்ற முறையிலாவது பாதைகள்

அமைத்துக்கொடுத்தால் போதும். பின்னால் பணம் நிறையக் கிடைக்கும் போது அந்தப் பாதைகளை அபிவிருத்தி செய்யலாம். அல்லது மெட்டல் ரோடுகளாகப் போட்டுக்கொள்ளலாம். அது விஷயத்தை பின்னிட்டுப் பார்த்துக்கொள்ளலாம். இதிலும் சர்க்கார் கவனம் செலுத்த வேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை கார்ப்பரேஷனுக்கும் சில கிராண்டுகளெல்லாம் சர்க்கார் கொடுத்துவருகிறார்கள். அதைப்பற்றி கார்ப்பரேஷன் அனேக தடவை சர்க்காரிடம் விண்ணப்பங்கள் சமர்ப்பித்திருக்கிறார்கள். டோல் கேட் 25 வருஷங்களுக்கு முன்பு எடுக்கப்பட்ட போதிலும், அதே கிராண்டு கொடுப் பதன் காரணமாக கார்ப்பரேஷனுக்குப் போதுமான ஊதியம் இல்லை. அதை இன்னும் சற்று அதிகப்படுத்திக்கொடுக்க சர்க்கார் யோசனை செய்யவேண்டும். முக்கியமாக மௌண்ட் ரோடும் பூந்தமல்லி ரோடு நாஷனல் ஹைவேஸில் சேர்ந்ததால் அதற்காக கிராண்டு கொடுத்து வருகிறார்கள். இருந்தாலும் அனேக இடங்களில் அந்த ரோடுகள் சீர் கேடான நிலைமையில் இருக்கின்றன. அமிஞ்சிக்கரையிலிருந்து பூந்தமல்லி வரைக்கும் இருக்கும் பாட்டை அதிகமாகத் தேய்ந்து கொண்டிருக்கிறது. டோல் கேட் காம்பன்ஸேஷனிலிருந்து கார்ப்பரேஷனுக்கு எவ்வளவு உயர்த்திக்கொடுக்க வேண்டுமோ அப்படிக் கொடுக்க யோசனை செய்ய வேண்டும்.

தவிர, ரஸ்தாக்களை அதிக ரூபாய்கள் செலவழித்துப் போட்டு இருக்கும் போது, கனம் லாஸர் அவர்கள் அன்று சொன்னதுபோல், மின்சார இலா காவும் மற்றவர்களும் அனேக இடங்களில் பள்ளத்தைத் தோண்டி எவ்வளவு தூரம் ரஸ்தாக்களைப் பாழாக்க வேண்டுமோ அவ்வளவு தூரம் பாழாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அதையெல்லாம் தடுப்பதற்கு சர்க்கார் முன்வர வேண்டும். அத்துடன் தோண்டிய ரோடுகளை நல்ல படி ரிபேர் செய்வதற்கு அவர்கள் வழிதேட வேண்டும். அதற்கு சர்க்கார் அந்தந்த இலாகாவுக்கு ஒரு அறிக்கை விட வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கின்றேன்.

அடுத்தபடியாக கோஸ்டல் (coastal) ரோடுகளைப்பற்றிச் சொல்ல விரும்புகிறேன். முன்னொரு காலத்தில் கடலோரப் பாதை சரியாக அமைந்திருந்தன. எங்கள் பிராந்தியத்திலும் இன்னும் அனேக ஜில்லாக் களிலும் நான் பார்த்திருக்கிறேன். காசி-இராமேசுவரம் பாதை என்று இருந்து வருகிறது. கல்கத்தாவிலிருந்து கன்யாகுமரி வரையில் கடலோரச் சாலை அமைத்து அந்தப் பிராந்தியங்களுக்கு நல்ல போக்கு வரத்து சாத னங்கள் இருக்கும்படியான வழியையும் தேட வேண்டும். அனேக ஜில்லா களில் துண்டு துண்டாக இந்த ரோடுகளைப் போட்டு வைத்திருக்கிறார்கள். இவைகளையெல்லாம் ஒன்றாக இணைத்து கல்கத்தாவிலிருந்து கன்யாகுமரி வரையில் போகும்படியான ஒரு சாலை அமைப்பதற்கு சர்க்கார் முன் வர வேண்டும். அதற்கு வேண்டிய பண உதவியை மத்திய சர்க்காரிடமிருந்து அவர்கள் பெற வேண்டும்மென்றுதான் நான் கேட்டுக்கொள்ளுகிறேன். மற்ற மாகாணங்களுக்கும் நமக்கும் கொடுக்கும் இந்தத் தொகைகளை ஒத்திட்டுப் பார்த்தால் நம்முடைய மாகாணத்திற்கு ரொம்பக் குறைவாகத் தான் மத்திய சர்க்கார் இந்த பாகத்திலும் கொடுத்திருக்கிறார்கள். இதைப் பற்றி நான் அதிகமாக சொல்லத் தேவையில்லை. சென்ட்ரல் ரோடு பண்டிலிருந்து அதிகமான பணம் நம்முடைய ராஜ்ய சர்க்கார் கேட்டுப் பெறுவதற்கு உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சென்னையில் ரயில்வே மேம்பாலங்கள் இரண்டொரு இடங்களில் மட்டும் போட்டார்கள். மேலும் அப்படிப்பட்ட பாலங்கள் இன்னும் சென்னையில் போடுவதற்கு உடனடியாக ரயில்வே இலாகாவின் இடமிருந்தும், மத்திய சர்க்காரிடமிருந்தும் உதவி பெற நம்முடைய கார்ப்பரேஷனும் ராஜ்ய சர்க்காரும் கலந்து பேசி இன்னும் போடவேண்டிய வாராவதிகளை உடனடி யாகப் போட முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். சைதாப்பேட்டையி லுள்ள மார்மலாங் வாராவதியைப்பற்றி நான் அடிக்கடி எழுதியிருக்கி றேன். அது நாஷனல் ஹைவேஸைச் சேர்ந்தது. அதைப்பற்றி மத்திய

29th March 1958] [Sri P. Kakkan]

கனம் அங்கத்தினர் அண்ணாமலை அவர்கள் சொன்னார்கள், காங்கிரஸ் காரர்கள் ஜெயித்த இடங்களில் தான் கட்டிடங்கள் கட்டுகிறார்கள், என்று. நான் இதைப்பற்றி முன்பும் சொல்லியிருக்கிறேன். கட்டிடங்கள் ஹரி ஜனங்களுக்காக கட்டப்படுகிற விஷயத்தில் இந்த தொகுதியில் தான் கட்ட வேண்டும், அல்லது அந்த தொகுதியில் தான் கட்ட வேண்டும் என்று. இந்த அரசாங்கத்திற்கு எந்த நோக்கமும் கிடையாது. கட்டிடங்கள் கட்டுகிற விஷயத்தில் கலக்டர்தான் அந்த இடங்களைப் பார்த்து எடுக்கிறார்கள். அதன் பின் டயரக்டரின் அனுமதி பெற்றுக் கொள்கிறார். இதல்லாமல் எதிர்கட்சி அங்கத்தினர்களின் தொகுதியில் கட்டப்படுவதில்லை என்று சொல்லுவது சரியல்ல என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்கள்கூட பின்தங்கிய வகுப்பினர் கமிட்டி யில் இருக்கிறார்கள். அதுபோல் பல அங்கத்தினர்களும் இருக்கிறார்கள். ஆகவே எதிர்கட்சி அங்கததினர்கள் தொகுதியில் காலனி கட்டுவதில்லை என்று நினைத்துவிடக் கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். எந்தெந்த இடங்களில் கட்டவேண்டும் என்று கலக்டர் அவர்கள் ஏற்பாடு செய்வார்க ளானால் நிச்சயமாக அதை கவனிக்கப்படும் என்பதை தெரிவித்துக்கொள் கிறேன். இதுவரை செய்த வேலைகளைப்பற்றி சொல்லவில்லை என்று சொன் னார்கள். செய்த வேலைகளை இதில் குறிப்பிட முடியாது. இனிமேல் செய்ய வேண்டிய காரியங்களைப் பற்றிதான் இதில் குறிப்பிட முடியும். அதற்காகத் தான் இந்த கோரிக்கைகளை உங்கள் முன் வைத்திருக்கிறோம். கனம் அங்கத்தினர்கள் இவைகளைப்பற்றி தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் அரசாங்கத்தினிடத்தில் விவரங்கள் இருக்கின்றன. அவற்றை தெரிந்து கொள்ளலாம் என்பதை தயவோடு அங்கத்தினர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். கனம் அங்கத்தினர் மாரிமுத்து அவர்கள் கோஸ்டல் ரோட்டைப்பற்றி சொன்னார்கள். அந்த திட்டமானது இப்போது அரசாங்கத் தால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதை இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் எடுத்துக்கொண்டு பரிசீலனை செய்து கொண்டிருக்கிறார்கள். இதை எஸ்டிமேட் எடுத்துக்கொள்ளவேண்டுமென்று அவர்களே, மத்திய சர்க்காரே, அக்கறை காட்டிவருகிறார்கள் என்பதை கனம் அங்கத்தினர் அவர்களுக்கு சொல்லிக்கொள்கிறேன். அடுத்தபடியாக கனம் அங்கத்தினர் கே. பி. எஸ். மணி அவர்கள் பேசும்பொழுது சில ரோடுகளில் தார்களை போட்டுவிட்டு அதன் பின்னால் கற்களை போட்டார்கள் என்றும் இரண்டையும் சேர்த்து போடவில்லை என்றும் சொன்னார்கள். அந்த மாதிரி சில இடங்க ளில் குற்றம் குறைகள் ஏற்படுகின்றன. சில இடங்களில் பாலங்கள் செப்பனிடுகின்ற முறைகளிலும் சில குற்றம் குறைகள் இருக்கின்றன. இவைகளைப் பற்றி அங்கத்தினர்கள் பேசுவதை நான் ஆட்சேபிக்கவில்லை. அங்கத்தினர்களுடைய குறைகளை சொல்லவேண்டியதுதான். இம்மாதிரிப் பட்ட குறைகள் எங்கே நடக்கின்றன என்று குறிப்பாக என்னை பார்க்கும் பொழுதோ அல்லது கடிதம் மூலமாகவோ தெரிவித்தால் அதற்கு தக்க நடவடிக்கை எடுத்து அதில் என்ன செய்யவேண்டுமோ அதை செய்து கொள்ளுவதற்கு அதிக அக்கறை காட்டுவேன். அதற்கான எல்லா உதவி களையும் செய்வேன் என்பதை சொல்லிக்கொள்கிறேன். மக்களின் பணத்தை கண்டிராக்டர்களும் இன்சினியர்களும் ஏமாற்றி எடுத்துக் கொள்ளலாம், அவர்கள் மக்களுடைய பணத்தில் மண்ணை போட்டுவிடலாம் என்ற எண்ணம் உடையவர்களுக்கு இந்த அரசாங்கம் ஒருக்காலும் இடம் கொடுக்காது என்பதை இந்த சபையில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். "அன்னமிட்ட வீட் டிலே கன்னக்கோல் வைப்பது" போன்று இவர்களுக்கு சம்பளத்தையும் கொடுத்து எல்லா உதவிகளும் செய்து கொடுத்திருக்கிற இந்த அரசாங்கத் திற்கு எதிராக மக்களுடைய பணத்தை கொள்ளையடிக்கவேண்டுமென்று நினைத்தால் அதற்கு அரசாங்கம் இடம் கொடுக்காது, கொடுக்காததோடு மட்டுமல்ல அம்மாதிரிப்பட்டவர்களின் மீது தக்க நடவடிக்கையும் எடுக்கப் படும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். டெண்டர்கள் கொடுக் கும் விஷயத்தில், டெண்டர்கள் வரவழைக்கும்போது குறைந்த டெண்டர்களுக்குத்தான் கான்டிராக்ட் கொடுத்து வருவது வழக்கமாக இருந்துவருகிறது. ஆனால் இதில் குறைந்த டெண்டர் போட்டு வேலையை ஆரம்பித்துவிட்டு பின்னால் பணம் இல்லை என்று சொல்ல, வேலையை நடத்து

12-50 p.m.

வதற்கு காலம் கடத்தி அரசாங்கத்தை ஏமாற்றலாம் என்று நினைத்தால் அவர்களுக்கு அரசாங்கத்தில் இடம் கிடையாது. அவர்கள் நல்ல முறையில் அரசாங்கத்திற்கு தாங்கள் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி கொடுத்தால்தான் கண்டுராக்டர்கள் மட்டும் அல்ல, வருங்கால கண்ட்ராக்டர்களும் நல்ல பெயர் எடுக்க முடியும். இதற்கு மாருக இருந்தால் அவர்களிடத்தில் அரசாங்கமோ அல்லது பொதுமக்களோ அனுதாபம் காட்டமாட்டார்கள் என்று நம்புகிறேன். கண்ட்ராக்டர்கள் செய்யும் வேலைகளில் ஒரு சில இடங்களில் குறைகள் இருக்கலாம், இல்லை என்று நான் சொல்லவில்லை, இவ்விதம் ஏதாவது குறைகள் இருந்தால் அவைகளை கனம் அங்கத்தினர் அவர்கள் என்னுடைய கவனத்திற்கு கொண்டு வரவேண்டுகிறேன். அப்படி கொண்டுவந்தால் அதற்கு தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பது தான் அரசாங்கத்தின் கொள்கை. என்னைப் பொறுத்தமட்டில் பி. டப்ளியு. டி. ஹைவேஸ் இவற்றிலுள்ள இன்சினீயர்களை சேர்த்து ஜில்லா வாரியாக எம். எல். ஏ.க்களையும் கூட்டி வைத்து அதில் அங்குள்ள குறைகளை எடுத்துச் சொன்னால் அவ்வப்போது அங்கங்கு கவனிக்கவேண்டிய வேலைகளைப்பற்றி, நியாயமான குறைகளாக இருந்தால் அவைகளை செய்யும்படியாக அங்கேயே அதிகாரிகளுக்கு சொல்ல முடியும். இவ்விதம் ஆறு அல்லது மூன்று மாதங்களுக்கு ஒரு தடவை இம்மாதிரி கூடி பேசினல் நிச்சயமாக இம்மாதிரிப்பட்ட குறைகள் நீங்கும் என்பது என் அபிப்பிராயம்.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : இந்த கூட்டங்களை அந்தந்த பிராந்தியங்களில் கூட்டப்படுமா அல்லது சென்னையில் வைத்து கூட்டுவதற்கு அங்கத்தினர்களை வரவழைப்பார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : அந்தந்த பிராந்தியங்களுக்கு போகும் போது சந்தர்ப்பம் கிடைக்கும்பொழுது இவ்விதம் கூடி பேசலாம். இதற்காக ஸ்திரமாக நடவடிக்கைகளை செய்ய முடியாது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது அரசாங்கமானது நேஷனல் ஹைவேஸ் ரோடுகளையும், ஜில்லா போர்டுகளிலுள்ள பெரிய ரோடுகளையும் எடுத்துக்கொண்டு வருகிறது. ஜில்லா போர்டு சம்பந்தமான வெள்ளை அறிக்கை பரிசீலனையில் இருக்கிறது. அந்த வெள்ளை அறிக்கையின்படி பஞ்சாயத்து யூனியன் நல்ல முறையில் மக்களுக்கு வேண்டிய காரியங்களை செய்யும் என்று நம்புகிறேன். கடைசியாக, கனம் எதிர்கட்சித் தலைவர் அவர்கள் சொன்ஞர்கள், ரோட்டிலுள்ள மரங்களைப்பற்றி சரியாக கவனம் செலுத்தப்படவில்லை என்று. அது ரொம்பவும் வருத்தப்படவேண்டிய விஷயம்தான். நாம் அதிக அக்கறை காட்டி அந்த இடங்களில் இருக்கின்ற மரங்களை பாதுகாப்பதற்காக மேஸ்திரிகளையும் இன்ஸ்பெக்டர்களையும் வைத்திருக்கிரேம். அவ்விதம் கஷ்டப்பட்டு வளர்க்கப்பட்டு வரும் மரங்களை, ஒரு சில பேர்கள் கூடி அதை மோசம் செய்து விடுகிருர்கள். நான் சமீபத்தில் திருச்சிராப்பள்ளி ஜில்லாவுக்கு போகும்பொழுது பார்த்தேன். சமயபுரத்தில் போகும்போது பார்த்தேன், சுமார் முக்கால் மைல் தூரத்திற்கு மரங்கள் எல்லாம் மொட்டையாக நின்றிருந்தது. அம்மன் இருக்கிற ஊர் என்ற பயபக்தி கூட இல்லாமல் மரங்கள் எல்லாம் மொட்டையாக விடப்பட்டிருந்தன. அதைப்பற்றி விசாரித்து அதற்கு காரணமாய் இருந்த இன்ஸ்பெக்டரை நீக்கிவிட்டேன். இவ்விதம் யாராவது இதற்கு கெடுதல் செய்கிருர்களா என்பதை கவனித்து வருவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். இதற்கு எல்லா அங்கத்தினர்களும் ஒத்துழைக்கவேண்டும் என்று இச்சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன் . . .

**Sri A. GOVINDASAMY** : சமயபுரத்தில் வெட்டப்பட்டிருந்த மரங்கள் எல்லாம் வேப்ப மரமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : வேப்பமரமல்ல, எல்லாம் புளியமரங்கள் தான். விறகுக்குத்தான் அதை உபயோகப்படுத்தியிருப்பார்கள். இதைப் பற்றி அரசாங்கம் யோசித்துக்கொண்டிருக்கிறது. இந்த மரங்களை பாது காக்கும் விஷயத்தில் அங்கேயுள்ள பஞ்சாயத் போர்டு வசம் கண்காணிப்புக்காக கவனிக்கச் சொல்வோமா என்பதையும் பஞ்சாயத்து எல்லைகளுக்கு அப்பால்

29th March 1958] [Sri P. Kakkan]

இருக்கும் இடங்களில் அந்த இடத்தின் பக்கத்தில் இருக்கும் நிலச்சுவான் தார்களிடத்தில் லீஸ்க்கு விடலாமா என்பதையும் யோசித்துக்கொண்டிருக்கிறோம். இவற்றில் சீக்கிரமாக அரசாங்கம் ஒரு முடிவுக்கு வரும் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

கனம் முத்துசாமி நாயகர் அவர்கள் தங்களுடைய தொகுதியிலுள்ள சில ரோடுகளைப்பற்றிச் சொன்னார்கள். உண்மையிலேயே அதையெல்லாம் கவனிக்கவேண்டியது தான். அன்றைக்கு ஒரு ரோட்டைப்பற்றிச் சொன்னார்கள். உடனடியாக கவனிக்க ஏற்பாடு செய்திருக்கிறேன். அதே மாதிரி ரோடு மோசமாகிப் போய் தார் போட்டவுடனே, மேடாக ஆகும் தன்மையில் இருக்கும்படி செய்யும் கண்டிராக்டர்களிடம் வேலையைக் கொடுக்கக் கூடாது என்பதுதான் அரசாங்கத்தின் எண்ணம். உண்மையிலேயே குற்றம் குறைகள் இருந்தால் தக்க பரிகாரம் செய்யப்படும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். 1-00 p.m.

ஸ்ரீமான் மாதா கவுடர் அவர்கள் ஊட்டியிலுள்ள சில ரோடுகளைப் பற்றிச் சொன்னார்கள். அது இப்போது ஜில்லா போர்டு ரோடாக இருக்கிறது. பின்னர் அரசாங்கம் எடுத்துக் கொண்ட பிறகு கவனிக்கப்படும். இருந்தாலும் அவர்கள் சொன்ன கோரிக்கைகளில் எவைகளை அரசாங்கம் செய்ய முடியுமோ அவைகள் கவனிக்கப்படும் என்று தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன்.

கனம் பெரியவால குருவா ரெட்டியார் பேசும்போது, கண்ட்ராக்டர்கள் மிச்சம் பிடிக்கிறார்கள் என்று சொன்னார்கள். அந்த இடம், பெயர், எல்லாவற்றையும் விவரமாக எழுதிக்கொடுத்தால் அதைப் பற்றி விசாரித்து நல்லபடியாக நடவடிக்கை எடுக்கலாம் என்று நினைக்கிறேன்.

ஸ்ரீமான் பழனிசாமி அவர்கள், ஸ்ரீமதி சாவித்திரி ஷண்முகம் அவர்கள், ஸ்ரீமான் அர்த்தநாரீஸ்வர கௌண்டர் அவர்கள் எல்லாம் அவரவர்களின் தொகுதியைப் பற்றி சொன்னார்கள். அதையெல்லாம் கவனிக்கிறேன்.

நகரத்தில் கற்களைத் தெருக்களில் கொட்டி விட்டுப் போவதால் போக்கு வரத்துக்கு பாதகமாகிறது என்று சொன்னார்கள். அதையும் கவனித்து டிவிஷனல் என்ஜினீயர் அவர்களுக்குச் சொல்லி ஏற்பாடு செய்கிறேன்.

கனம் மாணிக்கசுந்தரம் அவர்கள், அங்கு இருக்கக்கூடிய ஆபீசர்களுக்கு சொந்தக் கட்டிடங்கள் கிடையாது, எல்லாம் வாடகைக் கட்டிடங்கள் என்று சொன்னார்கள். இப்போது தான் எங்கெல்லாம் கட்டடம் கட்ட முடியுமோ அங்கெல்லாம் கட்டுகிறோம். எல்லாவற்றையும் பார்த்து எவ்வளவு துரிதமாக எந்தெந்த சமயத்தில் எவைகளை செய்ய முடியுமோ அவைகளைச் செய்கிறேன்.

ஸ்ரீமான் மருதாசலம் அவர்கள் சிறுவாணி தண்ணீரைப் பற்றிச் சொன்னார்கள். இப்போது நீர்ப்பாசனத் திட்டத்தைப்பற்றி பரிசீலனை செய்யாவிட்டாலும் கூட, இந்த சிறுவாணி தண்ணீர் சம்மந்தமாக இதற்கு முன்பே நகர சபைத் தலைவர் அவர்களும், அங்கத்தினர்களும் பேசியிருக்கிறார்கள். அது சம்பந்தமாக மத்திய சர்க்காரோடு கலந்து கொண்டு உதவி செய்ய அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறது. இது விஷயத்திலே அரசாங்கம் சும்மாயிருக்கவில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

ஸ்ரீமான் கோதண்டராமன் அவர்கள் சௌராஷ்டிராவோடு ஒப்பிட்டுக் காட்டினார்கள். உண்மையிலேயே இப்போது நம் மாகாணத்தில் இருக்கிற போக்கு வரத்து ரஸ்தாக்களையும் பல வருஷங்களுக்கு முன்பிருந்த ரஸ்தாக்களையும் பார்த்தால் மலைக்கும் மடுவிற்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது. போக்கு வரத்து ஜாஸ்தி. லாரி எவ்வளவு போகிறது. 7,000 லாரிக்கும் அதிகமாகப் போகிறது என்று அந்த இலாகா அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள். அந்த ரஸ்தாக்களை நல்ல முறையில் வைக்க ஏற்பாடு செய்து வருகிறோம். மதராஸ் கன்யாகுமரி ரோட்டை பற்றி சொன்னார்கள். அதற்கு ரோடுதான் காரணம் என்று சொல்ல முடியாது. மூன்று மணிக்கு, 2 மணிக்கு தூங்கிக் கொண்டு போவதால் இந்த மாதிரி வந்து விடுகிறது. நானே இரண்டு தடவை பார்த்திருக்கிறேன். சைடிலே மண்கள் வழுக்கி விழாதோ என்றுகூடக் கேட்டேன். சைடிலே கூட மண்கள் விழுந்தால் லாரி கவிழ்ந்து விடக்கூடாது என்று கற்களை இரண்டு பக்கமும் போட்டி

[Sri P. Kakkan] [29th March 1958

ருக்கிறோம். ரோட்டையும் அகலப்படுத்த வேண்டிய இடத்தில் அகலப் படுத்தியிருக்கிறது. விழுப்புரம், திண்டிவனம், திருச்சி போனால் நன்றாகக் கண்ணாரக்காணலாம் என்று சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

கனம் சோமசுந்திரம் அவர்கள் சில நல்ல ஆலோசனைகள் சொன்னார் கள். அதைப்பற்றி கவனிக்கிறேன்.

செங்குரிச்சி ஜமீன்தார் அவர்கள் வட மதுரையில் உள்ள சில குறை பாடுகளைப் பற்றிச் சொன்னார்கள். நத்தம்-கோவில்பட்டி ரோடு ஏற்கனவே போட்டு தண்ணீரினால் அடித்துக்கொண்டு போகப்பட்டிருக்கிறது. அதை நானும் கவனித்திருக்கிறேன். மறுபடியும் அந்த பாலத்தை அதிக சீக்கிர மாக அமைக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கிறேன். அதோடு நத்தம்-செந்துரை-செங்குரிச்சி-மணக்குடி ரோட்டைப் பொறுத்த வரையில் நத்தம்-செங்குரிச்சி ரோடு போட வேண்டியதுதான். அதற்கு முக்கியத் துவம் கொடுக்க ஏற்பாடு செய்கிறேன். ஏனென்றால் அது ஏழைகள் இருக்கும் இடம். மலைப் பிரதேசம். ஆறுகள் வரக்கூடிய நிலை இருக்கி றது. அது பல வருஷங்களாகத் தெரியும். அது சம்பந்தமாக அரசாங்கம் கவனிக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

கனம் ராமசுப்பு அவர்கள் தேச பக்தர்கள் பிறந்த ஊர்களைப் பற்றிச் சொன்னார்கள். வ.உ.சி. பிறந்த கிராமத்திற்கும், கட்டபொம்மன் பிறந்த பாஞ்சாலங்குரிச்சி என்ற இடத்திற்கும் 3 மைல் தான் இருக்கிறது, அதற்கு ரோடு போடவேண்டுமென்று சொன்னார்கள். அது சம்மந்தமாக ஜில்லா போர்டு தலைவராக இருந்தபோதே எழுதியிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். மூன்று மைல் என்று சொன்னால் அதுவும் கவனிக்கப்படும்என்று அவர் களுக்கு சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இவ்வளவு சரித்திரப் பிரசித்தி பெற்ற இடங்களான இரண்டு கிராமங்களுக்கும் இடையே ரோடு ஏற்படுத்துவது எல்லோருக்குமே இந்த சபையிலே மகிழ்ச்சியைக் கொடுக்கும். யாரும் எதிர்க்கமாட்டார்கள். அது சம்பந்தமாக கவனிக்க ஏற்பாடு செய்கி றேன் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

பைகாரா அணை விஸ்தரிப்பு பற்றி சொன்னார்கள். அது சம்பந்த மாகவும் கவனம் செலுத்துகிறேன் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

கனம் உதவி சபாநாயகர் அவர்களே, சென்னை அரசாங்கத்தின் ஹைவேஸ் டிபார்டுமென்டும், பி.டப்ளியு. டிபார்டுமெண்டும் செய்கிற வேலைகளுக்கு நாம் மட்டுமல்ல இந்த சபையும் அதிக ஆக்கமும், ஊக்கமும் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேன்மேலும் உற்சாகத் தோடு வேலைசெய்து இந்த மாகாணத்திற்கு புகழும் பெருமையும் தேடிக் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். எல்லா அங்கத்தினர்கள் சொன்னதற்கும் பதில் சொல்லாவிட்டாலும், அங்கத்தினர்கள் பேசிய கருத்துக்களை மனதில் கொண்டு இந்த அரசாங்கம் வேலைகளைச் செய்யும் என்று சொல்லிக்கொண்டு இந்த இரண்டு மான்யங்களையும் அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கனம் அங்கத்தினர் ஷண்முகம் அவர்களை வெட்டுப் பிரேரணைகளை வாபீஸ் வாங்கிக்கொள்ள வேண்டு மென்றும் கேட்டுக் கொள்கிறேன்.

DEPUTY SPEAKER: Is the hon. Member Sri P. U. Shanmugam withdrawing his cut motion?

SRI P. U. SHANMUGAM: I am pressing it, Sir.

DEPUTY SPEAKER: The question is:

'That the allotment of Rs. 1,04,35,700 under Demand XXVI —Civil Works—Grants-in-Aid be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

29th March 1957]

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,04,35,700 under Demand XXVI—Civil Works—Grants-in-Aid.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,33,49,800 under Demand XXV—Civil Works—Establishment and Tools and Plant'.

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri P. U. Shanmugam withdrawing his cut motion?

SRI P. U. SHANMUGAM : I am pressing my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 3,73,79,400 under Demand XXXIX—Capital Outlay on Civil Works—be reduced by Rs. 100.'

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is :

'That the Government be granted a sum not exceeding Rs. 3,73,79,400 under Demand XXXIX—Capital Outlay on Civil Works.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 31st March 1958. 1-10 p.m.

The House then adjourned.

APEENDIX I.

[Vide answer to starred question No. 452 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 29th March 1958 page 209 supra.]

*Subject.*—Regarding decisions reached at the Conference of the Officials of the Food Department in regard to the Food Situation **and** `Steps taken to implement them.

(*a*) Decisions reached at the Conference of the Officials of Food Department held in December 1957, in regard to food situation.

*A*.—In a Conference held on the 3rd December 1957, the food situation was discussed and the following suggestions were considered in the course of the discussion, to augment food production.

*A. Food Production.*

(1) To accelerate the minor irrigation works;

(2) to supply adequate quantities of fertilizers, manures, improved seeds, pesticides and insecticides;

(3) to liberalise loan rules for the purchase of seeds; fertilizers, etc.;

(4) to encourage improved agricultural practices such as Japanese method of cultivation;

(5) to fix targets in Community Development and National Extension Service areas and to reach them.

*B. Foodgrains Distribution.*

(6) To encourage production of short-term crops as pulses, potatoes, etc.;

(7) to reduce rice consumption by popularising non-rice dishes in hotels, restaurants, Government institutions, etc.;

(*b*) Steps taken to implement the decisions.

*A*.—These suggestions were commended to the Government Departments concerned for action. The Departments concerned have taken action as detailed below :—

(1) *Minor irrigation.*—The Government of India have since sanctioned a loan of Rs. 7·5 lakhs for financing the capital cost of the scheme for the purchase and distribution of oil engines and electric motor pumpsets. Continuance of the scheme during 1957–58 will be sanctioned shortly by the State Government. Regarding private irrigation works, the report called for from the Board of Revenue (Food Production) is awaited.

(2) *Fertilizers, manures, improved seeds, insecticides and pesticides.*—The Commissioner of Food Production reported that only 50 per cent of the current year's quota of ammonium sulphate

has been supplied by the Government of India. Action is being pursued to get the balance quantity also expeditiously. The Director of Agriculture has asked to improve the supply position of improved seeds, green manures and other organic manures. As regards pesticides and insecticides suitable action is being taken in consultation with the Director of Agriculture.

(3) *Loans.*—The Government have already issued orders liberalising loans rules extending the concessions allowed to ryots to obtain loans on the security of joint patta lands in the case of ryotwari and surveyed areas to unsurveyed lands also. It has also been ordered that loans should be granted to lessees and waramdars in unsurveyed areas on furnishing sufficient collateral security. But the above concessions will not apply to transferred areas from the former Travancore-Cochin State till the Land Improvement Loans Act, 1833, and Agriculturists Loans Act are extended to those areas.

(4) *Improved Agricultural Practices.*—Action is being taken in consultation with the Director of Agriculture.

(5) *Higher targets of production.*—Instructions have been issued to fix up definite targets for each group of villages in charge verandas and steps to these buildings and the pathways leading of an Extension Officer, not only in respect of physical resources to be created such as number of irrigation works to be constructed but also in respect of acreage to be benefitted by other improved agricultural practices and techniques. Moreover, separate targets have been fixed for each group of villages in charge of a Gramasevak in respect of all items and the Block Development Officers and District Agricultural Officers concerned have been asked to review critically the work of the Extension workers with reference to the targets fixed and achievements obtained.

(6) *Short-term crops.*—Action is being taken in consultation with the Director of Agriculture.

(7) *Reduction of consumption of rice.*—A Conference of the Heads of Departments supplying food in Government Institutions was held on the 6th December 1957 to discuss the food situation. The necessity for reducing the consumption of rice in such institutions by substituting wheat was emphasised in the Conference. As a result of the above deliberations, orders have already been issued to reduce rice portion of diet by one ounce to the labouring and non-labouring convicts of the 'C' class prisoners confined in Central Jails, Salem and Cuddalore. Issue of 10 oz. of rice and 10 oz. of wheat per head per diem instead of 20 oz. of rice per head per diem to the inmates of the After Care Home for Males, Madras, as an experimental measure for a period of three months has also been ordered.

Another Conference was also held by the Minister for Home with certain representatives of the Hotel Proprietors' Association and the Catering Department of the Southern Railways. The

[29th March 1958

necessity for reducing the consumption of rice to meet the present shortage of rice was emphasised in the Conference. The Hotel Proprietors and the Catering Establishments were therefore requested to try all avenues of reducing consumption of rice by the people, by popularising wheat dishes and reducing the rice content of the food, etc.

The Public have also been requested through a Press Note to co-operate with the Government in the matter of increasing food production by cultivating paddy, millets, and other food crops like potatoes, sweet-potatoes, bananas and vegetables to the maximum extent possible and by increasing production of more of animal products like eggs, milk and fish. The public have also been advised to change food habits as long-term measures both from nutritional and economic point of view by including in their diet more of wheat, ragi, vegetables, fruits, etc.

## APPENDIX II.

[Vide answer to starred question No. 453 asked by Sri S. Lazar at the meeting of the Legislative Assembly held on 29th March 1958, page 209 supra.]

### FOOD PRODUCTION IN THE STATE.

The price of paddy and rice in this State began to rise from March 1956. In order to arrest the above upward trend in price, a scheme for selling rice to consumers through fair price shops at controlled rates was introduced by the Government. Under this scheme, rice was supplied by the Government of India at Rs. 16·00 per maund ex-Railway stations at important centres, and the fair price shops sold the rice to the consumers at prices fixed by the Collector. In all, about 2,000 fair price shops were functioning in this State till about the beginning of February 1957. Early in February 1957, the Government of India anticipated a downward trend in prices, following the samba harvest and therefore considered that there was no need to maintain the fair price shops for about four to five months and that the stocks available could, with advantage, be conserved for use during the lean months. The prices, however, did not go down as expected and the fair price shops had to be continued particularly in the large non-agricultural areas like Madras City, Coimbatore, etc. The offtake from the fair price shops had been steady during December 1956 and January 1957. There was reduced offtake during the months of February to May 1957 which was due to availability of stocks just after the main harvest. The offtake continued to increase from June 1957. Till 1st October 1957, two Madras measures of rice per adult per day in Madras City and other urban areas and one Madras measure of rice in other places were being issued through the fair price shops. As the supply position of rice became difficult, the Government of India expressed inability to give rice for issue through fair price

29th March 1958]

shops. On representation by this Government, they, however, agreed to give 4,000 tons per month up to 28th February 1958 as a loan to be replaced after the main harvest in the State in February. The number of fair price shops was, therefore, reduced by 50 per cent on 1st October 1957. Subsequently, with a view to popularize wheat, the reduction in the number of fair price shops was restored, but the quantity of rice issued through these shops was reduced by half so that the total requirements remained the same. Five Madras measures of wheat per head per day are also being issued to those who require it. There were during February 1958, 799 fair price shops and it was ordered to stop the issue of rice through these shops by the end of February 1958 as supplies of rice were not expected to be received from the Government of India after that date. The price of rice in the open market in Tanjore in February 1958 was reported to be Rs. 18·56 per maund of kuruvai rice and Rs. 20 per maund of samba rice.

*Clause* (i)—*Expected yield of foodgrains during the year* 1958.—Estimates framed for the fasli year 1957–58 are furnished below :—

| *Grain.* | *Production in tons (in terms of cleaned grain).* |
|---|---|
| Rice ... ... ... ... ... | 3,157,000 |
| Cholam ... ... ... ... ... | 408,000 |
| Cumbu ... ... ... ... ... | 203,000 |
| Ragi ... ... ... ... ... | 324,000 |
| Korra ... ... ... ... ... | 18,000 |
| Varagu ... ... ... ... ... | 179,000 |
| Samai ... ... ... ... ... | 54,000 |
| Maize ... ... ... ... ... | 3,000 |
| Wheat ... ... ... ... ... | 500 |
| Other cereals ... ... ... ... | 23,000 |
| Total cereals ... | 4,370,000 |

The above figures are only provisional as they are based only on partial data received so far.

*Clause* (ii)—*Probable requirements of foodgrains for the State during* 1958 *separately in respect of rice, wheat and millets.*—The probable requirements of rice and millets for consumption and for seed purposes have been estimated as follows :—

| | *Requirements for consumption at 16 oz per adult per diem.* | *Seed requirements.* | *Total requirements for Consumption and seed.* |
|---|---|---|---|
| | TONS. | TONS. | TONS. |
| Rice .. .. .. | 3,145,000 | 109,000 | 3,254,000 |
| Millets .. .. | 1,395,000 | 22,000 | 1,417,000 |
| Wheat .. .. | 52,000 | ... | 52,000 |

[29th March 1958

Details as to how the figures have been arrived at are given below :—

### I. *Estimates of population in* 1958 (1957–58).

| | |
|---|---|
| (i) Total estimated population in Madras State in 1958 (1957–58) ... | 33,152,000 |
| (ii) Estimate population in terms of adults ... ... ... ... | 27,863,000 |

### II. *Estimates of rice and millet-eating population. in* 1958 (1957–58).

| | |
|---|---|
| (i) Rice-eating population in terms of adults calculated at 69 per cent of the population ... ... | 19,300,000 (A) |
| (ii) Millet-eating population in terms of adults, calculated at 31 per cent of the population ... ... ... | 8,563,000 (B) |

### III. *Requirements of rice and millets in* 1958 (1957–58).

(*a*) Rice—

| | TONS. |
|---|---|
| (i) Requirements at the rate of 16 oz. per adult per diem for the rice-eating population in terms of adults, viz., 19,300,000 (A) above ... ... ... ... | 3,145,000 |
| (ii) Requirements for seed at the rate of 44 lb. (in terms of rice) per acre for the estimated area of 5,552,000 acres (to the nearest thousand tons) ... ... ... | 109,000 |
| (iii) Total requirements of rice for consumption and seed ... ... | 3,254,000 |

(*b*) Millets—

| | |
|---|---|
| (i) Requirements at the rate of 16 oz. per adult per diem for the millet-eating population in terms of adults, viz., 8,563,000 (B) above under item II ... ... ... | 1,395,000 |
| (ii) Seed requirements at the rate of 9 lb. (in terms of cleaned grain) per acre for 5,570,000 acres (to the nearest thousand tons) ... | 22,000 |

29th March 1958]

| | | TONS. |
|---|---|---|
| (iii) Total requirements of millets for consumption and seed | ... | 1,417,000 |
| (c) Wheat | ... ... ... ... | 52,000 |

*Clause* (iii)—*Supplies expected from the Centre.*—The Government of India agreed to supply 4,000 tons of rice per mensem to fair price shops up to the end of February 1958 on a loan basis. No other supply is expected from the centre in 1958. So far as wheat is concerned, about 55,275 tons were supplied to this State by the Government of India during 1957. About the same quantity, viz., 55,000 tons may be expected to be supplied during 1958 also for sale to consumers through fair price shops.



# Appendix III.

[Vide answer to starred question No. 455 asked by Sri T. S. Ramaswamy Pillai at the meeting of the Legislative Assembly held on 29th March 1958, page 213 supra.]

## I. PRODUCTION OF FOODGRAINS IN TERMS OF CLEANED GRAIN IN MADRAS STATE DURING THE YEAR 1955-1956.

| *Districts.* | *Rice.* | *Jowar (Cholam).* | *Bajra (Cumbu).* | *Maize.* | *Ragi.* | *Small millets* and other unspecified cereals.* | *Wheat.* | *Barley.* | *Total Cereals* |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) |
| | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. |
| Chingleput .. .. | 280,730 | 2,060 | 1,010 | 350 | 20,330 | 5,720 | .. | .. | 310,200 |
| South Arcot .. .. | 464,570 | 19,090 | 16,900 | 40 | 24,570 | 42,670 | .. | .. | 567,840 |
| North Arcot .. .. | 402,270 | 16,280 | 9,690 | 200 | 32,480 | 18,360 | .. | .. | 479,280 |
| Salem .. .. .. | 159,430 | 88,290 | 35,180 | 270 | 102,910 | 32,000 | 120 | .. | 418,200 |
| Coimbatore .. .. | 86,460 | 113,630 | 39,390 | 100 | 42,050 | 14,500 | 30 | .. | 296,160 |
| Tiruchirappalli .. .. | 278,950 | 45,040 | 26,500 | 830 | 13,610 | 56,110 | .. | .. | 421,040 |
| Taujore .. .. .. | 612,350 | 1,400 | 620 | 1,630 | 3,780 | 7,860 | .. | .. | 627,640 |
| Madurai .. .. .. | 217,230 | 92,180 | 13,680 | 70 | 19,200 | 28,750 | 190 | .. | 371,300 |
| Ramanathapuram .. | 112,820 | 9,830 | 22,420 | 100 | 25,680 | 35,190 | .. | .. | 206,040 |
| Tirunelveli .. .. | 240,580 | 18,060 | 21,530 | 10 | 11,070 | 11,480 | .. | .. | 302,730 |
| The Nilgiris .. .. | 3,180 | .. | .. | 10 | 980 | 700 | 160 | 180 | 5,210 |
| Kanyakumari .. .. | 96,000 | 320 | .. | .. | .. | 100 | .. | .. | 96,420 |
| State .. | 2,954,570 | 406,180 | 186,920 | 3,610 | 296,660 | 253,440 | 500 | 180 | 4,102,060 |

* Include Korra, Varagu, Samai and other unspecified cereals.

## II. PRODUCTION OF FOODGRAINS IN TERMS OF CLEANED GRAIN IN MADRAS STATE DURING THE YEAR 1956–1957.

| *Districts.* | *Rice.* | *Jowar (Cholam).* | *Bajra (Cumbu).* | *Maize.* | *Ragi.* | *Small millets* and other unspecified cereals.* | *Wheat.* | *Barley.* | *Total Cereals.* |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) |
| | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. | TONS. |
| Chingleput .. .. | 309,000 | 1,800 | 1,100 | 100 | 21,400 | 6,600 | .. | .. | 339,900 |
| South Arcot .. .. | 379,000 | 18,300 | 16,200 | 200 | 26,100 | 44,000 | .. | .. | 483,700 |
| North Arcot .. .. | 388,000 | 15,900 | 9,800 | 300 | 33,700 | 19,100 | .. | .. | 466,700 |
| Salem .. .. .. | 208,000 | 87,200 | 35,400 | 100 | 103,700 | 31,090 | 110 | .. | 465,800 |
| Coimbatore .. .. | 97,000 | 111,600 | 44,600 | 900 | 43,800 | 15,560 | 40 | .. | 312,700 |
| Tiruchirapalli .. .. | 338,000 | 44,000 | 27,800 | 1,700 | 14,500 | 54,700 | .. | .. | 479,900 |
| Tanjore .. .. .. | 669,000 | 1,500 | 700 | 100 | 4,300 | 7,900 | .. | .. | 685,100 |
| Madurai .. .. .. | 222,000 | 90,200 | 13,600 | .. | 18,200 | 30,060 | 240 | .. | 374,400 |
| Ramanathapuram .. | 204,000 | 10,000 | 28,800 | .. | 39,800 | 51,200 | .. | .. | 333,800 |
| Tirunelveli .. .. | 225,000 | 18,700 | 20,400 | .. | 10,300 | 11,800 | .. | .. | 286,200 |
| The Nilgiris .. .. | 5,000 | .. | .. | .. | 1,000 | 850 | 150 | 200 | 7,200 |
| Kanyakumari .. .. | 59,000 | 300 | .. | .. | .. | 100 | .. | .. | 59,400 |
| | 3,103,000 | 399,500 | 198,400 | 3,400 | 316,800 | 272,960 | 540 | 200 | 4,294,800 |

* Include Korra, Varagu, Samai and other unspecified cereals.

